**செய்தி** : பெரிய கண்ணனூரில் திருமேற்கோயில் விண்ணகர் எம்பெருமான் கோயில் ஸ்ரீ விமானம் திருமண்டபம் ஆகியவை கட்டப்பட்டன. இக்கோயிலுக்குத் திருநாமத்துக் காணியாக நிலம் கொடுக்கப் பட்டது. அமுதாண்டானான அழகியான் உலகனான வளவரையன், இவர் தம்பி உடையானான பின்பழகிய பெருமாள், ஆகியோர் குறிப்பிடப்படுகின்றனர். கல்வெட்டு தரும் செய்தியிலிருந்து இக்கல்வெட்டைத் தாங்கி நிற்கும் கற்கள் பெரிய கண்ணனூரிலிருந்த ஒரு பெருமாள் கோயிலைச் சேர்ந்தவை என்றும் அக்கோயில் கற்களைக் கொண்டு வந்து செட்டிக்குளம் ஈஸ்வரன் கோயில் பிரகாரச் சுவர்கள் கட்டுவதற்குப் பயன்படுத்தப்பட்டுள்ளது என அறிகிறோம். பெரியகண்ணனூர் என்பது தற்போது டி.கண்ணனூர் என்ற பெயரில் துறையூர் - சிங்களாந்தபுரம் வழியில் அமைந்துள்ளது.

**1ஆவது துண்டு**

1. ணியாக விட்டனிலம் கால் இன்(னிலம்)
2. காலும் திருனாமத்துக் காணியா
3. ன இப்பெரிய கண்ணனூர் ஊரு
4. னி அழகியான் உலகனான வள
5. னேன் இப்படிக்கு இவை வள

**2ஆவது துண்டு**

1. ருமானான பின்பழகிய பெருமான்
2. த்தான் இவ்வூர் காணியா
3. யானான பின்பழகிய பெருமான் தாஸ

**3ஆவது துண்டு**

1. சி குலசேகர தேவற்கு
2. னூர் திருமேற்கோ
3. னாயநாற்கு சீவமான
4. அமுதாண்டானான அழ

**4ஆவது துண்டு**

1. சித்திரை மாதம் இரு
2. விண்ணகர எம்பெ
3. ருமானான பின்பழகிய பெருமாள்
4. ண்டபமும் செய்வி
5. த்தான் இவ்வூர் காணியா
6. யும் இவன் தம்பி உடை
7. ட யானான பின்பழகிய பெருமாள் தாஸ

5வது துண்டு

1. ண்ணனூரில் என்னோபாதியான
2. லோ பாதியில் விட்ட னிலமாவது
3. வ்வூர் கரைப் புன்செய் நிலத்து இ
4. நாயனார் தீர்த்தப்புறத்துத் திருத்தோ
5. ப்புக்குக் கிழக்குத் திருனாமத்துக்கா

13 : 26

**இடம்** : வடக்குச் சுவர் துண்டுக் கல்வெட்டுக்கள் (கஆ : 253/1930-31).

**காலம்** : முதலாம் இராஜேந்திரன்.

**செய்தி** : திருமேற்கோயில் இராஜேந்திர சோழ விண்ணகர அழகிய மணவாளருக்குத் திருச்சென்னடைக்கு இறையிலி முற்றூட்டாக நிலம் கொடுக்கப்பட்டது. அந்நிலத்தின் எல்லைகளில் ஒன்றாக குண்டாறு என்ற ஆறு குறிப்பிடப்படுகிறது. மேலும் அமரேந்திர ஈஸ்வரமுடைய மகாதேவர்க்கும் இக்கோயில் தேவரடியார் பெண்டுகளுக்கும் நிலம் கொடுக்கப்பட்டதாகத் தெரிகிறது. சிங்களாந்தகபுரத்தில் உள்ள சிவன்கோயில் அமரேந்திர ஈஸ்வரம் என அழைக்கப்பட்டதை அவ்வூர்க்கல்வெட்டுக்களால் அறிகிறோம்.

1. ....................
2. ண்ணாற்றுத்
3. தென் வரம்பு
4. ஆ சறுதியாக
5. வும் கீழ்பாற் ெ
6. கல்லை ஏரி க
7. ரைக்கு மேற்கும்
8. மேல் பாற் கெ
9. ல்லை குண்ட
10. ாற்றுக்குக் கிழ
11. க்கு இந்நான்
12. கெல்லைக்கு
13. உட்பட்ட நில
14. ம் முக்காலே ஒ
15. ரு மாவும் இவ்வூ
16. ர்த் திருமேற் ே
17. காயில் ராஜேந்
18. திர சோழ விண்
19. ணகர அழகிய
20. மண வாளர்
21. க்குத் திருச்சன்
22. னடக்கு இறை
23. யிலி முற்றூட்டு
24. ச் செய்து குடு
25. த்தேன் அமரே
26. ரந்திர ஈஸ்வர மு
27. உடைய மஹா
28. ா தேவர்க்கும் இத்
29. தேவரடியார் ெ
30. பண்டுகளுக்கு
31. இராஜேந்திர சோ

13 : 27

இடம் : சண்டிகேஸ்வரர் சன்னதி கிழக்குச் சுவர் பீடம்.

காலம் : மூன்றாம் இராஜராஜன், யா. 8 (கி.பி. 1224).

செய்தி : காலக்குறிப்புகளுடன் கல்வெட்டு முற்றுப் பெறாமல் நின்றுவிட்டது.

1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீர
2. ஈஜ ராஜ தேவற்க்கு யாண்டு அ-வது மகர நா
3. யற்று பூர்வ்வபக்ஷத்து நவமியும் திங்கள் கி
4. ழமையும் பெற்ற .........

13 : 28

இடம் : ஏகாம்பரேஸ்வரர் கோயில் முன் நடப்பட்டுள்ள சூலக்கல்.

காலம் : சதாசிவராயர் காலம், சகவருஷம் 1487, கி.பி. 1565.

செய்தி : ஏகாம்பரேஸ்வரர் கோயிலுக்குச் செட்டிக்குளம் கிராமம் தருமமாக விடப்பட்டது.

1. ஸ்வஸ்திஸ்ரீ
2. 1487 இத
3. ன் மேல் செல்
4. லா நின்ற குரோ
5. தன ஸ்ரீ பங்கு
6. னி உத்திரத்தில்
7. ஏகாம்பரீஸ்வரற்
8. க்கு விட்ட செட்டி
9. குளம் கிராமம் த
10. (ன்மம்).

13 : 29

இடம் : ஏகாம்பரேஸ்வரர் கோயில் கோபுர கிழக்கு நிலைவாயில், (க.ஆ : 252/1930-31).

காலம் : துறையூர் பாளையக்காரர் நல்லப்ப ரெட்டியார், சக வருஷம் 1644, கி.பி. 1722.

செய்தி : துறையூர் பாளையக்காரர் நல்லப்ப ரெட்டியார் என்பவர் இக்கோயில் சன்னதி வாசலும், ஏழுநிலைக் கோபுரமுடைய மணிவாசலும் சிவன்மகிழ திருப்பணி செய்து முடித்துள்ளார்.

1. ஸ்வஸ்திஸ்ரீ ஸகாப்தம் 1644 இதன் மேற் செல்லா நி.........
2. சன்னதி வாசலும் எழுநிலைக் கோபு(ர) வாழ் மணி வாசலும் கே.........
3. ராபுகழ் துறையூர் பாளையக்காரன் வில்ல கோலேறய நல்ல .........
4. சிவன் மகிழ திருப்பணி செய்து முடித்தான்.

13 : 30

இடம் : ஏகாம்பரேஸ்வரர் கோயில் துவஜஸ்தம்ப பீடம்

காலம் : கி.பி.18-19ஆம் நூற்றாண்டு

செய்தி : ஏகாம்பர மாணிக்கம் என்பவர் கொடி பீடம், கொடிக் கம்பம் அமைத்துள்ளார்.

1. சறுவதாரி ஷு ஆவணி மீ 9 உ புதவாரமும் பெற்ற ரேவதி ந
2. ாள் ஏகாம்பரமாணிக்கத்தின் புண்ணியமாக
3. கொடிபீடமும கொடிக்கம்பமும்

13 : 31

இடம் : அகுர், சொக்கநாதர் கோயில் மகாமண்ட தெற்குச் சுவர் பீடம்.

காலம் : இரண்டாம் தேவராயன், சகம் 1350 (கி.பி. 1428).

செய்தி : இக்கல்வெட்டு வலங்கை, இடங்கைச் சாதிப்பிரிவைச் சேர்ந்த மக்கள் அசுகூர் (இன்றைய அகுர்) சொக்கநாத நயினார்க் கோயில் திருக்கட்டளையில் கூட்டம் கூடி தங்கள் நாட்டில் நன்செய், புன்செய் நிலத்தில் விளையும் பயிர்களுக்கும் மற்றும் பல பட்டடைக் குடிகள் ஆன செட்டிகள், கைக்கோளர், சேனைக் கடையார், வாணியர், இடையர், வலையர், கண்மாளர், பறையர் உள்ளிட்ட குடிகளும் அரசுக்குச் செலுத்த வேண்டிய வரி அளவை நிர்ணயம் செய்து தீர்மானம் நிறைவேற்றியதைப் பற்றிக் கூறுகிறது. இவ்வூர் திருச்சிராப்பள்ளி உசாவடியில் கரிகால கன்ன வளநாடு ஆன வன்னாட்டு வெண்பாற் நாட்டில் அமைந்திருந்தது.

1. ஸ்வஸ்திஸ்ரீ ஸகாப்தம் 1350 தின் மேல் செல்லா நின்ற சௌம்ய வருஷம் மார்கழி மாதம் உயஎஉ த்ரயோதஸியும் சனிக்கிழமையும் பெற்ற மூலத்து நாள் திருச்சிராப்பள்ளி உசாவடியில் கரிகால கன்ன வளநாடு ஆன வன்னாட்டு வெண்பாற் நாட்டில் அசுகூரில் வலங்கை தொண்ணூற்று எட்டும் இடங்கை தொண்ணூற்று எட்டும்
2. நிறைவற நிறைந்து உடையார் சொக்கனாத நயினார்க் கோயில் திருக்கட்டளையில் கல்வெட்டினபடி இந்த நாட்டுக்கு பூறுவம் மற்ற மரியாதி பயிர்வழி கடமை இறுக்கும் போது நஞ்செய்க்கு பாழ்சாவி கழித்து பயிர்கூடின நிலத்துக்கு வேலி ஒன்றுக்கு அன்பது பணமும் புன்செய் வரகு கேழ் வரகுக்கு பாழ்சாவி கழித்து பயிர்கூடிய நிலத்திலே
3. பத்திலொன்று கழித்துப் பயிர்கூடின நிலத்துக்கு வேலி ஒன்றுக்கு இருபத்து அஞ்சு பணமும் இளவரிசை ஆன பலபயிருக்கும் இளவரிசைத் துண்டம் கால்வாசி கழித்து பயிர் கூடின நிலத்திலே

பத்தில் ஒன்று கழித்து பயிர் கூடின நிலத்துக்கு வேலி ஒன்றுக்கு இருபத்து அஞ்சு பணமும் வான்பயிர் ஆன செங்கழு நீர் கரும்பு கொழு ந்துக்கு நூறு குழிக்கு

4. அஞ்சு பணமும் வாழை மஞ்சள் இஞ்சிக்கு நூறு குழிக்கு இரண்டு பணமும் கமுகு தென்ன மரத்துக்கு தலைகூடின முதலிலே மாதம் ஒன்றுக்கு அரைக்கால் பணமும் ஆட்டைக் காணிக்கைக்கு இரு நூற்று இருபதுபொன்னும் மகமை தலையாரிக்கத்துக்கு எண்பது பொன்னும் பட்டடைக்குடிகள் ஆன செட்டிகள் கைக்கோளர் சேனை கடையார் வா

5. ணியர் பேர்க்கு பேர் ஒன்றுக்கு இரண்டரைப் பணமும் இடையர் வலையர் கண்மாளர் குடிமக்கள் பறையர் பேறக்கு பேர் ஒன்றுக்கு இரண்டு பணமும் புன்பயிர் செய்தால் புனத்துக்கு ஒரு பணமும் இம்மரியாதி இம்முதல் குடுக்க கடவோமாகவும் இது ஒழித்து வேறு புற முதல் புதுவரி என்று குடுக்கக் கடவோம் அல்லவாகவும்

6. இப்படிக்கு இக்கல்வெட்டின்படி செய்யாமல் இருந்தோர்க்கு உடன்பட்டு கல்வெட்டை அழித்து செய்வார்கள் உண்டானால் அவர்களைத் தீர விளங்கி மேற்படக் குத்தி கீழ்பட இழுத்துப் போடக் கடவோம் ஆகவும் இந்த கல்வெட்டை அழித்தவர்கள் கெங்கைக் கரையிலே கபிலையைக் கொன்ற பாபத்திலே போகக் கடவர்கள் ஆகவும் சுபமஸ்து.

**13 : 32**

**இடம்** : அகூர் சொக்கனாதர் கோயில் கருவறை உள்சுவரில் வைத்து கட்டப்பட்டுள்ள தனிக் கல்.

**காலம்** : முதலாம் குலோத்துங்க சோழன்.

**செய்தி** : இவை அருமொழி ஈஸ்வரமுடைய மகாதேவற்கும், துர்க்கை, பிடாரியார் ஆகிய தெய்வங்களும் பூஜை வழிபாட்டுக்கு நிலங்கள் கொடுக்கப்பட்ட செய்தியைத் தருகின்றன. மூன்று துண்டுக் கல்வெட்டுக்களும் உள்ளன.

1. .......... சக்கரவத்திகள் ஸ்ரீகுலோத்துங்க சோழ..........
2. வளநாடாகிய உத்துங்க வளநாட்டு வடவசு..........
3. அருமொழியீசுவரமுடைய மஹாதேவர்க்கு திருப்ப..........
4. ஒரு வேலியும் மந்திரபோனகத்துக்கு..........
5. நிலம் ஐய்ஞ்சு மாவும் துற்கையார்க்கு..........
6. வும் பிடாரியார்க்கு நிலம் மூன்று மாவும்..........
7. வேப்பக் குண்டில் ஒரு மாவும் குமாரமங்கல..........
8. ஒருவேலியும் சன்திராதித்தவற் திருப்படிமா..........

### மற்றொரு துண்டு கல்வெட்டு

1. ..............................
2. ர் கன்மிகளில் செங்குன்ற நாடாழ்வாநேந் இது
3. ந் நாடாழ்வாந் எழுத்து இதுமாறுவாந் ஏழாநரக
4. த்துக் கீழாநரகம் புகுவாந் உ.

### மற்றொரு துண்டு கல்வெட்டு

1. .................. சொக்கற்குடையாநும்
2. ர் கற்பூரநும் திருவகம்படிப்பின்
3. ..................து நாற்பதும் கைக்கொண்டோம் இ.........

### மற்றொரு துண்டு கல்வெட்டு

1. திருவிளக்கு குடி...................
2. சந்திராதித்தவற்

**13 : 33**

**இடம்** : துங்கபுரம், சொக்கநாதர் கோயில் கருவறை மேற்குச்சுவர் பீடம்.

**காலம்** : மல்லிகார்ஜுனராயர், சகவருஷம் 1380 (கி.பி. 1458)

**செய்தி** : துங்கபுரம் ஊரவர் இவ்வூர் உடையார் அணபத நாயனார் கோயில் பூஜை வழிபாட்டுக்கு ஆயிரம் குழி நன்செயும், ஆயிரம் குழி புன்செய் நிலமும் சர்வமான்ய இறையிலியாக நிலம் வழங்கியுள்ளனர்.

1. ஸ்வஸ்திஸ்ரீ மன்மஹாமண்டலீஸ்வரந் ஹரியாராயவிபாடந் பாஷைக்குத் தப்புவராயர் கண்டன் மல்லிகார்ச்சின தேவமகா யிராயர் ப்ருதிவிராஜ்யம் பண்ணி
2. அருளா நின்ற ஸகாப்தம் 1380 இதின் மேல் செல்லா நின்ற வெகுதாந்ய ஸம்வத்ஸரத்து.................. நாயற்று பூறுவ பக்ஷத்து
3. த்ருதிகையும் வியாழமும் பெற்ற .......... நாள் துங்கபுர ஊரவர் இவூர் உடையார் அணபத னாயினார் திருக்கட்டளையில் கல்வெட்டினபடி இன்னாயினார் பூசைக்கு.........
4. ...................இவ்வூர் ......... நத்தத்தில் தேவர்தாநமாக சந்த்ராதித்தவரை ...... புன்செய்
5. நன்செய்குழி [சத-ம்] தேவதானம் சறுவமானியம் இறையிலியாகவும் ......
6. .......... கெங்கை கரையில் காராம் பசுவை கொன்ற பாபத்திலே போக கடவனாகவும் இப்படிக்கு இவை .........
7. ......... வென்றான் எழுத்து .........
8. .......... இவர்கள் சொல்ல கல்வெட்டினமைக்கு தேனூர் முத்தை ...... (கல்வெட்டு பல இடங்களில் சிதைந்துள்ளது).

13 : 34

**இடம்** : துணிஞ்சிப்பாடி, புத்தேரி வடக்கீழ் கணபதி வீட்டருகே நடப்பட்டுள்ள கற்பலகை.

**காலம்** : முதலாம் ஸ்ரீரங்கன், விஷு வருஷம், கி.பி. 1586.

**செய்தி** : தனஞ்சிப்பாடி கிராமம் முழுவதும் வெண்மணி மருதாந்த சோழீஸ்வரமுடைய தம்பிரானார் கோயிலுக்குச் சர்வமானிய இறையிலியாக ஸ்ரீரங்கதேவ மகாராயரின் காரியத்துக்குக் கர்த்தராக இருந்து இப்பகுதியை ஆட்சி செய்த நாயக்கர் மன்னன் கொண்டம நாயக்கரின் தர்மமாகவும் இப்பகுதியை நிர்வகித்த 17 பற்று நாட்டார்கள் தர்மமாகவும் அரசு நிலையிட்ட கிருஷ்ணப்ப மழவராய நயினாரால் கொடுக்கப்பட்டது.

**முன்பக்கம்**

1. விஷவருஷம்
2. வைய்கா
3. சி மீ யளவு தென்
4. னாண்ட நாடு
5. வெண்மணி மரு
6. தாந்த சோளீசுவ
7. ரமுடைய தம்பிரா
8. னாற்கு சீரங்க தேவ
9. மகாராயர் காரிய
10. த்துக்கு கத்தரான வை
11. ய்யப்ப கிருஷ்ணப்பக்
12. கொண்டம நாயக்
13. கர் தன்மமாகவும்
14. பதினேழு பற்று நா
15. ட்டார் தர்மமாகவு
16. ம் அரசுநிலையிட்ட
17. கிஷ்ணப்ப மழவ
18. ராய நயினார் தன
19. ஞ்சிப்பாடி கிராம
20. ம் நான்கெல்லை
21. யும் சறுவமானி

**பின்பக்கம்**

1. யமாக தானம் செயித
2. படியினாலே இந்த
3. தன்மத்தை
4. பரிபாலனம்
5. பண்ணிந பேர்கள்
6. கெங்கை கரை
7. யிலே அசுவமே
8. தயாகம் பண்
9. ணின பலன்
10. பெறக்கடவர்
11. களாகவும்.

0 : 35

**இடம்** : ஆடுதுறை, குற்றம்பொறுத்த ஈஸ்வரன் கோயில் இரண்டாம் கோபுரகிழக்குச் சுவர்ப் பீடம்.

**காலம்** : அரியலூர் பாளையக்காரர் அரசுநிலையிட்ட கிருஷ்ணப்ப மழவராயர், சௌம்ய வருஷம் (கி.பி.1608).

**செய்தி** : அரசுநிலையிட்ட கிருஷ்ணப்ப மழவராய நயினார் மனைவி எறம்மாள் என்பவர் இக்கோயில் ஏலவார் குழலி அம்மை சன்னதி முன் முப்பது கால் மண்டபம் கட்டியுள்ளார். ஏலவார் குழலி என்னும் பெயர் இன்று சுகுந்தகுந்தளாம்பிகை என வடமொழியில் அழைக்கப்படுகிறது. இம்மண்டபத்தின் கூரையில் அழகிய ஓவியங்கள் தீட்டப்பட்டுள்ளன. இவையும் இப்பாளையக்காரர் காலத்தில் வரையப்பட்டவையாகும்.

1. அரசு சவும்மிய வருஷம் மாசி மீ யக உ அரசுநிலையிட்ட கிஷ்ணப்ப மழவராய நயினார் மனையாள்
2. எறம்மாள் அவர்கள் புண்ணியத்தினாலே ஏலவார் குழலி அம்மை சன்னதியில்
3. காவணக்கால் பத்திர முப்பது கால் முறையும் சோபான மண்டபமும் கட்டி நிறைவேறி
4. ச்சுது உ.

**13 : 36**

**இடம்** : மங்கூன், மின்மாற்றி நிலையம் அருகே உள்ள ஓடை பாறையில்.

**காலம்** : சதாசிவராயர், சகவருஷம் 1492, (கி.பி. 1570).

**செய்தி** : இவ்வூரின் பழைய பெயர் மாக்குன்றம் என்பதாகும். இப்பெயர் மருவி தற்போது மங்கூன் என ஆகிவிட்டது. மாக்குன்றம் கிராமத்தைத் திருமுதுக்குன்றத்தில் (விருத்தாச்சலம்) இருந்த மடத்திற்குத் தானமாகச் செட்டிக்குளம் மும்மடிரெட்டியார் மகன் சின்னம்ம ரெட்டியார் மற்றும் இவருடைய தம்பி பெத்துரெட்டியார் ஆகியோர் கொடுத்துள்ளனர். அந்த மடம் திருமூலர் சந்ததி அறிவானந்தர் என்பவரால் பராமரிக்கப்பட்டு வந்தது என்பதையும் அறியமுடிகிறது.

1. ஸ்ரீ மது ஸதாசிவ றா
2. யர் பிறுதுவி றாச்சியம்
3. பண்ணி யருளா நின்ற
4. சகாத்தம் 1492 ன்
5. பிறமோத ஹூ சித்த
6. ரை மீ 3உ செட்டிகு
7. ள மும்மடி ரட்டியார் குமாரர்
8. சின்னம ரட்டியார் தம்பியார் ணனா
9. பெத்து ரட்டியார் திருமுதுகுன்
10. ற மடத்து
11. க்கு திருமூ
12. ல சந்ததி
13. அறிவானந்தர்க்கும்ப
14. கோணம் சித்தநாத பண்டார
15. றிவானந்த சதம்முடைய ம
16. டப்புறமாக புத்திற
17. பரம்பரை மாக்குன்
18. றம்தாரை
19. வாத்தோ
20. ம் உ

13 : 37

**இடம்** : கொளக்காநத்தம், வரதராஜப்பெருமாள் கோயில் நுழைவாயில் வலதுபுறம் உள்ள கற்பலகை.

**காலம்** : திருமலைநாயக்கர் (1623-1659), சகவருஷம் 1555, (கி.பி. 1632).

**செய்தி** : மதுரை திருமலைநாயக்கரின் அதிகாரியான இராமப்பய்யன் இவ்வூர் மதனகோபால சுவாமி கோயில் திருப்பணி திருவாதாரனை ஆகியவற்றுக்கு மால்வாய் நாடு குளக்காநத்தூர் மாகாணியில் சேர்ந்த கிராமம் கொட்டறையில் சேர்ந்த கீழ்த்தானத்தூரில் ஆயிரம் குழி நிலம் தானமாகக் கொடுத்துள்ளார். குளக்காநத்தூர் மால்வாய் நாட்டின் கீழ் குளக்காநத்தூர் மாகாணம் என்னும் வருவாயத்துறை நிருவாகப் பிரிவுக்குத் தலைநகரமாக இருந்த ஊர் எனவும் அறிகிறோம். இராமப்பய்யன் கொடுத்த நிலத்தின் எல்லைகளாக *சாத்தனூர், உம்பிளக் கானத்தூர், மாதவி, குறும்பன் பாளையம்* ஆகிய ஊர்கள் இருந்துள்ளன. புகழ்மிக்க இராமப்பய்யன் அம்மானையின் பாட்டுடைத் தலைவனான இராமப்பய்யன் இப்பகுதி கோயிலுக்கு கொடை வழங்கியுள்ளது குறிப்பிடத்தக்கது.

1. ஸ்வஸ்தி சகாப்தம் 15
2. 55ருன் மேல் செல்லா நி
3. ன்ற ஸ்ரீ முக வருஷம் மாசி
4. மாதம் 23உ ஸ்ரீ மது விஸ்வ
5. நாத நாயக்கர் திருமலை நா
6. யக்கரய்யன் காரியத்துக்கு கற்த
7. றான றாமப்பய்யந் மால்வாய் நாடு கு
8. ளக்கானத்தூர் மதன கோபா
9. ஸ்வாமி கோவில் சேநாபதி ஆழ்
10. வார் ஸ்ரீ பண்டாரத்துக்கு குடுத்த
11. தற்ம சாஸநப் பட்டையம் மத
12. ன கோபால சுவாமிக்கு திருப்ப
13. ணி திருவாராதனத்துக்கு திரும
14. லை நாயக்கரய்யனவர்களு
15. க்குப் புண்ணியமாக ஸ்ரீ பண்டார
16. த்துக்கு திருவிளையாட்டமாகக்
17. கட்டளையிட்டது மால்வாய் நாடு
18. குளக்காநத்தூர் மாகாணியில்
19. சேந்த கிராமம் கொட்டறையில் சே
20. சந்த கீழ்தானத்தூர் மால்வாய் னா
21. ட்டு அளவால் கட்டளையிட்ட குழி

22. 1000 யிந்த நிலம் ஆயிறம் குழிக்கு
23. ம் சாத்தனூர் எல்லைக்கு மேற்
24. கு உம்பிளக்கானத்தூர் எல்லை
25. க்கு வடக்கு மாதவி எல்லைக்கு கி
26. ழக்கு குறும்பன் பாளையத்துக்கு
27. தெற்கு கண்டநிலமும் கொட்டறை
28. க் காட்டில் சோழகன் குளத்துக்கு மே
29. மற்க்கு கண்டநிலமும் யிந்த னான்கெ
30. கல்லையிலுண்டாற நிலம் அனுப
31. வித்துக் கொள்ளவும் திருமலை
32. நாயக்கரய்யன் புண்ணியமா
33. க சந்திறாதித்த வரையும் அனுபவி
34. த்துக் கொள்ளவும் யிந்த புண்ணி
35. யத்துக்கு ஆறாகிலும் அகிதம் பண்
36. ணின பேர் கெங்கைக் கரையிலே
37. ல காராம் பசுவை கொன்ற தோ
38. ஷத்திலே போக கடவறாகவும் உ

**13 : 38**

**இடம்** : இலுப்பைக்குடி, பெருமாள் கோயில் முன் கிடக்கும் தனிக் கற்பலகை.

**காலம்** : மதுரை சொக்கநாத நாயக்கர் (1659-1682), சகம் 1592, (கி.பி. 1670).

**செய்தி** : உற்றத்தூர் வருவாய்த் துறைப் பிரிவுக்கு அதிகாரியாக விளங்கியப் பிரதானி பெரிய அழகிரி நாயக்கர் என்பவர் மதுரை மன்னர் சொக்கநாத நாயக்கருக்குப் புண்ணியமாக இலுப்பைக்குடி கிராமத்தை அன்னதானக் கட்டளைக்கு மானியமாக வழங்கியுள்ளார். இலுப்பைக்குடியின் எல்லைகளாகச் சாத்தனூர், புலிமிசை, கூடலூர், குளத்தூர் ஆகிய ஊர்கள் குறிப்பிடப்படுகின்றன.

1. சகாற்த்தம் 15
2. 92 மேல் செல்லா
3. நின்ற சாதாரண ஞ
4. காத்திகை மீ உயசு
5. வியாழக்கிழமையு
6. ம் பூறுவ பக்ஷத்து
7. அஸ்டமியும் பூரந
8. க்ஷத்திரமும் பெற்ற
9. சுபதினத்தில் விசுவனா
10. த சொக்கனாத னாயக்
11. கரய்யனவர்கள்
12. புண்ணியமாக ஊ
13. ற்றத்தூர் சாதத்திற்
14. க்கு பிறுதானி பெரிய

15. அழகிரி னாயக் கரய்யன்
16. அவர்கள் கட்டளையி
17. ட்டது இலுப்பைகுடி
18. கிறாமம் நத்தம் சுற்
19. றெல்லை சாத்தனு
20. ார் எல்லைக்கு கிழக்கு
21. புலிமிசை எல்லைக்
22. கு மேற்கு கூடலூர் எல்
23. லைக்கு தெற்கு குளத்
24. தூர் எல்லைக்கு வட
25. க்கு னான்கு எல்
26. லைக்கு உள்பட்ட நஞ்
27. சை புஞ்சை மாவடை
28. மரவடை உள்பட கட்
29. டளை இட்டபடியினாலே
30. ந்த தன்மம் சந்திரா்
31. ஆதித்த வரைக்கும் உ
32. த்த ரோத் திரமாக நட
33. த்திவிச்ச பேர்கள்
34. கெங்கை கரையி
35. லே கோடி கன்னி
36. யாதானப் பலனு
37. ம் கோடி கோதான
38. ப் பலனும் பெறு
39. வாராகவும் இந்த
40. அன்னதான தன்ம
41. த்துக்கு அகுதம் பண்
42. ணின பேர்கள் கெ
43. ங்கை கரையிலே
44. காராம் பசுவை
45. கொன்ற தோஷத்
46. திலே போவாராகவும்

**13 : 39**

**இடம்** : வேப்பூர், அண்ணாமலையார், கோயில் வளாகத்துள் கிடக்கும் தனி கல்.

**காலம்** : அரியலூர் பாளையக்காரர் சின்ன ரெங்கப்ப மழவராயர், மன்மத வருஷம், (கி.பி. 1680).

**செய்தி** : வேப்பூர் அண்ணாமலையார் கோயிலுக்கு நட்சத்திரவிளக்கு கட்டளைக்குச் சின்ன ரெங்கப்ப மழவராயர் 40 குழி நிலம் மானியமாக வழங்கியுள்ளார்.

1. மன்மத ஸ்ரீ வையாசி மீ ஸ்ரீமது சின்ன ரெங்
2. கப்ப மழவராயர் வேப்பூர் அண்ணாமலையாருக்கு ந
3. க்ஷத்திர விளக்குக் கட்டளைக்கு விட்டது சின்
4. ன மோறை நஞ்சை நிலம் குழி 40 நிலமானியம்
5. தாரா தெத்தமாக னாம் விட்டது இந்த நிலமான்னி
6. யம் குழி நாப்பது பச்சையப்ப செட்டியார் அவர்கள்
7. அண்ணாமலையாருக்கு நக்ஷத்திர விளக்கு கட்டளை
8. தந்மத்துக்கு ஆசந்த்ராற்கமாக சந்திராதித்ய
9. ாள் உள்ள மட்டுக்கும் இந்த நிலமான்னியம் நடப்பிச்சு
10. க் கொள்ள கடவோராகவும் வேப்பூர்க் குடியானபே

11. ர் கோவில் தானத்தார் குருக்கள் இந்த தற்மத்துக்கு தாட்
12. சி வாராமல் நடப்பிச்சுக் கொள்ளவும் இந்த தற்மத்துக்கு யா
13. தாமொருவர் விகிர்தம் பண்ணினவர் சிவத்துரோக
14. ங் குருத்துரோகம் பண்ணின தோஷத்திலேயும் ந
15. ஷத்திரமாலை திருவிளக்கு இருவத்தேழையும் நிறு
16. த்தின தோஷத்திலேயும் போகக் கடவனாகவும்
17. னாரணப்ப அய்யன் பணிவிடை உ
18. அண்ணாமாலையார் துணை.

**13 : 40**

**இடம்** : காரை, விஸ்வநாத சுவாமி கோயில் இராஜகோபுரம் உள்வாயில் வலப்பக்கச் சுவர்

**காலம்** : கி.பி. 17-18 ஆம் நூற்றாண்டு.

**செய்தி** : செல்லாயி அம்மாள் என்பவர் விஸ்வநாத சுவாமிக்கு ஆங்கீரச வருஷம் ஆவணி மாதம் 6 ஆம் தேதி கும்பாபிஷேகம் பண்ணி வைத்துள்ளார்.

1. ஆங்கீறஸ ௵ ஆவணி ௴ 6 உ
2. விசுவனாத சுவாமிக் கி
3. கும்பா அபிஷேகம் பண்
4. ணி வச்சது செல்லாயி
5. அம்மாள் தற்மம்.

**13 : 41**

**இடம்** : முருக்கங்குடி, சிவன்கோயிலில் உள்ளது.

**காலம்** : காளயுத்தி வருஷம் (கி.பி. 17-18ம் நூ.)

**செய்தி** : நெய்க்குப்பையைச் சேர்ந்த வரதராசரெட்டியார் என்பவர் இக்கோயில் மண்டபத்தைக் கட்டியுள்ளார்.

1. காளயுக்தி ௵ பங்குனி ௴ 25
2. சுக்கிர வார னாள் ரிஷப லக்கி
3. னம் இப்படி கொத்த சுபதினத்தில்
4. நெக்குப்பை திருமலை
5. ரெட்டியார் குமாறர் வரதறாச ரெட்
6. டி யார் தற்மம்.

13 : 42

இடம் : சாத்தநத்தம், ஊர் கிணற்றருகே கிடைக்கும் கல்

காலம் : சகம் : 1769, கலி வருஷம் 4948, (கி.பி. 1847).

செய்தி : பரவாய் மாகாணம் நன்னை கிராமத்தில் உள்ள ஒப்பணப்பிள்ளையார், திருமேனி அழகர், வரதராஜப் பெருமாள் ஆகிய மூன்றுக்கோயில்களுக்கும் வழங்கப்பட்ட இலுப்பைத் தோப்பு மற்றும் ஒப்பனப்பிள்ளையார் பூஜைக்கு வழங்கப்பட்ட நிலதானம் பற்றிக் குறிப்பிடுகிறது.

முன்பக்கம்

1. உ சுவஸ்தி ஸ்ரீ சாலிவாக
2. ன சகாபத்தம் 1769 க
3. லியாப்பத்தம் 4948 யிதின்
4. மேல் செல்லாநின்ற பிலவங்க ஹு
5. சித்திரை மீ யக உ குருவாறம் பூச நஷச
6. த்திறமுங் கூடின அமுற்த யோகத்தல் ப
7. றவாயி மாகாணம் நன்னை கிறாமத்
8. தில்(ஒ)ப்பணப் பிள்ளையார் திறுமே
9. னி அழகர் வறராச பெருமாள் யிந்
10. த மூணு கோயிலுக்கும் ஷ ஒப்பண
11. ப்பிள்ளையார் கோவிலுக்கும் கிழக்கு
12. கல்லை யெல்லைக்கு மேற்கு ஷ யேறி க
13. ரைக்கி வடக்கு யிந்த னான்ங்கு சதி
14. றத்துக்குள் பட்ட யிலுப்பை தோப்
15. பு பல விறுஷங்களும் தற்ம ச
16. ாதநமாய் விட்டது மல்லாமல்
17. ஒப்பணை பிள்ளையாறுக்கு பூ
18. சைக்காக மாநியம் உ 8 நிலம்
19. யிந்த தற்ம

பின்பக்கம்

20. ம் கல்லுங்காவேரியும்
21. புல்லும் பூமியும் உள்ள
22. வரையில் சிலா சாதநம்
23. செய்து யிறுக்குது யிந்த
24. தற்மத்துக்கு யாதாமொறுவ
25. ர் விகர்தம் செய்தால் கெங்கையி
26. லே காறாம் பசுவை வதை செய்த தே
27. தாழத்திலே போவார்கள் உ யிந்த க்கீ
28. றல் பட்டா மணியம்.

# 14. புதுக்கோட்டை மாவட்டக் கல்வெட்டுகள்

கரு.இராசேந்திரன், மேலப்பனையூர்.

14 : 1

**இடம்** : புதுக்கோட்டை மாவட்டம் திருமயம் வட்டம் நெய்வேலி ஊருக்கு வடபுறம் புதிதாகக் கட்டப்பட்டுள்ள சிவன்கோவில் முன்பு வைக்கப்பட்டுள்ள சேஷ்டாதேவி சிலையின் நெஞ்சுப் பகுதியிலுள்ள கல்வெட்டு.

**காலம்** : கி.பி. 11-12 ஆம் நூற்றாண்டு.

**செய்தி** : கொடும்பாளூர் செட்டிகளில் நிமகுச்சன் என்பவர் கேட்டைக் கிழத்தியார் என்ற சேட்டையினைச் செய்து வைத்ததைத் தெரிவிக்கிறது. சிலையிலேயே கல்வெட்டு உள்ளதால் சிலையின் காலத்தைக் கணிப்பதற்கு ஏதுவாக உள்ளது.

1. ஸ்வஸ்திஸ்ரீ கொடும்
2. பாளூர் செட்டிகள் நிமகுச்சன்
3. வைச்ச திருக்கேட்டை கிழத்
4. தியார்.

14 : 2

**இடம்** : திருமயம் வட்டம் அரசமலைப் பிள்ளையார் கோவிலுக்குத் தென்புறத்தில் நடப்பட்டுள்ள தூணில் உள்ள கல்வெட்டு.

**காலம்** : மாறவர்மன் சுந்தரபாண்டியன், யா. 3, கி.பி. 13ஆம் நூற்றாண்டு.

**செய்தி** : கூடலூர் நாட்டைச் சேர்ந்த பெருங்கூற்குடி மறவபன்மன் என்ற நிலமையழகிய நாடாள்வான் அரசமலையில் விநாயகரைப் பிரதிட்டை செய்து அதற்குத் தன் தாய் தந்தையரைச் சாற்றி கீழ்வயலிலும் சோழன் குடிக்காட்டிலும் நிலக்கொடை அளித்ததைத் தெரிவிக்கிறது.

1. ஸ்வஸ்திஸ்ரீ
2. கோமாற பன்மரா
3. ன திரிபு (வ) னச் சக்க
4. ரவத்திகள் ஸ்ரீ சுந்த
5. ரபாண்டிய தேவ (ற்)
6. கு யாண்டு 3வது (இரட்)

7. டபாடி கொண்ட சோழ
8. வளநாட்டு கூடலூர் நாட்
9. டு பெருங்கூற்குடி மறவ....
10. பமன் தென்னந் நிலைமை (ய)
11. ழகிய நாடா(ள்வா)ன் (ஒல்லையூர்)
12. கூற்றத்து அரைசமீ
13. (கா)மநிலை யி(ல்) வினாய
14. க(ப்) பிள்ளையாரைத் தி(ரு)
15. ப்பி(ர) திட்டை செய்து மற
16. குல (வினா) யகப் பிள்ளை (யா)
17. ற்கு (தன்) மாத பிதாக்களை
18. ச்சாத்தி ....................
19. க்கு.......... (னா) னாழிக்குடலா..........
20. ..........யலில் குழியின் கீழ்வயக்க
21. ல் கலம் அரைமாவும் கீழ்வயலி
22. ல் சோளன் குடிக்காடுங் குளமு
23. ஞ் சந்திராதி(த்த) வரை கி..........
24. மக்க பெ..........

**14 : 3**

**இடம்** : திருமயம் வட்டம் விரையாச்சிலை ஊருக்கு வடபுறமுள்ள நகரத்தார் சுடுகாட் டுக்கு மேல்புறம் அரசாங்க காட்டிற்குள் கிடக்கும் தனிக்கல்.

**காலம்** : கி.பி. 13 ஆம் நூற்றாண்டு.

**செய்தி** : கல்வாயில் நாட்டு சுந்தரபாண்டியபுரத்தைச் சேர்ந்த அரத்துடையான் பிள்ளையுடையான் என்ற திருமாலிருஞ்சோலை தாதர் விரையாச்சிலையில் கிழ்மேல் எண்ணூரடியும் தென்வடல் எண்ணூரடியும் உள்ள ஊரணி வெட்டியமைத்தது. கல்வெட்டு முற்றுப் பெறவில்லை. புதுக்கோட்டை கல்வெட்டுத் தொகுதி (பு.ச.க) 534ல் உள்ள கல்வெட்டில் விரையாச்சிலை ஊரார் இவ்வரவத்துடையான் திருமாலிருஞ்சோலை தாதர் சோதியாள்வர்க்குத் தண்ணீர் ஊரணி (பனையன் குழி) விற்பதற்கு இசைந்து விற்றதாகவும் அதன் எல்லையாகக் கிழ்மேல் மற்றும் வடமேல் எண்ணூறு அடி குறிப்பிடுவது இங்கு நோக்கற்பாலது.

1. ஸ்வஸ்தி ஸ்ரீகல்வாயி(ல்)
2. னாட்டு சுந்தரபாண்
3. டியபுரத்து அரவத்
4. துடை யான் பிள்ளை
5. யுடையார் திருமாலி
6. ருஞ்சோலை தாதர்

7. சோதியாழ்வார்
8. தன்மம் கீழ் மேல் எண்
9. ணூரடியும் தென்வ
10. டல் எண்ணூரடியும்
11. அரவத்துடையா(ன்)
12. ...................

14 : 4

**இடம்** : திருமயம், வட்டம், வெ.கோட்டையூர் அகத்தீசுவரர் கோவில் மகா மண்டபத்தின் தூண் ஒன்றிலுள்ள கல்வெட்டு.

**காலம்** : கி.பி. 15ஆம் நூற்றாண்டு.

**செய்தி** : இளையாற்றக்குடி நகரத்தாரில் சிறு சேற்றூருடையார் தூண் செய்தமை பற்றியது.

1. இளையாற்ற
2. க்குடியான
3. குலசேகரபுர
4. த்து சிறுசேற்றூ
5. ருடையார் மீட்
6. டார் மன்நமு
7. டைமார் தன்மம்

14 : 5

**இடம்** : திருமயம் வட்டம் வெ.கோட்டையூர் பெருமாள் கோவில் முன்புள்ள மொட்டைக்கோபுரத்தின் திருநிலைக்காலில் உள்ளது.

**காலம்** : கி.பி. 13ஆம் நூற்றாண்டு.

**செய்தி** : இந்தத் திருக்கோபுரம் அழகப்பெருமாளான அரச மீகாமன் என்ற பெயரில் விளங்கியுள்ளது. இது அழகப்பெருமாளால் கட்டப் பட்டதாக இருக்கலாம்.

1. ஸ்வ ஸ்தி ஸ்ரீ இத்
2. திருக்கோபுரம்
3. அழகப் பெரு
4. மாளான அரச
5. மீகாமன் திருக்
6. கோபுரம்

14 : 6

**இடம்** : திருமயம் வட்டம் ஆத்தூர்.

**காலம்** : கி.பி. 13 ஆம் நூற்றாண்டு.

**செய்தி** : ஆத்தூரிலுள்ள மாஞ்செய் மற்றும் கிணறு ஆகியவைகளைத் திருக்கோளக்குடி கல்தச்சருக்கு ஆசிரியமாகக் கொடுத்ததைக் கூறுகிறது.

1. சோழன்
2. வேந்தன்
3. செய் மாஞ்செ
4. யுங் கிணறும்

5. திருக்கோளக்

6. குடி க(ல்)தச்சரி

7. (ல்) அரியபிள்ளை ஆ

8. சிரியம்

14 : 7

இடம் : திருமயம் வட்டம் மேலப்பனையூர் அகிலாண்டீஸ்வரி கோவிலின் தெற்கு வாசல் முன்பாக உள்ள ஊஞ்சல் கல்லிலுள்ள கல்வெட்டு.

காலம் : கி.பி. 15ஆம் நூற்றாண்டு.

செய்தி : இக்கோவில் பிரகாரத்திற்கு வெளியில் நிற்கும் இவ்வூஞ்சல் கால் இரண்டையும் சுந்தரசோழபுரத்து மருதாந்தபுரமுடையான் என்ற அம்பலத்தாடி பொன்னுலகுடையார் செய்துவைத்தமை பற்றியது. சிவன் கோவில் திருவிழாவில் அம்மன் உருவத்தை இதுபோன்ற ஊஞ்சல் கல்லில் வைத்து ஆட்டுவது இங்கு ஒரு மரபாக இருந்து வந்திருக்கிறது. இவ்வூர் சிவன் கோவிலின் பிரகாரத்திற்கு வெளியில் தெற்குவாசலில் ஊஞ்சல் கல் நிற்பது போல எல்லாக் கோவில்களிலும் தெற்கு வாசலில் ஊஞ்சல் கற்கள் நிற்பது குறிப்பிடத்தக்கது. பனையூரில் இன்றைகும் மார்கழி திருநாளின்போது அம்மனை ஊஞ்சலில் வைத்து ஆட்டுவதைப் பார்க்கலாம்.

1. இந்த ஊ
2. ஞ்சல் க்
3. கால் இ
4. ரண்டும் சு
5. ந்திர சோ
6. ழபுரத்து
7. மருதாந்
8. த புரமு
9. டையான்
10. அம்பலத்
11. தாடியார்
12. பொன்உ
13. லகுடை
14. யார் த
15. ன்மம்

14 : 8

இடம் : திருமயம் வட்டம் குளமங்கலம் செட்டி ஊரணியின் மேலக்கரையில் நடப்பட்டுள்ள தூணில்

காலம் : சக ஆண்டு 1619, (கி.பி. 1697)

செய்தி : சுந்தரசோழபுரத்து மருதாந்தபுரமுடையான் என்ற அந்தரி ஆண்டார் ஊரணி வெட்டி ஊர்ச்சபையினர் பேரில் விட்டதைத் தெரிவிக்கிறது.

1. சுபம(ஸ்து) சகாத்தம்
2. 1619ன் மேல்
3. செல்லா நின்ற பி
4. ஙகல வருஷம்
5. ஆவணி மீ 19.உ.கூட
6. லூர் நாட்டு பனை

7. யூர் குளமங்கலத்து
8. தேவன்தம் குளத்து
9. புறகரைக்கு வடக்கு
10. ம் இராமனாச தேவர்
11. ஏம்பல் கரைக்கு
12. தெற்கும் ஆன தனத்து வி
13. லைக்குற கொண்டு
14. தென்கோனாடடு ஒல்லை
15. யூர் கூற்றத்து சுந்த
16. ரசோழபுரத்து மருதா
17. ந்தபுரமுடையான்
18. பெருமாந்தன்
19. அந்தரி ஆண்டார்
20. ஆன யம்பலத்தாடுவார்
21. தன்மம் இவ்வூரணி
22. பேர் பெருமாக்கள்

**14 : 9**

**இடம்** : திருமயம் வட்டம், விரையாச்சிலை தேவ வயலுக்கும் தெண்ணீர் வயலுக்கும் பொதுவான வரப்பின் அருகில் மூத்தவர் வீட்டு சின்னவரின் நாற்றங்காலின் தெற்கு வரப்பில் நடப்பட்டுள்ள தூண் கல்வெட்டு.

**காலம்** : குலசேகரன், யா. 5, (கி.பி. 14ஆம் நூற்றாண்டு).

**செய்தி** : தேவர் குளமும் செக்காலை குளமும் உடைப்பெடுத்ததை அடைத்து வரப்பெடுத்துக் கொண்டு பயிர் செய்ய கல்வாயில்நாட்டு சுந்தரபாண்டியபுரத்து அரவத்துடையான் திருமாலிருஞ்சோலை சோதியாழ்வாற்கு நிலக்கொடை கொடுத்ததைத் தெரிவிக்கிறது.

1. ஸ்ரீ குலசேகர தேவற்கு 5 ஆவ
2. து ஸ்வஸ்திஸ்ரீ கல்வாயி(ல்)
3. நாட்டு சுந்தர பாண்
4. டியபுரத்து அரவத்துடை
5. யா(ர்) பிள்ளையுடையர்
6. திருமாலிருஞ்சோலை தா
7. தர் சோதியாழ்வாற்கு
8. விரையாச்சிலைவூர் (மறவன்) நம்
9. பி அஞ்ஞூற்றுவப் (பே)ரய
10. ர் உள்ளிட்டார் பக்க(ல்)
11. விலை கொண்ட தேவர்
12. குளமும் செக்கா
13. லைக் குளமும் வயலும்
14. உடைக்க குளமும் அடைத்
15. து காலும் வெட்டி கொண்டு
16. வயல் காடும் வெட்டி
17. வரம்பும் இட்டு சந்தி

18. ராதித்தவரை தான் அ
19. னுபவித்தபடி கீழ்நோ
20. க்கிய கிணறும் உண்டா கல்(லு)
21. ம் மேல்நோக்கிய (மரமும்)
22. உண்ட(ா)க்கல்லும் கீழ்பா
23. ற்கெல்லை தேவர் வயலு
24. க்கு மேற்கும் தென் பா
25. ற்கெல்லை பேருயாண்ட
26. நம்பன் செய்க்கு வடக்கும்
27. மேல்பாற் கெல்லை குளத்து
28. க்கு கிழக்கும் வடபாற் கெ
29. ல்லை தென்னவன் குளத்து(க்கு)
30. ...................
31. ...................

**2வது பக்கம்**

1. இவர்கள் சொல்ல இந்த பிரமாணம்
2. எழுதினேன் இந்தவூரவர் தற்குறியும் இட்டு
3. எழுதினேன் இந்தவூர் கணக்கு நாவ
4. லூருடையான் தாபநம அரங்குளநே
5. அவையன்
6. சொக்கனார்
7. எழுத்து
8. மரமாணி
9. க்கதட்டா
10. ன் எழுத்து

**14 : 10**

**இடம்** : திருமயம் வட்டம் விரையாச்சிலை ரெண்டி வயல் பழனிச்சாமி தேவர் களத்து வீட்டிற்கு மேல்புறம் வேலியின் ஓரத்தில் சாய்ந்து கிடக்கும் பலகைக் கல்லிலுள்ள கல்வெட்டு.

**காலம்** : குலசேகரன், யா. 5, கி.பி. 14 ஆம் நூற்றாண்டு.

**செய்தி** : கல்வாயில்நாட்டுச் சுந்தரபாண்டியபுரத்து அரவத்துடையான் திருமாலிருஞ்சோலை சோதியாழ்வார்க்கு இரண்டு வயல் நிலக்கொடை வழங்கியதைத் தெரிவிக்கிறது.

1. ஸ்வஸ்திஸ்ரீ கு
2. லசேகர தே

3. வற்கு யா(ண்)டு 5
4. கல்வாயி நா
5. ட்டு சுந்தர பாண்
6. டிய புரத்து அர
7. வத்துடையா(ர்)
8. பிள்ளையுடையா
9. ர் திருமாலிருஞ்
10. சோலை தாதர்
11. சோதியாழ்வா(ர்)
12. க்கு விரையாச்சி
13. லை மறவன் நம்பி
14. அஞ்னூற்றுவப்(பே)ப
15. ரயர் உள்ளிட்டா
16. ர் ப(க்)கல் கொண்டு ஊ
17. ரவர்ற்கு துண்டிப்பா
18. க ஆண்டு ஒன்றுக்கு இ
19. றுக்கும் பணம் இப்
20. பக்கல் கொன்று சந்திரா
21. தித்தவரை இரண்டு வ
22. யலும் ஆள்க.

14 : 11

**இடம்** : திருமயம் வட்டம் விரையாச்சிலை ஆட்கொண்டான் ஊரணி கிழக்குக் கரையில் நடப்பட்டுள்ள தூண் கல்வெட்டு.

**காலம்** : சக ஆண்டு 1633, (கி.பி. 1711).

**செய்தி** : சுந்தரபாண்டியபுரத்துப் பூதமங்கலமுடையாரான சிற்றம் பலமுடையான் ஆட்கொண்டார், ஊரணி வெட்டியதைத் தெரிவிக்கிறது.

1. ஸ்வஸ்தஸ்ரீ சகாத்தம் 1633
2. மேல் செல்லா நின்ற கர வருஷம்
3. சித்திரை 26.உ.வியாழக்கிழமை
4. மிருக சீரிஷமும் பெற்ற நாள்
5. இந்த ஊருணி வெட்டினான் கல்வா
6. யில் நாட்டு அரசநாராயணப்
7. பெருந்தெருவான சுந்தரபாண்டி
8. யபுரத்து பூதமங்கலமுடையா
9. ன் அழகிய சிற்றம்பலமுடை
10. யார் ஆள்கொண்டான்
11. இந்த ஊருணிஇன் பேரும்
12. ஆட் கொண்டான்
13. கல்வாயில் நாட்டி
14. ன் தென் சுந்தையா
15. கோன் தம்(மம்) பூத
16. மங்கை செல்லா
17. டைத் திருச்சிற்றம்பல
18. ன் சிரக்கல்க்கோன் எ

19. ல்லாரும் கண்டர்க்கு ம
20. ஞ்சனமாக ஆட்கொ
21. ண்டவையன் நல்
22. லாருஞ் சேரும் வி
23. ரைசையில் ஊரு
24. ணி கண்டனனே.

14 : 12

**இடம்** : திருமயம் வட்டம் விரையாச்சிலை ரெண்டுவயல் விலக்காட ஐயனார் கோவில் தென்புறம் குதிரைப் பந்தியின் அருகில் கிடக்கும் கல்.

**காலம்** : கி.பி. 13 ஆம் நூற்றாண்டு.

**செய்தி** : கானநாட்டு மேலூர் மக்கனார் முனையதரையர்க்கு ஆசிரியம் கொடுத்தமைக்கானது. கல்வெட்டின் மேல் தோரணவாயிலும், கல்வெட்டின் கீழ் பூரணகும்பம் குத்து விளக்குகள் வரை கோட்டு உருவமாக உள்ளன.

1. ஸ்வஸ்தி ஸ்ரீ
2. உலண்டி நூ
3. ர் கான நாட்டு
4. மேலூர்
5. மக்க
6. னாரான மு
7. னையதரை
8. யர்க்கு ஆஸ்ரயம்

14 : 13

**இடம்** : திருமயம் வட்டம் செவலூர், பள்ளன் ஊரணியின் கிழக்குக் கரையில் நடப்பட்டுள்ள தூணின் கல்வெட்டு.

**காலம்** : சகாப்தம் 1569, (கி.பி. 1647).

**செய்தி** : செவலூர் பள்ளர்களுக்குத் குடிதண்ணீர் குளம் இல்லாதிருந்த தன் பொருட்டு உலகப்பன் சேர்வைகாரர் அவர்கள் ஆணையின் பேரில் மேற்படியூர் நாயகத்தா தேவன், உத்திங்க தேவன், பகுப்பதேவன், சிலம்பத்தேவன் ஆகிய நான்கு மறவர்களது காணியாட்சியான அரங்கன் வயலில் நான்காள் நடவு நிலத்தை விட்டு ஊரணி வெட்டிக்கொள்ளச் சொன்னது.

1. உ. சுவத்தி
2. மன் கி(டே) றத்திறே
3. த் துவாபர கலியு
4. க சகாத்தம் 15
5. 69 மேல் செல்(லா)
6. நின்ற க(ா)லத்தில்
7. சவுமிய ஹ வைய்
8. யாசி மீ 23.உ.பள்
9. ளருக்கு தண்ணீ
10. ர் எடுக்க ஊரணிய
11. ல்லாத படியினா
12. லே உலகப்பன்

13. சேருவை காரணவர்
14. கள் புண்ணியமா
15. க நாயகத்தாதே
16. வனும் உத்திங்க
17. தேவனும் பசுப்ப
18. தேவனு(ம்) சிலம்பத்
19. தேவனும் இவர்
20. கள் நாலு பேரு உ
21. ள்ளிடார் காணியாட்
22. சியாக அரங்கன் வய
23. க்கலில் நாலாள் ந
24. டவு விட்டு ஊரணி
25. வெட்டிக் கொள்ளச் சொ
26. ன்ன படியினா
27. லே நாலுபேருக்கும்
28. நாலு துப்படி குடுத்
29. து ஊரணி வெட்டிக்
30. கொள்ளவும் மீன்
31. தண்ணீ(ர்) சந்திராதி
32. த்தவரைக்கு (ம்ய) னுப
33. விக்கவும்
34. இந்த தன்மத்
35. தை அழித்(து)வ
36. னை அரம(ஸ) னக்கு
37. இருபத்து நாலு
38. பொன்னு அபதா
39. ரம் வ(ா)ங்கி சாதிக்கு
40. ப் பிரம்பாக்கவும்
41. யிரகுப்பம் ஸ்ரீ சொ
42. க்கலிங்க நாய(க்க)
43. ரய்யன் வை
44. பாததாணை நாகுநா
45. தசேதுபதிச் சே
46. துபதி காத்ததேவ
47. ர் பாததாணை தப்பா
48. து இதுக்கு யாத(ா) மொ
49. ருவர் யிசைகே
50. டு பண்ணினவ
51. ன் கெங்கைக
52. ரையிலே காராம்ப
53. சுவைக் கொன்
54. ன தோசத்திலே
55. போகவும் யி
56. ப்படிக்கு இந்தக
57. ல்வெட்டு எழு
58. தினேன தியா
59. கன் குருந்த(ே)னன்.

**14 : 14**

**இடம்** : திருமயம் வட்டம் குளிபிறை சடங்கை வயல் கிழக்குக் கண்மாயின் புறகரையில் முரு.முத்துக்கருப்பத்தேவர் உழுகும் செட்டி செய்யின் நடுவில் நடப்பட்டுள்ள தூண் கல்வெட்டு.

**காலம்** : கி.பி.15ஆம் நூற்றாண்டு.

**செய்தி** : அரியண உடையார் மகன் தேவராயர்காலத்தில் விரையாச்சிலை உலகவிடங்கேசுவரர் கோவிலுக்குத் தேவதானமாக நில்க்கொடை கொடுத்தற்குரியது.

1. ஸ்வ ஸ்தி ஸ்ரீ மன் ம
2. கா மண்டலீ(சு)ர் சுர
3. ன் அரிய ர(ா)ய வியாபாட(ன்)

4. பாஸைக்குத் தப்பும் மூ
5. வராயிர கண்டன்
6. வீர அரியணவுடை
7. யார் குமாரன் தேவராய னு
8. க்கு செல்லா நி(ன்)ற பிலவ வ
9. ருஷம் காத்திகை மீ 30.உ
10. பொன்னமராபதி னாட்டு
11. வடபற்றுக் கூளிபிறை
12. சடங்கை வயலி(ல்) தடிஒன்று
13. விரையாச்சிலை வயக்க
14. ல் உடையார் உலகவிடங்க
15. யீசுர உடையனாயனாற்கு இ
16. ந்நிலம் தேவதானம்

**14 : 15**

**இடம்** : திருமயம் வட்டம் குளிபிறை வாகைக் கண்மாய் புறகரையில் உள்ள ஒரு கிணற்றின் அருகில் கிடக்கும் ஒரு கல்.

**காலம்** : கி.பி. 16 ஆம் நூற்றாண்டு.

**செய்தி** : குப்பை வயல் என்ற வயலிலுள்ள கிணற்றை சுந்தரத்துச் செட்டி பொன்னன் வெட்டியமைக்காக ஆசிரியம் கொடுத்ததாக இருக்கலாம். கல்வெட்டிற்குக் கீழ் முக்காலியில் பூரண கும்பமும் பூரண கும்பத்திற்கு இருபுறமும் இரண்டு குத்துவிளக்குகளும் வரைகோட்டு உருவமாக பொறிக்கப்பட்டுள்ளன.

1. குப்பை வய
2. க்கல் கிணறு
3. ஒல்லையூர் கூ
4. ற்றத்து சுந்தர
5. த்துச் செட்டி பெ(ா)
6. ன்னன் திருக்கை
7. வேல் ஆசிரியம்

**14 : 16**

**இடம்** : திருமயம் வட்டம் குளிபிறை சடங்கை வயலில் குமரப்பத்தேவர், சுப்பையா பொது கிணற்றில் அருகில் கிடக்கும் கல்லில்

**காலம்** : சகாப்தம் 1449, (கி.பி. 1527).

**செய்தி** : வாகு சமர காளிந்தேவர் குமாரன் சீவப் புலித்தேவர் என்ற வாசகம் மட்டும் உள்ளது. கல்வெட்டு முற்று பெறவில்லை. கல்வெட்டு தொடர் வாசகத்தை வைத்துக் காலிங்கதேவர் குமாரருக்கு ஆசிரியம் கொடுத்தமைக்கு உரியதாக இருக்கலாம் எனக் கருதத் தோன்றுகிறது.

1. ஸ^(பம்) சா
2. லிய வாகன (க)
3. லியுக சகாத்(த)
4. ம் 1449
5. மேல் செல்
6. லா நின்ற ச
7. றுவ சித்தி ஸ்ரீ
8. வைகாசி
9. மீ 15.உ.வா
10. கு சமர காளி
11. ந்தேவர் குமா
12. ரன் சீவப்
13. புலித்தேவர்
14. (ஆசிரியம்)

14 : 17

இடம் : புதுக்கோட்டை மாவட்டம் இலுப்பூர் வட்டம் தேராவூர் தேராக் கண்மாயின் புறகரையிலுள்ள பழைய இடிந்த சிவன்கோவில் தென்புறச் சுவரிலுள்ள கல்வெட்டு

காலம் : கி.பி. 13 ஆம் நூற்றாண்டு.

செய்தி : குலசேகரதேவரின் 30வது ஆட்சியாண்டில் தேராவூரினை வடகோனாட்டவர் பாதுகாத்தமைக்கானது.

1. குலசேகர தே
2. வற்கு யாண்டு 30
3. வது தேராவூரா
4. ன பெரிய நாட்டு
5. நல்லூர் வடகோ
6. னாட்டவர் ஆ
7. சிரியம்

14 : 18

இடம் : இலுப்பூர் வட்டம் மாங்குடி ஊருக்கு மேற்கிலுள்ள பாறைமீது கட்டப்பட்டுள்ள பழைய சிவன்கோவிலின் தெற்கு வெளிப்புறச் சுவரிலுள்ள கல்வெட்டு.

காலம் : மாறவர்மன் வீரபாண்டியன், யா. 27, கி.பி. 13 ஆம் நூற்றாண்டு.

செய்தி : இக்கோவிலின் இறைவனுக்கு இவ்வூர் வயலில் உள்ள நிலத்தின் ஒரு பகுதியைச் சுந்தரசோழபுரத்துச் சிற்றம்பலம் அருள்பெற்ற தென்னவதரையன் கொடையாகக் கொடுத்த செய்தி கூறப்பட்டு உள்ளது.

1. ஸ்வஸ்த ஸ்ரீ கோமாறு பன்மரான
2. திருபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீவீரபா
3. ண்டிய தேவற்கு யாண்டு 27
4. வயலகநாட்டு மாங்குடி உடையார் பழயா ணிசு (ரமுடைய) நாயனாற்கு ஒல்லை

5. யூர் கூற்றத்து சுந்தரசோழபுரத்து சிற்றம்பலம் உடையான் சொக்கன் அருள் பெற்றார் ஆன தென்னவன் பாண்டிகோனார் எழுந்தருளி

6. வித்த திருக்காமகோட்டம்ஆன நாச்சியர்க்கு இவ்வூர் அச்சன் செண்பகப் பெருமாள்

7. .........ம(ா)டயென் இன்மாங்குடி வயலில் வா

8. பற்றில் கொற்றத்தா முக்காணியை திருநாமத்து காணியாக நா(ன்) கெல்லையிலும் திருச்சூலத் தானமுபண்

9. ணி இன்னிலத்தால் வந்த நீர்துஞ்சா வாக்காலிடே

10. ல பாயக் கடவதாகவும் அமுதுபடி திருவிளக்கு

11. இன்னிலத்தில் முதல் கொண்டு பூசை நடத்த கடவத

12. ாக திருமலையில்லே கல்லும் வெட்டி கொ(ண்டு)

13. உடையார் திரு(முக)ப்படிக்கும் ஊரவர் சொற்படிக்கும்

14. இக்கோயில் (கணக்கு) வயலகமுடையான் திருவையா

15. றன் இன்பவனப் பெருமாள் எழுத்து.

**14 : 19**

**இடம்** : இலுப்பூர் வட்டம், சிறுகுனையூர் ஊருக்குள் உள்ள ஒரு மேடையில் கிடக்கும் தூணின் கல்வெட்டு.

**காலம்** : கி.பி. 15 ஆம் நூற்றாண்டு.

**செய்தி** : இவ்வூரிலிருந்த அரசர்கண்டராமன் திருமடத்திற்கும் அதன் நிர்வாகத்திற்கும் தாமோதரன் என்ற அரங்கன் ஆறுமுகக் காலாடிக்கு ஒரு மாவரை நிலம் திருநாமத்துக் காணியாக குடுத்தமைக்குரியது.

1. ஸ்வ ஸ்தி ஸ்ரீ
2. அழகர் தி
3. ரு மலையி(ல்)
4. அரச கண்
5. (ட) ராமன்
6. மடத்திற்
7. க்கு தாமோ
8. தரன் அர(ங்)
9. கன் திரு ஆ
10. றுமுக காலா
11. ட்டிக்கு கு
12. (டு)த்த நிலம்
13. ஒரு மாவ
14. ரையும் திரு
15. நாமத்து கா
16. ணி.ய.........
17. யக்கு இரத
18. திருநாள்
19. திரு..........
20. யிற்றை..........
21. எடுக..........

14 : 20

**இடம்** : இலுப்பூர் வட்டம், சுந்தரப்பட்டி அணையில் வைத்துக் கட்டப்பட்டுள்ள ஒரு பலகைக் கல்லிலுள்ள கல்வெட்டு.

**காலம்** : கி.பி. 19 வது நூற்றாண்டு.

**செய்தி** : ரெங்கம் பல்லவராயர் அணை கட்டியமைக்குரியது.

1. மகாராச மானியரா
2. ய ரெங்கம் பல்ல
3. வராயறவர்களால் வி
4. ரோதுகிருது ஷு பிற
5. ட்டாசி *மீ* 23.உ. உரையி
6. யில் யிந்த அணை கட்டினது
7. குமஸ்(த்)ா ரெங்குப் பிள்ளை.

14 : 21

**இடம்** : புதுக்கோட்டை மாவட்டம் குளத்தூர் வட்டம், சீமானூர் குளத்தின் புற கரையில் அரங்கசாமி தென் கொண்டாரின் கரையோரத்துச் செய்யின் நடுவில் நட்டுள்ள தூணில் உள்ளது.

**காலம்** : மூன்றாம் குலோத்துங்கன், யா. 19.

**செய்தி** : சிறுபாலூரிலுள்ள கரபாண்ட நாயனார் கோவிலுக்கு ஏற்படுத்திய நந்தவனம் அழிவு செய்தவருக்கு ஒருமா நிலம் தெண்டம் கொடுத்திட ஆணையிட்டது.

**1ஆம் பக்கம்**

1. ஸ்வ ஸ்தி ஸ்ரீ குலோ
2. த்துங்க சோழ தே
3. வற்கு யாண்
4. டு 19 பத்தொ
5. ந்பதாவது
6. சிறுபாலூரி(ல்) பி
7. ள்ளையார்
8. கரபாண்டா
9. ர் திருந(ந்)தவ
10. ணமும் வீரபத்தி
11. ரநல்லூரில் எ
12. ......... சிறுபா
13. லூரால்.........

**2ஆம் பக்கம்**

14. இ(து) அழிவு
15. (பி)ழை பண்
16. ணிநரால்
17. பிள்ளையா
18. ரக்சனம்
19. க்கோவிலுக்கு
20. மேற்கேய்
21. ஒரு மா
22. நிலம் தெ
23. ண்டம் வி
24. டக் கடவோ
25. ம்மாக.

14 : 22

இடம் : குளத்தூர் வட்டம் சித்துப்பட்டி குடிதண்ணீர் ஊரணியின் கிழக்குக் கரையில் தரையில் கிடக்கும் ஒரு துண்டுக் கல்லில் உள்ளது.

காலம் : வீரராஜேந்திர சோழர் (கி.பி. 13 ஆம் நூ.)

செய்தி : இது ஒரு துண்டுக் கல்லாக உள்ளதால் வீரராஜேந்திரனின் பெயரையும் இவ்வூர் சிற்றூர் என்ற பெயரையும் அது உறத்தூர் கூற்றத்தின் பகுதியாக விளங்கியமையையும் அறிய முடிகிறதே தவிர ஆட்சியாண்டு இல்லாததால் துல்லியமான காலத்தை அறிய முடியவில்லை.

1. ஸ்ரீ வீரராஜேந்திர சோழதேவற்கு
2. (உற)த்தூர் கூற்றத்துச் சிற்றூருடை..........
3. ..........டையில் திருவாசலுக்கு வடக்..........

# 15. புதுக்கோட்டை அருங்காட்சியகச் செப்பேடு

செ.கோவிந்தராஜ், புதுக்கோட்டை

15 : 1

**இடம்** : புதுக்கோட்டை அருங்காட்சியகச் செப்பேட்டின் ஒருபுறம் தானம் குறித்த செய்திகள் உள்ளன. மறுபுறம் முழுதும் பல்வேறு புடைப்பு சிற்பங்கள் காட்டப்பட்டுள்ளன.

**காலம்** : கி.பி. 1582.

**செய்தி** : முருகனின் படைவீரர்களான நவவீரர்களில் முதல்வரான வீரபாகுவுக்குத் திருமேனி கொண்டு பூசைத் திருப்பணி நடக்க பல்வேறு தொழில்புரிவோர் அளித்த தர்மத்தை இச்செப்பேடு பட்டியலிடுகிறது. பின்புறம் உள்ள சிற்பப்பகுதி ஒன்றன்கீழ் ஒன்றாக 7 பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. மேற்பகுதியின் மையத்தில் வீரவாகு நான்கு கைகளுடன் நேராய் நிற்கிறார். கைகளில் கத்தி, கேடயம், வில், அம்பு ஆகியவை காணப்படுகின்றன. அவரது வலது இடது பக்கங்களில் ஆடு மற்றும் மயில் காட்டப்பட்டு உள்ளன. அத்துடன் காவடி போன்றவைகள் காட்டப்பட்டுள்ளன. அதற்கு கீழ் இரண்டு வரிசைகளில் 8 வீரர்கள் கையில் கத்தி கேடயத்துடன் நிற்கின்றனர். நான்காவது வரிசைகளில் நாதஸ்வரம் கொம்பு முதலான இசைக் கருவிகளும் அய்ந்தாவது வரிசையில் உடுக்கை மிருதங்கம் ஜால்ரா போன்ற இசைக் கருவிகளும் ஆறாவது வரிசையில் ஒரு மனிதனின் தலை கலப்பை போன்றவைகளும் ஏழாவது வரிசையில் கொடி, கட்டுமரம், பணப்பை, எண்ணை ஆட்டும் செக்கு போன்றவைகளும் காட்டப்பட்டுள்ளன.

1. உ ஸ்வஸ்திஸ்ரீ சகாப்தம் 1504 இதன்மே
2. ல் செல்லாநின்ற சித்ற பானு பங்
3. கூனி மீ 15 திருவிடைற்கழி குமாரசு
4. வாமியார் உடைய வீரபாகு தேவ(ர்)க்கு
5. படைபத்து கச்சிராயர்ரும் மழவராய
6. ர் சோழகனார் காலாக்க தோழன்னு
7. ம் பலனாட்டு கைக்கோள முதலிய
8. ள்ளும் நகரத்தார் படையுள்ளர் சிப்பியர்
9. மயில்க்கொடி மரக்காயர் இடங்கை
10. உள்ளுப் பட்டாரும் சமையம் குடுத்தோ

11. ம் தறிக்கு பணம் ½ தான நிறுபாகமாயி யிருக்
12. குறபேர்கள்ளுக்கு ப ½ பல தொழில்லாய்
13. இருக்குற கைக்கோளர்க்கு தலைகட்டுக்கு
14. ப 24 மண்டபக் கொது நட்டுவன்க்கு ப ½
15. னாகபாச கொத்துக்க ப ½ தேவரடியார்
16. சேவுகத்து பு 24 வில்லுக்கு பு 24 செக்குக்கு
17. ப ½ காவேரி நகரத்தார் தலைக்கட்டுக்கு
18. பு 24 சிப்பியர் படையுள்ளர் மரக்காயர்
19. தலைக்கட்டுக்கு பு 24 கண்ணப்புகோத்
20. திரம் பேர்க்கு பு 2 சித்துற்கு பு 1 வீரபாகு
21. தேவரை திருமேநிக் கொள்ளவும் பூசை தி
22. ருப்பணி திருநாள் நடக்கவும் கட்டளை யி
23. டோம் இந்(த) தந்மத்துககு வருஷவத்தினை
24. யாக குடுத்துவர கடவாராகவும் இத்தம்(ம)த்
25. துக்கு யாருவர் அகிதம் பண்ணினால் கெ
26. ங்கைகரையலே காறாம் பசுவைக் கொண்
27. ண பாவத்திலே போக கடவாராவும் பிறாம
28. ணரை கொண்ண தோஷத்திலே போ
29. ககடவது இவகள் சொல்படிக்கு கந்த
30. புறாண ஞ(ா)ன பிறகாசர் எழுத்து உ.





# 16. தேவரடியாரின் கல்லறைக் கல்வெட்டு

பா.சாம் சத்தியராஜ், மதுரை.

**இடம்** : திருப்பரங்குன்றம் அனைத்து மகளிர் காவல் நிலையம் அருகில் உள்ள கல்லறை ஒன்றில் காணப்படுகிறது.

**காலம்** : கி.பி. 18 ஆம் நூற்றாண்டு.

**செய்தி** : பாப்பாள் என்ற தேவரடியாருக்கென சமாதி (கல்லறை) எழுப்பியதைக் கூறுகிறது. சுமார் 6 அடி நீளம், 6 அடி அகலம், 6 அடி உயரத்தில் இச்சமாதியானது கட்டப்பட்டுள்ளது. உட்புறத்தில் செங்கல் மற்றும் சுதையும், வெளியே செவ்வக வடிவத்தில் பல கற்களை இணைத்து இக்கல்லறை கட்டப்பட்டுள்ளது. இக்கல்லறையின் முன்பக்கத்தில் இரண்டாவது அடுக்கில் சுமார் 1 அடி உயரம் 6 அடி நீளத்தில் கல்வெட்டு காணப்படுகிறது. 3 அடி நீளமுள்ள 2 கற்களை இணைத்து இக்கல்வெட்டு செதுக்கப்பட்டு உள்ளது. இக்கல்வெட்டில் 5 வரிகள் உள்ளன. தாது வருடம் மாசி மாதம் 30ஆம் தேதி திருப்பரங்குன்றத்திலிருக்கும் தேவரடியார் பொன்னம்மாள் மகளான பாப்பாள் இறந்து போகின்ற காலத்தில் தன்னுடைய சொத்துக்களை விற்று தனக்கு சமாதி (கல்லறை) கட்டும்படிக்கும், துவாதிசி கட்டளை (பன்னிரெண்டாம் திதி) நடத்தும்படிக்கும் அத்தியான சேனாபதி அய்யர் மற்றும் குமாரசாமியா பிள்ளை என்பவர்களிடத்தில் சொன்னபடி நடத்தப்பட்டிருக்கிறது.

1. உ தாது வரு மாசி *மீ* 30 திறுப்பறங்குன்றதிலிறுகும் தாசி பொ
2. ன்னம்மாள் ம(க)ள் பாப்பாள் யிறந்து போற காலத்தில் தன்னுடைய
3. சொத்துகளை வித்து தனக்கு சமாதிகட்டும் படிக்கும் துவாதெசி கட்ட
4. ளை நடத்தும் படிக்கும் அதியான சேனாபதி அய்யற் குமாறுசாமியா
5. பிள்ளை யிடத்தில் சொன்னபடிக்கி நடத்தியிருக்குரது உ.

# 17. செட்டிக்குளம் முருகன் கோயில் வரலாறு கூறும் செப்பேடு

இல.தியாகராஜன், அரியலூர்
பெ.இரவிச்சந்திரன், அரியலூர்

**இடம்** : பெரம்பலூர் மாவட்டம், குன்னம் வட்டம், செட்டிக்குளம் திரு.சேகர் பண்டாரம் அவர்களிடம் உள்ளது.

**காலம்** : துறையூர் பாளையக்காரர் நல்லப்ப ரெட்டியார், சகவருஷம் 1696, கலிவருஷம் 4776, (கி.பி.1774).

**செய்தி** : இச்செப்பேடு துறையூர் பாளையக்காரர் நல்லப்ப ரெட்டியார் ஆட்சிக் காலத்தில் எழுதப்பட்டுள்ளது. இதை எழுதியவர் கணபதி ஆசாரி. இப்பாளையக்காரரின் நாட்டைச் சேர்ந்ததாக செட்டிக் குளம் குறிப்பிடப்படுகிறது. இங்கு எழுந்தருளியுள்ள ஏகாம்பர நாதர்-காமாட்சி அம்மன் சன்னதிக்குக் கிழக்காகவும் நாட்டார் மங்கலத்துக்கு மேற்காகவும் அமைந்துள்ள வடபழனியங்கிரியில் வீற்றிருந்தருளுகிற ஆறுமுக சாமியாருக்கு திருப்பணி வேலை நடத்த் வேண்டும் என்று பள்ள தாண்டவ பண்டாரத்தின் மகன் சுப்பிரமணி பண்டாரத்தின் கனவில் இறைவனான முருகன் வந்து சொன்னார். அவர் இச்செய்தியைக் காஞ்சிபுரம் காமாட்சி அம்மன் அருள் பெற்றவரும், அக்கசாலைத் தலைவரும் அனுமக் கொடி, மகரக்கொடி, அன்னக் கொடி, சிங்கக் கொடி, புலிக்கொடி, ரிஷபக் கொடி, கருடக் கொடி, மயில் கொடி படைத்தலைவரும் துறையூர் காமாட்சி அம்மன் அருள் பெற்றவருமான ஐந்து ஜாதி பஞ்சாளத்தார் 74-ஆகரணத்தார் ஆகியோரிடம் சென்று சொன்னதன்படி அவர்கள் அனைவரும் கூடி வடபழனியங்கிரியில் உள்ள சுப்பிரமணிய சுவாமிக்குத் திருப்பணி, தீர்த்தம், மடம், ஆலயம், நந்தவனம் ஆகியவை அமைப்பதற்குப் பொருள் வழங்கி இச்செப்பேட்டையும் கொடுத்துள்ளனர். அதன்படி இடங்கைப் பிரிவை சேர்ந்த இந்த ஐஞ்சு ஜாதி பஞ்சாளத்தார் அனைவரும் தலைக்கட்டுக்கு ஒரு பணம் வீதம் கல்யாணத்துக்கு ஒரு பணம் வீதமும் மகமை கொடுத்து இத்திருப்பணியை நடத்துவதென முடிவு செய்துள்ளனர்.

இப்பட்டையம் செட்டிக்குளத்தை முருகனின் படைவீடு என்றும் வடபழனி மலை எனவும் குறிப்பிடுகிறது. இங்குள்ள மலைமேல் எழுந்தருளியுள்ள முருகன் தண்டாயுதபாணி சுவாமி என அழைக்கப்படுகிறார். இக்கோயில் ஏகாம்பரநாத சுவாமி கோயிலுக்கு

கிழக்கு நாட்டார் மங்கலத்துக்கு மேற்கில் அமைந்துள்ளதாக பட்டையம் குறிப்பிடுகிறது. மேலும் சிவபெருமான் கைலாய மலையில் எழுந்தருளியுள்ளபோது தேவர்கள் சூரபன்மன் உள்ளிட்ட அசுரர்களால் ஏற்பட்ட துன்பத்தைப் போக்க வேண்டுமென்று முறையிட்டனர். அதன்படி பரமசிவன் ஆறுமுக சுவாமியை ஈன்று அவருக்கு மனோகரம் என்னும் சக்தி படையையும், வீரபாகு மற்றும் ஏராளமான படைகளையும் வழங்கினார். முருகன் சூரபன்மன் முதலிய அசுரர்களை வென்று தேவர்களைச் சிறை மீட்டு தேவேந்திரனுக்கு ஐராவதம், இந்திராணி, பொன்னுலகம், கற்பக பூங்காவனம் ஆகியவற்றை கொடுத்தருளினார். பிறகு முருகன் தெய்வானையையும், வள்ளியையும் திருமணம் பண்ணி அவருக்கு மனோகரமான ஸ்தலமான இந்த பழனிபுரியிலே எழுந்தருளியிருப்பதாகவும் பட்டையம் கூறுகிறது. இப்பட்டையம் வைத்துள்ள சேகர் பண்டாரம் பள்ளர் இனத்தவர். இவர் பட்டையம் கூறும் பள்ளதாண்டவ பண்டாரம், சுப்பிரமணிய பண்டாரம் ஆகியோரின் வம்சத்தில் வந்தவராவார். இவர் செட்டிக்குளம் மலைமேல் உள்ள சேவல் கொடியோன் கோயில் பூஜை செய்யும் பரம்பரை உரிமையுடையவராவார். ஐஞ்சுசாதி பஞ்சாளத்தார் என்போர் கன்னான், கருமான், தட்டான், தச்ச ஆசாரி, சிற்ப ஆசாரி, ஆகிய இனத்தவர் ஆவர். இவர்கள் இடங்கை சாதிப்பிரிவைச் சேர்ந்தவர்கள் என்று இச்செப்பேடு குறிப்பிடுகிறது.

**பட்டயத்தின் முன்பக்கம்**

1. கணப்பதி ஆசாறி
2. உ சாலிவாகன சகாற்த்தம் 1696 கலியுகம் 4
3. 776க்கு மேல் செல்லா நின்ற மன்மத ஸு மார்க
4. ழி மீ 13 கார்த்திகை நக்ஷசெத்தரம் திதி பஞ்சமி
5. கூடின சுபதினத்தில் ஸ்ரீ கயிலாச பறுபதத்திலே
6. யீசபரநும் யீஷ்வரியும் யேகந்த சபையிலே யி
7. ருக்குற னாளையி லோகத்திலே சூரபற்ப்பன் முதல
8. ஈன அசுராதிகள் உபத்தரியத்தினாலே தேவாதிகளான
9. வரும் கைலாசத்திலே போயி முறையிட்டபடியி
10. னாலே ஸ்ரீ கண்ட பரமசிவனுக்கிரக்கமாகி ஆறுமுக
11. சாமியாரை யீன்றளி மனோகரமென்னு
12. ம் சத்தி வேலாயுதமுங் குடுத்து வீரபாகுதேவை
13. ர யுங்கூட்டி அனேகம் பூதப்படைகளுடனே சூ
14. ரனிட யிருக்கை யடைந்து சூரபற்ப்பன் முதல

15. ஈன அசுராதிகளைச் செயம் பண்ணி தேவந்
16. சிறை மீட்டு தேவேந்திரனுக்கு அயிராபதமும்
17. யிந்திறிணியும் பொன்னுலகமும கற்பகப்
18. பூங்காவனமும் அருளிச் செயிது தெய்வியா
19. னையை கலியாணம் பண்ணி குறவர்வனத்திலே
20. ல வள்ளிஅம்மையைக் கலியாணம் பண்ணி த
21. மக்கு மனோகரமான ஷ்தலம் பழணாபுரியிலே யெ
22. ழுந்தருளி சகலமான சனங்களும் வந்து சேவி
23. க்கும்படி வீத்திருந்தருளிய ஆறுமுக சுவாமியார் தம
24. க்கு சந்தோழமான ஷ்தலம் யிந்த பழணாபுரிக்கி
25. வடகிழக்காகிய துறையூர் னாடு அந்த னாட்டுக்க
26. திபதியாகிய றாசாதிராசன் றாச மாற்த்தாண்
27. டன் றாசபரமேஷ்ரன் கண்டனாடு கொண்

பட்டையத்தின் பின்பக்கம்

28. டன் கொண்டனாடு குடாதமண்டலாதிபதியா
29. கிய பண்டைகுலாதிபதி ஆண்டவர்கள் றாயமா
30. னிய றாயஸ்ரீ நல்லப்பரெட்டியாரவர்கள் னாட்டிலே
31. லசெட்டிக்குளமென்னும் திருப்படை வீட்டிலெழுந்
32. தருளிய யேகாம்பரனாதர் காமாஷ்சி அம்மன் சன்
33. னதிக்கி கிழக்காக நாட்டார் மங்கலத்துக்கு மேற்க்காக வ
34. ட பழணியங்கிரியில் சகலமான சனங்களும் வந்து சே
35. சவிக்கும்படி வீத்திருந்தருளிய ஆறுமுகசாமியார் திருப்ப
36. ணி வேலை நடத்த வேணுமென்று பள்ளதாண்டவ
37. பண்டாரத்து மகன் சுப்பிறமணிய பண்டராத்துடனே
38. ன சொற்ப்பனம் சாதிச்சபடியினாலே அந்தப்ப
39. ண்டாரம் காஞ்சிபுரம் காமாஷி அம்மன் அருளும் வர
40. ப்பிறசாதமுடையவறான மேகவாகனமுடையவறா
41. ன மாந்த நகர வேந்தன் மகுட தியாகியான அக்கசாலை
42. த் தலைவரான அனுமக்கொடி மகரக்கொடி அன்னக் கொடி பு
43. லிக் கொடி சிங்ககொடி ரிழபக்கொடி கெருடக்கொடி மயி
44. ல்க்கொடி படைத்தலைவறான துறையூர் காமாஷ்சி அம்மன்
45. வறப்பிறசாதியான அஞ்சுசாதி பஞ்சாளத்தார் எழுபத்[து] னா
46. லு ஆகாணத்தாருடனே வந்து சொல்லிக்கொண்டபடியி
47. னாலே அவர்களெல்லாருங்கூடி யிந்த வடபழணியங்கி

48. ரியிலே சுப்பிறமன்னிய சாமியாருக்கு திருப்பணியும் தீற்
49. த்தமு மடவாலையமும் நந்தாவானமும் மென்மேலும் உண்
50. டாவதாக வேணுமென்று பட்டையம் குடுத்தபடி பட்
51. டையமாவது நம்ம யிடங்கையைச் சேந்த சகலம
52. ான சனங்களும் தலைக்கட்டுக்கு பு-க பணமு கலியா
53. ணத்துக்கு பு-க பணமும் குடுத்து யிந்த தற்மம் மென்
54. மேலும் பரிபாலனம் பண்ணி நடப்பிவிச்சுக் கொண்
55. டு வரவும் யிந்த தற்ம்மத்தை யாதாமொருத்தர் நடப்பிச்
56. சுக் கொண்ட பேர்கள் காசியிலே கெங்ககரையிலே
57. வெகுதற்ம்மமும் சிவாலையமும் பண்ணின பலன் வ
58. ந்து கிடைச்சு புத்திர மித்திர பாரம்பரியமாயி பூமியி
59. லே வாழ்ந்து கொண்டு சுகத்திலே யிருப்பார்கள் சுப்
60. பிறமன்னியசாமி வள்ளி அம்மை தேவ வியானை அம்
61. மனும் அதிகபாக்கியத்தைக் குடுத்து ரஷ்ச்சிப்பார்கள்
62. யிந்த தற்ம்மத்தை விச்சினம் பண்ணின பேர்கள்
63. கெங்கை கரையிலே காராம் பசுவைக் கொண்ண
64. தோழத்திலே போகக் கடவதாகவும் வ.

# 18. இடைப்பாடி பருவதராஜகுல மீனவர் செப்பேடு

அரு.பரமசிவம், இடைப்பாடி.

இடைப்பாடி, சேலம் இரயில்வே சந்திப்பில் இருந்து ஈரோடு செல்லும் பாதையில் உள்ள மகுடஞ்சாவடி எனும் சந்திப்பில் இறங்கி, மேற்குப்புறமாகச் செல்லும் பாதையில் பத்தாவது மைலில் உள்ளது.

இவ்வூர் சங்ககிரி மலைக்கோட்டைக்கும் இதன் வடக்குத்திசையில் உள்ள ஆவணிப்பேரூர்க்கும் இடையில் திப்புசுல்தான் ஆட்சியில் படைவீடாக இடைபாடி வீடாக இருந்தது; தற்போது ஆவணிப்பேரூர்க் கோட்டை மண்மேடிடப்பட்டு, புகையிலையைப் பயிரிட்டு வருவதைக் காணமுடிகிறது.

இவ்வூரில், ஏறத்தாழ 450 ஆண்டுகட்கு முன் திருக்கோயிலூர், திருவண்ணாமலை, கள்ளக்குறிச்சி ஆகிய கிழக்கு மாவட்டங்களிலிருந்து பல்வேறு காரணிகளால் வெளியேறி, வாழும் பருவதராஜகுல மீனவர்குடிகளிடம் ஒருசெப்பேடு கிடைத்துள்ளது; இச்செப்பேடு 35 செ.மீ. நீளமும், 27 செ.மீ அகலமும் உடையது.

இச்செப்பேட்டிற்கு உலகளந்தார் செப்புப் பட்டயம் என்ற பெயர் உள்ளது; இப்பட்டயத்தை பேணி வைத்திருக்கும் மீனவப் பழங்குடி, தம்மை உலகளந்தான் வகையறா என அழைத்துக் கொள்கின்றனர்.

கி.பி. 1912 இல் விழுப்புரம் மாவட்டம் மலையனூர் ஆலய ஸ்தானிகர் திருவாளர் வீரப்ப உபாத்தியாயர் பதிப்பித்த ஒரு நூலில் ஸ்ரீ அங்காள பரமேசுவரி உர்ப்பவ புராண சரித்திரமும், ஸ்ரீபர்வதராஜன் சரித்திரமும் தத்துவகுல ஞானபோதினி என்ற வழிநடைப்பதம் என்ற இயலும் உள்ளன.

தத்துவகுல ஞானபோதினி என்ற வழிநடைப்பதம் எனும் இயலில் 90 எண்ணிக்கையுள்ள புறமண அமைப்புகளடங்கிய மீனவப்பழங்குடிகளின் பட்டப்பெயர்கள் நான்கு செய்யுட்களாகப் பாடப்பெற்றுள்ளன. அவை பின்வருமாறு குறிப்பிடப்பட்டுள்ளன. பொன்னாட்டு மன்னர், மைநாகப்பிரியன், உலகளந்த சாது, அஞ்சாப் பெரும்புலி, வாதாயி, திரிபுரக்காளி, காளத்தி, நேரான சாத்திரப்பிரியன், ஆதியண்டன், சேப்பிள்ளையார், நன்னெஞ்சப் பளிங்கர்.

தென்னாட்டுப்பிரியன், வார்த்தை நிஜபஞ்ச நாயகன், சாது, கூரான அம்புறாப்பணிக்கன், இளந்தாமணிக்கன், குணம் பெரிய நாடன், மெய்போது, கோமளப்பிரியன், ஏடைவான் காணும் கோலவாளப்பிரியன் சாது, ஏடளவான எமகிரி, சூரியப்பிரியன், இயம்பும் கண் ஆயிரம் காணும் மனம் ஏங்கா சோமன்நாடன், ஜெகதலப்பிரியன், லோகப்பிரியன், விஷ்ணுகந்தான்,

வேதநாயகன், சங்கதி ஆலோலன், சமுத்திரபாண்டி மாலையிட்டான், மஞ்சிகப்பிரியன், மதிகலைப்பிரியன், காசிபுரிநாடன், விதிதீர்த்தான், மாதர் புகழ் ஆசுகல்லப்பிரியன், திக்கோட்டி, எதிர் மாயன் கணபதி, அடக்கு பாசி நாடோட்டி, பொன்வலை மழுலோடேந்தி, மெய்யன்பூணும் தீதற்ற உலகநாதன், சிறந்த பொன்முடிநாதன் காணும் மனதீரன், நீலகண்டப்பிரியன், கார்த்திக் காண்டன், செப்பும் கார்த்திகேயன், பணிக்கன், கண்டன், களப்பாளன், சம்பரா பணிக்கன், பாட்டுவாண்டன், ப்ரீதிலிங்கன், பாயும் கூர்வேல் ஒடித்தான், நாட்டுச்சாமன், நதிபாசிபகிர்சித்ரமொழி, மணிபரவகுரிசி, சங்கேந்தி, ஜெகதலப்பிரியன், மல்லன், கரையுருட்டான், பொல்லாமாய்கைவெட்டி, விளங்கன், மாயன், வல்லாளன் மனங்குளிர்ந்தான், பஞ்சைச்சீரும் அணி சித்ர சேனைப்பிரியன், நெத்திவிழி செயநாடன், வர்ணாப்பிரியன், அன்பான செமுங்கோதை கண்ட சாத்ரப்பிரியன், அறிவு குளுந்தாபணிக்கன், செல்லப்பிள்ளை, அண்ணாமலைப்பிரியன், அழகு உண்ணாமுமலை, அத்தி சேணாடன்பிரியன், மாயக்குண்டலி, பட்டநாயகன், நிலங்காத்தான், கஞ்சியப்பிரியன், பார்த்தரணி புகழ்சேர, பாண்டிய நாடு பஞ்சபவகர்மம் துலைத்தாளும் பரமனைத்தொழும் சோழன், கொல்லவட்டான் என்னும் பட்டப்பெயர்கள் கூறப்பட்டுள்ளன.

சேலம் மாவட்ட ஆவணத்தைத் தொகுத்த I.J. ரிச்சர்ட்ஸ் (1918). இதன் தொகுதி IIல் இம்மீனவர்க்கு 96 அகமணப் பகுப்புகள் உள்ளன என்றும், அவற்றுள் உலகளந்தார், மயினாகப்பிரியன், அஞ்சாப்புலி, மழுவேந்தி, திருப்புறம்களி, வாதாயி, மள்ளன், தீக்காலி, இரல்லான், எமிதிரிப்பிரியான், சூரியப்பிரியான், பொன்னாத்து மன்னன் என்பனவற்றைக் குறித்துள்ளார். இவற்றை இவ்வினத்தின் Exogamus Clans என்றும், it is derived from tribal heroes என்றும் குறித்துள்ளார்.

தமிழ்பேசும் செம்படவர்கள் 1918 மக்கட்தொகைக் கணக்குபடி திருச்செங்கோடு வட்டத்தில் 7353 பேரும், தெலுங்கு பேசும் பெஸ்தர்கள் 735 பேரும் கன்னடம் பேசும் தொரையர் 1852 பேரும் இருந்துள்ளனர்; தற்போதைய சேலம், தருமபுரி, கிருஷ்ணகிரி, ஆந்திர மாநிலம் சித்தூர், குப்பம், பெரியார் மாவட்டப் பெரிய கொடிவேரி, சேலம் மாவட்ட இடைப்பாடி ஆகிய ஊர்களில் இம்மீனவ இனமக்கள் பெருந்தொகையினராக வாழ்ந்து வருகின்றனர்.

தமிழகத்தில் வாழும் ஒவ்வொரு தமிழினமும், தமக்குரிய புறமணக்குலங்களைப் (exogamus clans) பெற்றுள்ளன.

நீலகிரி வாழ் படகஇனம் மாரி, மதலி, கத்தூரி, பெள்ளி, நாகம், சிலந்தி எனும் புறமணக்குலங்களைப் பெற்றுள்ளதைப் போல், தெலுங்குதேசம் போயரினம், குக்கலர், பூல, சல்லகலெ, வெல்கமீதி, நெமிலி, பில்பத்ரி, ஜிங்கலா, மேகலர், ஜெரிபோது, சங்கதி, எம்மலவாரு, மீன்னவாரு, மஞ்சள்குலம், கரும்புகுலம், ஜம்பு, தாலிசெட்டு, மல்லெ, பெந்பொல்லு என்ற புறமணக்குலங்களைப் பெற்றுள்ளதைப் போன்று, தமிழகத்தில் வாழும் மள்ளரினம் அஞ்ஞா, அம்மா எனும் புறமணக்குலங்களைப் பெற்றுள்ளதைப் போன்றும், தமிழகத்தில் வாழும் படையாட்சியினம் அக்னி, நாகம், 5 நாள், 12

நான் எனும் புறமணக்குலங்களைப் பெற்றுள்ளதைப் போன்றும், தமிழகத்தில் வாழும் பறையரினம் அம்மா, வலை, சங்கு எனும் புறமணக்குலங்களைப் பெற்றுள்ளதைப் போன்றும், இடைப்பாடியில் வாழும் பருவதராஜகுல மீனவரினம் காணிகள் எனும் அமைப்பில் 25 புறமணக்குலங்களைப் பெற்றுள்ளன. அவையாவன :-

அண்ணாமலையார் காணி, அத்திக் காணி, இராசரீகக்காணி, இராசரீகப் பெருமங்கலக்குயக்காணி, இராசகொள்ளையிட்டான் காணி, இராவுத்த நல்லூர்க்காணி, இலக்கண்டபரிக்காணி, எலும்பூர்க்காணி, கணபதிபுரிகாணி கொக்கோட்டி பேர்பட்டன், சமுத்திரகரயையாயி காணி, சமுத்திரபாண்டி மாலையிட்டான் காணி, சித்திரைக்காணி, சோழபாண்டிக்காணி, திருக்கோயிலூர்காணி, திருநாவலூர்க்காணி, பஞ்சமாதேவிக்காணி, பாசூர்க்காணி, பாம்பறுத்தான் காணி, பிரீதிலிங்கபிரியான் காணி, புல்லூர்க்கட்டிக்காணி, மஞ்சப்புத்தூராய் காணி, வீராணம் காணி, வேட்டைப்பரசல் காணி, பிச்சாண்டார்காணி என்பனவாகும்.

**இவற்றுள் திருக்கோவிலூர் காணி பத்து உட்பிரிவுகளையுடையது. அவையாவன :**

முப்பனாங்கலியன் வகையறா, பிச்சாண்டி பக்தர் வகையறா, பிச்சம்பலப்பண்டாரம் வகையறா, இறைஞ்சி அய்யனார் வகையறா, ஒந்தாய் தீப்பாஞ்சம்மன் வகையறா, சடையப்பர் வகையறா, வெள்ளை மாவிருசன் வகையறா, உலகளந்தார் வகையறா, இராமகாரர் வகையறா என்பன.

இக்காணியினரின் சங்கதி ஆலோலன் எனும் பட்டப்பெயர் பெற்று நதிபாசிபகிர் விக்ரம சித்ரமேழி நாட்டார் குழுத்தலைவராக ஒருவர் இருந்துள்ளார். இச்சபை விக்ரமசோழன் காலத்தில் (கி.பி.1118-1136) திருக்கோயிலூரில் இருந்துள்ளது.

இக்காணியினரில் திருமந்திர ஓலை மீனவன் மூவேந்த வேளாண் எனும் உயர்பதவியில் மலைய நாட்டை ஆண்ட இராசராசசேதிராயன் காலத்திலும் (கி.பி.1070-1120), மலையமான் கிளியூர்ப் பெரியஉடையான ஆட்சியிலும், மூன்றாம் குலோத்துங்கன் ஆட்சியிலும் இருந்துள்ளனர்.

இக்காணியினரில் இங்கு குறிக்கப்படுகிற உலகளந்தார் செப்புப்பட்டையம் தேவமகாராயராலோ (கி.பி. 1614) சத்தி அரிச்சந்திர தேவமகாராயராலோ (கி.பி.1659-1692) வழங்கப்பெற்ற உலகளந்தசாது குறித்த செய்திகள் ஈண்டு முழுமையாக ஆராயப் பெறுகின்றன.

**வேங்கிடபதியின் பண்புகள்**

வணங்காமுடிகண்டன், கண்ட நாடு கொண்டு, கொண்டு நாடு கொடாதோன் என்றும் இம்மன்னர் குறிக்கப்பட்டுள்ளார்.

கி.பி. 17-18ஆம் நூற்றாண்டில், இவருக்குக்கீழ் இலங்கையை ஆண்ட "ஆரியச்சக்கரவர்த்தி" குறிக்கப்பட்டுள்ளார்.

இவ்வேங்கிடபதி பெற்ற "சிங்களக்கோட்டத்து வல்லான்" என்ற விருது குறிக்கப்பட்டுள்ளது.

**பர்வதராஜன் குறித்துச் செப்பேடு குறிப்பது :**

'காசி நாடன்' எனும் சொற்றொடரும், 'காசிராச்சியம் பண்ணி' எனும் சொற்றொடரும் மீனவ குல முதல்வனான பர்வதராஜனைக் குறித்துள்ளது. "காசிநாடன் மகள் உலகமாதா" எனும் சொற்றொடர் உமையம்மையைக் குறித்து நிற்கிறது. "உலகமாதா" என்கிறவளான தேவி என்ற சொற்றொடர் செப்பேட்டில் பிறிதோரிடத்தில் குறிப்பிடுதல்.

**செப்பேடு தெரிவிக்கும் ஏழு கன்னியர், வீரநாராயணர் :**

"ஏழு கன்னியரில் மூத்த வுந்திர கன்னி படதி" என்றும், வீர நாராயணன் "பேரிபேர் குமாரர்" என்றும் குறிக்கப்பட்டுள்ளனர். உறையூர்ச்சோழன் (கி.பி.907-953) பற்றியும் குறிக்கப்பட்டுள்ளது.

**செப்பேட்டில் குறிக்கப்படும் சில முனிவர்கள் :**

திருநயனத்தில் செனித்த பவமுனி; (பர்வதராஜனைச் சபித்தவர்) செபலமாமுனி; பராசரமுனி (வசிட்டர் பேரர்; தனது மகன்களான தத்தன், அநந்தன், நந்தி, சதுமுகன், பருதிபானி, மாலி ஆகியோரை மீன்களாகுமாறு சபித்தவர்.

**செப்பேட்டில் குறிக்கப்படும் மீனவ மரபு :**

கந்தமூர்த்தி நயனத்தில் உதித்தபோது உதித்து, அவருக்குத் துணை புரிந்த மரபு.

**உலகளந்தார்க்கு உரிமை உடையனவாகச் சொல்லப்பட்ட நாடுகளும், அவருக்குக்கிடைத்த மரியாதையும் :**

வெளிநாடு, வாலுநாடு, அருணகரை நாடு, அஞ்சுகரைநாடு எனும் நாலு முகத்துச்சீர்மை - இந்நாடுகளில் சிவன்படவர்க்கு முதல்மரியாதையாக வெற்றிலை தரப்படுகின்ற செய்தி.

**செப்பேடு எழுதப்பட்ட நாள் :**

'காஞ்சியில் விஜய வருடம் வைகாசி மாதம் 11ஆம் தேதி பூர்வபட்சம் பூசம் நட்சத்திரம் திரயோதசி சுக்கிரவாரத்து' என்று குறிக்கப்பட்டுள்ளது.

**இடம் :**

1. காஞ்சி காமாட்சி கோயில் முன்
2. மெய்யாகூர் அய்யனார் கோயில்
3. சன்னதிதெரு, கெங்கை கொண்ட மண்டபம், ஏகாம்பரர் கோயில்

**நாள் :**

நளவருடம், பங்குனிமாதம்.

**கடன் கொடுத்தவர்**

1. செந்துறையூர் நல்லாசெட்டியார்
2. மலையனூர் வெள்ளாண் செட்டியார்
3. அரியலூர் செட்டியார்

**முன்னிலை :**

1. திருமலை வெங்கிட்டம பேட்டைச் சீர்மை ஆதனமழகி.
2. நல்லதம்பி (கி.பி. 1599 - 1619) (கீழ்க்கரை பூந்துரை நாட்டு மோரூரில் இருக்கும் வேளாள கண்ணரின் திருமலை (திருச்செங்கோடு) அத்தப்ப நல்லதம்பிக் காங்கேயன் திருச்செங்கோட்டு நல்லதம்பிக் கல்வெட்டு மோரூர்க் காங்கேயர் வழிஞர்).
3. நாகக் கொளரில் குழந்தை.
4. பெரிய வினை தீர்த்தான்.

**சாட்சி :**

1. சம்மட்டியார்
2. பரமானந்த சம்மட்டியார்
3. வசர ரட்டியார்
4. கோமுட்டியார்
5. எலவனாசூர்க் கைச்சாத்து.

**கொடுத்தது :**

எண்ணூறு பொன்.

**சில ஊர்ப் பெயர்கள் :**

நெல்லூர்ப் பாளையம், சீர்காழி, திருநாகை.

**நாயன்மார் :**

அதி பத்தர் - நாகை :

**உலகளந்தார் சிறப்பிக்கப்படுதல் :**

உம் பளிக்கை மணிக்குடிப்பற்று நாடு பெற்ற பெரியோர் என இவர் சிறப்பிக்கப்படுகிறார்; (மலையத்துவச பாண்டியனின் ஆட்சிக்கு உட்பட்ட இவ்வூர் மணவூர் என்றும், மணற்றி என்றும் குறிக்கப்பட்டுள்ளது) (இவ்வூர் யாழ்ப்பாணப் பகுதியில் உள்ளது).

**பெண் மூதாதை மரபு செப்பேட்டில் குறிக்கப்படுதல் :**

யமுனையாற்றங்கரை செம்படவ ராஜனின் மகளான மச்சகந்தை, பித்ரு முனிவரின் மானஸ புத்ரி ஆதல், பரதஅரசனின் வளர்ப்பு மகளாதல், பரிமளகந்தி என்ற மறுபெயர் பெறுதல்; வசிட்டரது பேரனான சந்தனு மன்னன் இவளது மச்ச நாற்றம் போக்கி வியாசரைப் பெற்றாள்.

**வேங்கிடபதி மகாராயா பெற்ற வெற்றிகள் :**

இலங்காபுரி கொண்ட - சோழ மண்டல - பாண்டிய மண்டல - உத்திர பூமி பிலத்தொண்டை மண்டல முதல் மகா மண்டலநாடு, கொங்குநாடு, மலைநாடு, ஆகியவற்றை வென்றவர் இவர்.

இவரது கச்சிக்கல சிங்காதனம், பொன்முடி, பொற்கால் செப்பேட்டில் குறிக்கப்படுதல்.

**புராணயுகச் செய்திகள் செப்பேட்டில் குறிக்கப்படுதல் :**

விசுவகர்மா வலையை உருவாக்குதல் - மகாதேவன் முப்பத்து முக்கோடி தேவர் - குமாரசாமி - சமுத்திரத்தில் படகாய் மித எனல் - குமாரசாமியும் படகாய் மிதத்தல் - பட்டனவனையும் சுமந்து கொண்டு மித்தல் - வீர சோழ அதியரையனையும் தோணியில் கொண்டு செல்லல் - தோணியில் சென்ற அடைந்த இமேதோணிபுரம் - சீர்காழி; இந்நிகழ்ச்சி நடந்த சமுத்திரம் பௌமசமுத்திரம் எனப்படுதல்; செபலமாமுனி எண்ணப்படி ஒரு சாபபட்ட சாதியார்க்கு முடிசூட்டி வைத்து, முடிபொன்று காசி விட்டு சீர்காழி வந்து என்ற சில செய்திகள் தளர் நடையில் சொல்லப்பட்டுள்ளன.

**உலகளந்தார் தொடர்பான சில செய்திகள் :**

உலகளந்தசாது அரசகுருவாக இருந்துள்ளார்; 108 திருப்பதிக்குமான குருவாக இருந்துள்ளார்; உலகளந்தார்க்கு, சில நாடுகளை விற்றுக் கொள்ள இச்செப்பேட்டுப் பட்டயம் மூலம் அனுமதி அளிக்கப்பட்டுள்ளது.

**செப்பேடு தெரிவிக்கும் பங்கேற்றோர் குறித்த செய்தி :**

ஞான குலமெல்லாம் கூடி, உப்பவைதாந்தாசான் எனும் 108 திருப்பதிக்குமான குரு தலைமையில் திருமலைப் பெருமாள் கோயிலில் நல்லாயங்கா சுவாமியார் முன்னிலையில் மகா நாடுகள், சான்குலத்தவர், சடைய கவுன்டன், பிடன், மறவர் ஆகியோர் பங்கேற்றனர்.

**விற்கப்பட்ட இடம் :**

வெள்ளிமலைப் பின் ஏழு செலமனாட்டு பற்றுச் சீர்மை, வெண்மலை நாடு, உதி நாடு என்பன உலகளந்தார்க்கு உரிமை உடையனவாய் இருந்துள்ளன.

[எனக்குக் கிடைத்த 'வருவதராஜகுல உலகளந்தார் செப்பேடு' நகலின் செய்திகளை நான் அறிவதற்கு உதவிய சென்னை தொல்லியல் துறையைச் சேர்ந்த ச.கிருஷ்ணமூர்த்தி அவர்களுக்கும், சென்னை சமூக விஞ்ஞானி நெல்லை நெடுமாறனார் அவர்களுக்கும், சென்னை தொல்லியல் துறை முனைவர் இராசகோபால் அவர்களுக்கும் உளமார்ந்த நன்றிகள்.]

# 19. அனுமன் கோயில் கல்வெட்டு - செங்குனம்

மு.பிரபாகரன், வேலூர் (பெரம்பலூர்)

**இடம்** : பெரம்பலூர் மாவட்டம் மற்றும் வட்டம் பெரம்பலூருக்கு வடகிழக்கே 8 கி.மீ. தொலைவில், ரேவர் கல்லூரியின் பின்புறம் அமைந்துள்ள செங்குனம் ஜெயஅனுமன் கோயில். அனுமன் சிற்பத்தின் பின்புறம் கல்வெட்டு பொறிக்கப்பட்டுள்ளது.

**காலம்** : கி.பி. 1824.

**செய்தி** : இக்கல்வெட்டு 28 வரிகளைக் கொண்டதாகும். இது தாரண வருடம் சித்திரை மாதம் 4ஆம் தேதி புதன்கிழமை சுவாமி நட்சத்திரம் கூடின சுபதினத்தில் எழுதப்பட்டுள்ளதாகக் குறிப்பிடப்படுகிறது. செங்குனம் என்ற இந்த ஊரில் வாழ்ந்த சின்னப்ப வனராஜ ஸ்ரீசுப்புரெட்டியார் அவர்களின் குமாரர் நல்லப்ப ரெட்டியார், சாம்பசிவ ரெட்டியார், மேலும் கருசடையான் மகன் ஆண்டியப்ப உடையார் இம்மூன்று நபர்களின் முயற்சியால் குளம் வெட்டியும், நந்தவனம் அமைத்தும், சாவடி கட்டியும் அவைகளை ஊராருக்கு தான தர்மம் செய்தார்கள் என்ற கல்வெட்டு கூறுகின்றது. இதை பாதுகாத்துப் பராமரிப்பதற்காக மானியமாக நிலம் நஞ்சையும் புஞ்சையும் அளித்திருக்கிறார்கள்.

1. ஸ்வஸ்தி ஸ்ரீ சாலி
2. வாகன 18
3. 46 கலியுகம் 46
4. 25 செல்லாநின்றத
5. ாருண ஷூ சிரணா ம ீ ச
6. புதன்கிழமை சுவாதி
7. ஷதிரமுங் கூடின சுபதி
8. னத்தில் செங்குனம
9. ள சுதாராகுய சின்னப்ப
10. ணவனராஜ னா சுப்புரெட்டி
11. யார் குமாரற் நல்லப்ப
12. ரெட்டியார் தமளரறுகிய
13. சாமயசிவ ரெட்டியாறலே
14. யுங் கருசவடையான் மகன்
15. ஆண்டியப்படையா னாலே
16. யுங் குளம் நந்தவனம்
17. சாவடி யிற் தற்மத செ
18. ய்யலா சசுதுயிது சவ
19. றதரஷண சராகப்பவன்
20. நிரட்சிக்ஷ அற்த மானிமம்
21. புஞ்சை 82 நஞ்சை 8ப8
22. யிதை பருபாலிநஞ் செயி
23. த் பேருகள் அஸ்வமேத யாக
24. பலமுவுண்டு யிதுக்கு யா
25. ாதா மொருவன் தற்ம
26. துக்குசாவிகாதஞ் செய்தால்
27. யாகம் அழிகா பலனான்று
28. .....................லெ³யவ..........

# 20. ஆரல்வாய்மொழிக் கல்வெட்டுகள்

எஸ்.சிவா, திருவனந்தபுரம்.

20 : 1

**இடம்** : ஆரல்வாய்மொழி (கன்னியாகுமரி மாவட்டம்) வடக்கூர் மீனாட்சியம்மன் கோயில் தெப்பகுளத்தின் அருகிலுள்ள மடையில் இக்கல்வெட்டு காணப்படுகிறது.

**காலம்** : கொல்லம் 1017 (கி.பி. 1842).

**செய்தி** : தை மாதம் 9ஆம் தேதி ஆரல்வாய்மொழியைச் சார்ந்த வணியன்வேலு மூப்பன் வைத்த சிமடு தாங்கி (சுமை தாங்கி) அதைச் செய்வித்த செய்தி இக்கல்வெட்டின் வாயிலாக வெளிப்படுகிறது. கல்வெட்டு பொறித்த இக்கல்லை வடக்குமலை ஓடைத்தண்ணீரைத் தெப்பக்குளத்திற்குத் திருப்பிவிட பாதை அமைப்பதற்காகப் பயன்படுத்துகின்றனர். இந்தக் கல்வெட்டு உணர்த்தும் செய்திகளின் அடிப்படையில் அருகிலோ (அ) வேறு எப்பகுதியிலோ அமைந்திருந்த இச்சுமைதாங்கிக் கல்லை ஆரல்வாய்மொழி வடக்குமலை ஓடைத் தண்ணீரைத் தெப்பகுளத்திற்குத் திருப்பிவிட பாதை அமைப்பதற்காகப் பயன்படுத்தியிருக்கின்றனர்.

1. 1017 ௵
2. தையும்
3. துஉ அரவ
4. ாய்(மொழி)
5. வணிய
6. ன் வேலு
7. வேலு
8. முப்பன்
9. வச்சசி
10. மடுதங்
11. கிறாசெ
12. வித்துக்க

20 : 2

**இடம்** : ஆரல்வாய்மொழி (கன்னியாகுமரி மாவட்டம்) பெரியகுளத்திலுள்ள முதல் கிணற்றின் உள்ளே அமைந்திருக்கிறது.

**காலம்** : கொல்லம் 1069 (கி.பி. 1894)

**செய்தி** : வைகாசி மாதம் 8ம் தேதி ஆரல்வாய்மொழி பணிக்கர் இனத்தவருக்கென்று ஊர்காரர்கள், சுடலைமுத்து மாடசுவாமிப் பணிக்கர் உள்ளிட்டோர் கூடி கட்டிய கிணறு கடவுள்துணை, என்றிருக்கிறது. ஆரல்வாய்மொழில் தண்ணீர் பஞ்சம் அதிகமாயிருந்த காலத்தில் பெரியகுளத்தில் மூன்று கிணறுகள் வெட்டப்பட்டிருக்

கின்றன. அக்கிணறுகளை வேளார் (குயவர்) வணிகர் (வாணியர்), ஈழவர் (பணிக்கர்) உள்ளிட்ட சாதியினர் தனித்தனியே பயன்படுத்தியிருக்கின்றனர்.

1. 1069 ஆடு வைகாசி மீ
2. அ உ ஆரல்வாயிமொழி பணிக்கம்மாரா
3. குந்ந ஊருகாறர் சுடலைமுத்து மா
4. ட சுவாமிப் பணிக்கர் முதல் பேர் கூடி
5. கெட்டிய கிணறு கடவுள் (துணை)

**20 : 3**

**இடம்** : ஆரல்வாய்மொழி (கன்னியாகுமரி மாவட்டம்) தெற்கு மலையை ஒட்டிய ராக்கோடியம்மன் கோயிலில் பட்டன், பட்டத்தி அமைந்திருக்கும் நி(லை)லக்காலில் இக்கல்வெட்டு காணப்படுகிறது.

**காலம்** : கொல்லம் 991 (கி.பி. 1816).

**செய்தி** : மாசி மாதம் 16-ம் தேதி நல்லசிவன் என்பான் மகன் பெரிய சுவாமிக்காகச் செய்த நி(லை)லக்கால் தர்மத்தைக் குறிக்கிறது.

1. 991 ஆடு மாசி மீ 16
2. யிந்த னிலகால் செய்தார்க(ள்)
3. (ந)ல்ல சிவன் செய்தான் மகன் பெரிய
4. சுவாமிறா பன்னிய முயன்க உ

# 21. கடப்பாக்கம் விக்கிரமசோழன் கல்வெட்டு

சு.இராஜவேல், சென்னை.

இடம் : கடப்பாக்கம், பொன்னேரி வட்டம், திருவள்ளூர் மாவட்டம். சிதைந்த தூங்கானைமாடக் கோவிலுக்கு அருகில் உள்ள பலகைக் கல்.

காலம் : விக்கிரம சோழன் யா. 7 (கி.பி. 1127)

செய்தி : கடற்பாக்கம் பிரம்மீஸ்வரர் கோவிலுக்கு இறையிழித்து வழங்கப்பட்ட நிலக்கொடை பற்றிய செய்தி.

1. ஸ்வஸ்தி ஸ்ரீ விக்கிரம சோழ தேவற்கு யா-
2. ண்டு ஏழாவது இலத்த மங்கலத்து
3. (ஊ)ரோம் எங்களூர் அமுதமணிச்சேரி....
4. (மேலை)த் தூணியில் மோடி எதறடி செறுக் கடற்
5. பாக்கத்து பிரஹ்மீஸ்வரமுடைய மஹாதேவற்க்கு..........
6. ..........நமாக விறல் மீண்டந் கெல்லை.......... ற-
7. லக்காணங் கிரிகைச் செலக கொண்டு
8. இறாஇயிழிச்சி இநிலத்துக்கு தாங்கள்
9. வேண்டி நடத்தலே இறைக்கப் (பெ)
10. றுவதாக யிறையிழிச்சி வீற்
11. றுக் குடுத்தோம் இலத்தமங்கல.
12. .......... ஊரோம். 1*.

---

1* இக்கல்வெட்டுப் பலகைக்கல்லில் பிறிதொரு கல்வெட்டு முன்னரே இருந்து அழிக்கப்பட்டு அதன் மீது இக்கல்வெட்டு எழுதப்பட்டுள்ளது. பழைய கல்வெட்டின் சில எழுத்துக்கள் கல்லின் விளிம்புப் பகுதியில் உள்ளன.

# 22. கொளப்பாக்கத்தில் புதிய கல்வெட்டுகள்

சு.இராஜவேல், சென்னை.

22 : 1

**இடம்** : கொளப்பாக்கம் அகஸ்தீஸ்வரர் கோவில், ஸ்ரீபெரும்புதூர் வட்டம், காஞ்சிபுரம் மாவட்டம், தனிக்கல்.

**காலம்** : ஸ்ரீவிஜய மஹாராஜா? யா. 8 (எழுத்தமைதியில் கி.பி. 8 நூற்றாண்டு)

**செய்தி** : புலியூர்க் கோட்டத்து பேரூர் நாட்டில் இருந்த குளப்பாக்கத்துக் கிழார் நாதன்தேவன் இவ்வூரில் இருந்த திருவகத்தீஸ்வரர் கோவிலுக்கு 250 குழி நிலம் அளித்த செய்தியைக் குறிப்பிடுகிறது. இக்கல்வெட்டில் கூறப்படுகின்ற அரசன் ஸ்ரீவிஜய மஹாராஜா என்ற பெயர் இதுவரை தமிழகக் கல்வெட்டுக்களில் காணப்படவில்லை. இவர் ஸ்ரீவிஜய நாட்டைச் சார்ந்த மன்னராக இருக்கலாம். இக்கால கட்டத்தில் தமிழக ஸ்ரீவிஜய நாட்டுத் தொடர்புகள் குறித்து பல சான்றுகள் உள்ளன.

1. ஸ்வஸ்தி ஸ்ரீ ஸ்ரீவிஜய மஹாராஜற்கு யாண்டு
2. (எட்டா)வது புலியூர்க் கோட்டத்துப் பேரூர் நாட்டு
3. குளப்பாக்க கிழான் நாதன் (தேவ-
4. ன் இவ்) வூர்த் திருவஹஸ்திஸ்வரத்து மஹாதேவற்க்கு ஆ-
5. சந்திர காலமும் நிசமும் மத்யானத்தொரு திருவமிர்துக்-
6. கு வைத்த பூமி தூம்பெனப்பட்டிக்கு மேற்கி-
7. ற் காட்டு குளக்கொல்லை இருநூற்றைம் பது கு-
8. ழி இதர்ம்மம் ரக்ஷிக்க கடவோம் ஊரோம் ஊரோமிது பந்மா-
9. ஹேஸ்வரர் ரக்ஷை இதர்ம்மம் ரக்ஷப்பார் பாத
10. ....................
11. துள் என்தலை மேலன.

22 : 2

**இடம்** : மேலது.

**காலம்** : கோவிராஜகேசரி வர்மர் (இராஜராஜன் முதலாம்) யா. 20 (கி.பி.1005).

**செய்தி** : குளப்பாக்கம் அஹஸ்தீஸ்வரர் கோவிலில் திருப்பலியில் காலங்கொட்டுவதற்காக 1000 குழி நிலம் தானம் அளித்த செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது.

1. ஸ்வஸ்திஸ்ரீ கோ இராஜகேஸரி பந்மற்க்கு யாண்-
2. டு இருபதாவது குளப்ப(க்க*) த்தூண் எம்மூர் அகஸ்தி-
3. ஸ்வரத்து மஹாதேவற்க்குத் திருப்பலி நிசதி இரண்டு தேசங்-
4. (காலங்) கொட்டுவதற்க்கு போஹமாயின இவ்வூர்க் காட்டுக்கரைக் கொல்-
5. லையில் கிழக்கட்டைந்த ஆயிரங்கழியுஞ் தட்டி அமஞ்சி... .....
6. வெட்டியும் இறையும் எச்சோறுங் வேதியமும் இந்த தட்டிக் காட்ட
7. பெறாதோமாகவும் வந்துள்ளதுந் திரத்துக் குடப்போமானோம் இ-
8. வருக்கு வடக்கிழ் தாழிச் செறுவிற் கீழ் நீருந் நீரோடு காலும் பெறு-
9 வதாகவும் குளத்துந் காலுமேடையுன்கின்ற பரிசே பெறுவதா-
10. கவும் இவ்வூர் (கிரக)வதியார்க்கு ஆட்டாண்டு தோறும் ஆவணி
11. த் திங்கள் முலத்து ஞான்று பன்னிரு நாவாய் (தேவனந்து எழுதா
12. .........ம்) திங்களிரண்டு வாவும் ஸங்கராந்தியும் கார்த்திகையும் அவிட்டமு
13. ந் திங்கள் இருநாளுந் திருவமிர்தும் அந்தி விளக்கிற்கும் போகமாக
14. .........ண வாயிற் சண்டிலும் பண்டங்கடோறு முகாகையுங் கொண்டு
15. ......... கடவான ,த்தளி உடையான் இது ரக்ஷிக்க கடவோம் ஊரோம் ஊரா
16. (அ)ங்கு .........யாவும் இடையூறாக நின்றார் கங்கையிடைக் குமரி இடை செய்தார்.

**22 : 3**

**இடம்** : மேலது. கல்வெட்டின் கீழ் உள்ள மற்றொரு கல்வெட்டு.

**காலம்** : கோவிராஜகேசரி வர்மர் (முதலாம் இராஜராஜன், யா. 20, (கி.பி. 1005).

**செய்தி** : குளப்பாக்கத்து அகஸ்தீஸ்வரர் கோவிலுக்கு விளக்கெரிக்க 90 ஆடு கொடுத்தது.

1. ஸ்வஸ்தி ஸ்ரீ கோவிராஜகேசரி பர்மர்க்கு யாண்டு (இராவது) 1 புலியூர் கோ-
2. ட்டத்து பேறூர் நாட்டு குளப்பாக்கத்து திருவகத்திகரம் உடைய மஹாதே-
3. வர்க்கு கலியன் கல்லடிக்கு வைத்த நந்தா விளக்கொன்று ஒன்றிக்கும் வை-
4. ய்த்த ஆடு சாவாமுவா பேராடு தொண்ணூறு இதர்ம ரக்ஷிப்பார் ஊரும் பந்மா
5. ஹேஸ்வர சந்திராதிதவன் ரக்ஷிப்பார்.

# 23. சாளுவங்குப்பம் சில புதிய கல்வெட்டுகள்

சு.இராஜவேல், சென்னை.

23 : 1

**இடம்** : மாமல்லை அருகில் உள்ள சாளுவங்குப்பம் புலிக்குகைக்கு வடக்கில் கடற்கரையை ஒட்டி உள்ள நீண்ட பாறைக்கு அருகில் அகழாய்வு செய்யப்பட்ட இடத்தில் கிடைத்த கற்றூணின் மூன்று பக்கங்களிலும் உள்ள கல்வெட்டு. நான்காவது பக்கம் சூலம் கோட்டுருவமாக காட்டப்பட்டுள்ளது.

**காலம்** : இரண்டாம் நந்திவர்மன், யா. 12 (கி.பி. 808).

**செய்தி** : இங்குள்ள பாறையில் இக்கட்டுரை ஆசிரியரால் கண்டுபிடிக்கப் பட்ட மூன்றாம் கிருஷ்ணரின் கல்வெட்டு செய்திப்படி இங்கு கோயிலொன்று புதைந்துள்ள மேடு கண்டுபிடிக்கப்பட்டது. (காண்க ஆவணம் இதழ் - 16) கட்டுரை ஆசிரியர் கொடுத்த தகவலின் அடிப்படையில் இந்தியத் தொல்லியல் பரப்பாய்வுத் துறை அகழாய்வை மேற்கொண்டு பல்லவர்காலச் சுப்ரமண்யர் கோவிலை வெளிப்படுத்தினர். பல்லவர்காலக் கற்றளிக்குக் கீழ் பகுதியில் அதற்கும் முற்பட்ட செங்கல் தளியும் இவ்வகழாய்வில் வெளிப்பட்டது. தமிழ்நாட்டில் கண்டுபிடிக்கப்பட்ட முருகனுக்கான பழமையான செங்கல் தளியாக இது இருக்கக்கூடும். நிலப்பரப்பிலிருந்து 6 அடி ஆழத்தில் கண்டுபிடிக்கப்பட்ட கல்தூண் ஒன்றில் கீழ்குறித்த கல்வெட்டு காணப்படுகிறது. மாமல்லபுரத்தைச் சார்ந்த கீரைப்பிரியன் என்பார் ஆமூர்க் கோட்டத்தில் உள்ள திருவிழிச்சில் கோவிலில் (கோவில் இறைவன் பெயர் சிதைந்துள்ளது). கார்த்திகைத் திங்கள் கார்த்திகைத் திருநாள் நடத்த 10 கழஞ்சு பொன்னை இவ்வூர் சபையார் வசம் அளித்துள்ளனர். இதன் வட்டியில் சபையார் மேற்குறித்த விழா நடத்த சம்மதிருக்கின்றனர்.

பக்கம் - 1

1. ஸ்வஸ்தி ஸ்ரீ நந்தி -
2. ப் போத்தரை -
3. யற்க்க பன் -
4. னிரண்டாவ -

பக்கம் - 2

5. (து*) (ஸ்ரீ) மாமல்ல
6. புரத்து கீரை -
7. ப் பிரியன்
8. திரு இழிச்சில்
9. (ஸ. ஹாஸிர)

பக்கம் 3

| | | | |
|---|---|---|---|
| 10. | ஸ்ரீக்கு பதின் | 23. | விழா- |
| 11. | கழஞ்சு பொ- | 24. | ச் செ- |
| 12. | ன் குடுத்தா | 25. | ய்தூ- |
| 13. | ன் அதன் பொ- | 26. | ட்டு- |
| 14. | லியூட்டு கொ | 27. | வோ(மா)- |
| 15. | ண்- | 28. | னோ- |
| 16. | டு | 29. | ம் ஸபை |
| 17. | கார்த்- | 30. | யோம் |
| 18. | திகை- | 31. | இவ்வூரும் |
| 19. | ய் கார்- | 32. | கீரைப்பிரி- |
| 20. | த்தி- | 33. | யனுக் கொட்- |
| 21. | கை (நா)- | 34. | டிக் குடுத்தோ - |
| 22. | ன்று | 35. | (ம்) |

**23 : 2**

**இடம்** : மேற்படி இடத்திலுள்ள மற்றொரு கல்தூண்.

**காலம்** : கம்பவர்மன் யா. 17, (கி.பி. 886).

**செய்தி** : மனையிற் கோட்டத்து மனையில் (மணவூர்) ஊரைச் சார்ந்த சியசர்மன் என்கின்ற ஸ்ரீகம்பபட்டன் மனைவி வசந்தனார் என்பார் திருவிழிச்சில் சுப்ரமண்யர் கோவிலில் விளக்கு எரிக்க 16 கழஞ்சுப் பொன்னை இவ்வூர் சபையாரிடம் அளித்துள்ளார். இவற்றின் வட்டியாக வரும் எண்ணையைக் கோவிலில் ஐப்பசி திங்கள் முதல் ஆண்டுதோறும் விளக்கெரிக்கச் சபையார் சம்மதிருக்கின்றனர். மேலும் மேற்குறித்த அம்மையார் கோவிலில் வழங்கும் திருவமிர்துக்கு நிலக்கொடையும் அளித்துள்ளார். சீயசர்மன் என்பார் சாண்டில்யக் கோத்திரத்தைச் சார்ந்தவர் எனக் கல்வெட்டு குறிப்பிடுகிறது.

| | | | |
|---|---|---|---|
| 1. | ஸ்வஸ்தி ஸ்ரீ (கம்ப வ)- | 9. | ப்ரஹ்மண்ணய பட்டாரர்க்கு |
| 2. | ர்ம்மற்கு யாண்டு பதினேழா- | 10. | நொந்தா விளக்குக்கு குடு- |
| 3. | வது மனையிற் கோட்டத்து ம- | 11. | த்த பொன் பதி(ன)- |
| 4. | னையிற் சாண்டல்ய (கோங்) கிழ- | 12. | ரு கழஞ்சு இப்பொன் |
| 5. | வர்களில் சியசர்ம் மன்னா- | 13. | இல் கழஞ்சின் வா- |
| 6. | ன ஸ்ரீ கம்பபட்டன் ப்ராம- | 14. | யறு நாழி எண்ணை |
| 7. | ணி வசந்தனா(ர்*) திரு- | 15. | பலிசையாக (ஆட்டாண்)- |
| 8. | விழிச்சில் (ஸ்ரீ ஸு) | 16. | டு தோறும் மு.......... |

17. அய்ப்சி செ..........
18. டத் தொண்ணூ(று)
19. நாழி எண்ணை எ-
20. ரிய்விப்போமானோ-
21. ம் சபையோம் இ-
22. ந்த பிராட்டியார் திருவ-
23. மிர்துக்குக் குடுத்த
24. கிழான் செறுவில்
25. வந்த போகம் ஆ-
26. ட்டாண்டு தோறும்
27. இருத்து குடு-
28. ப்போமானோம்
29. சபையோம்

**23 : 3**

**இடம்** : மேலது, பிறிதொரு கற்றூண்.

**காலம்** : கம்பவர்மன் யா. 18 (கி.பி. 887).

**செய்தி** : மேற்குறித்த சீயசர்மனின் மற்றொரு மனைவியான நங்கைப் பெருமான் சுப்ரமண்யர் கோவிலுக்கு விளக்கு எரிக்க அளித்த 10 கழஞ்சுப் பொன்னைப் பற்றி கல்வெட்டு குறிப்பிடுகிறது. இதனை ஊர் சபையார் ஏற்று ஆவன செய்துள்ளனர்.

1. ஸ்வஸ்தி ஸ்ரீ (11*)
2. கம்ப வர்ம்மற்கு
3. யாண்டு பதின்-
4. எட்டாவது மனை(யிற்)
5. கோட்டத்து மனை(யி
6. .........) ண்டங் கிழவர்களில் .ர-
7. .........ல சியசர்மன் பிராஹ்மணி
8. ..........
9. நங்கைப் பெருமான்
10. திருவிழச்சில் ஸுப்ர-
11. ஹ்மண்ய படாரர்க்கு நந்தாவிள-
12. க்குக்கு குடுத்த பொன் பத்து இ-
13. ப்பொன்னாலும் வந்த அறுபதினா-
14. ழி எண்ணையும் ஆட்டா-
15. ண்டு தோறும் திருவிளக்கு
16. முட்டாமைய் எரிய... வை-
17. ப்போமானொம் ஸபையொம் (11*)

# 24. அம்மாபாளையம் தூம்புக் கல்வெட்டு

எம்.எஸ்.இராம்ஜி, கீழகொளத்தூர்.

**இடம்** : பெரம்பலூர் மாவட்டம், பெரம்பலூர் வட்டம், அம்மாபாளையம் ஊருக்கு செல்லும் சாலையின் இடதுபுறம் உள்ளது.

**காலம்** : கி.பி. 13 ஆம் நூற்றாண்டு.

**செய்தி** : தூம்பு அமைக்கப்பட்டதை அறியமுடிகிறது.

1. ஸ்வத்திஸ்ரீ
2. இத் தூம்பு செ
3. ய் வித்தேன்
4. இவ் வேந்த
5. ல் காணி உடை
6. ய நா(வ) (ற)ப்ப (நூ)
7. ங் கிழாநாயன்
8. ஆசேதிய நே
9. ன்

# 25. பரவக்கோட்டை கல்வெட்டு

ஆ.துளசேந்திரன், தஞ்சாவூர்.

25 : 1

**இடம்** : திருவாரூர் மாவட்டம், மன்னார்குடி தாலுக்கா, பரவக்கோட்டை சிவன் கோவிலின் தென்புற அதிஷ்டானம்.

**காலம்** : கி.பி. 13 ஆம் நூற்றாண்டு.

**செய்தி** : சிவன்கோயில் திருமடைவளாகம் குறிப்பிடப்படுகிறது.

1. ஸ்வதிஸ்திஸ்ரீ திரிபுவனச்சக்ர
2. .......... வளநாட்டு செயங்கொ
3. .......... லாஸமுடையார் திருமடை
4. .......... திரமடை விளாகத்து (வட)
5. .......... முடையான் நார
6. .......... முன்னாளில் கணக மா
7. .......... தநந் (த) வன திரும

25 : 2

**இடம்** : மேற்சுட்டிய கோவிலின் வடபுற அதிஷ்டானம்.

**காலம்** : கி.பி. 13ஆம் நூற்றாண்டு.

**செய்தி** : பதினெண்பூமி அல்லது நானாதேசி ஐந்நூற்றுவர் குழுவின் நடவடிக்கைப் பற்றியது. பூம்புகார் குறிப்பிடப்பட்டுள்ளது.

1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவன சக்கரவர்த்திகள் ஸ்ரீ ராஜ
2. .......... கரம்பைநாட்டு ஜயங்
3. .......... ம்ம சங்கேதிகளில் எழு
4. .......... பதினெண்பூமிப் பூம்புகா(ர்)
5. .......... கை மாதாக்களுக்கும் ஒ(ப்)
6. .......... க்கும் ஸமததர்கும்

25 : 3

**இடம்** : மேற்சுட்டிய கோவிலின் வடபுற அதிஷ்டானம்.

**காலம்** : கி.பி. 13ஆம் நூற்றாண்டு.

**செய்தி** : மேலுள்ள கல்வெட்டின் தொடர்ச்சியாகலாம்.

1. பெரு நகரத்தார்..........
2. ..........ாகில் நாட்டுப் பகையரைச் செய்ய
3. ..........ன அல்லர்களாகவும் இவர்கள்

# 26. கோலியனூர் சமணர் கோயில் கல்வெட்டு

வீ.இரா.மங்கையர்க்கரசி, விழுப்புரம்
சி.வீரராகவன், விழுப்புரம்

**இடம்** : விழுப்புரம் மாவட்டம், கோலியனூர் சமணர்கோயில், கற்பலகை.

**காலம்** : இராசநாராயண சம்புவராயர் (கி.பி. 1337-63).

**செய்தி** : கண்மல்லிநாதன் பெருந்தேவன் செட்டி தெருவில் சமணர்கள் தவிர வேற்றுச்சமய மக்கள் குடி இருக்கக்கூடாது. வேற்று சமய மக்களுக்கு இத்தெருவில் உள்ள மனைகளைப் பரிசாகவிடு-வதில்லை என முடிவெடுத்துச் சொல்லியதைக் கல்வெட்டுப் பாடம் கூறுகின்றது.

1. ஸ்வஸ்திஸ்ரீ
2. சகலோகச்
3. சக்கரவத்தி
4. இராசநாராயணன்
5. மனுநெறி தப்பாத
6. மல்லிநாதன் பெருந்தேவ
7. ந் செட்டித் தெருவில்
8. வேற்று மனிதர் இருக்க
9. கடவதல்ல வென்றும்
10. பரிசாம் விடுவரல்ல
11. வென்றும் சொ
12. ன்னோம் இப்ப
13. டி செய்க.

# 27. தீவனூர்க் கல்வெட்டு

பெ.இலெனின், புதுச்சேரி.

இடம் : விழுப்புரம் மாவட்டம், செஞ்சி வட்டம், தீவனூர் அம்மன் கோயிலிலுள்ள கற்பலகை.

காலம் : கி.பி. 18 ஆம் நூற்றாண்டு.

செய்தி : விரோதிகிருது ஆண்டு ஐப்பசி மாதத்தில் ஒய்மா நாடு என்னும் கிடங்கில் பற்றைச் சார்ந்த அள்ளம்புத்தூர் களப்பாளர் ஆனைமேல் அழகியார் மகன் பேரருளாளப் பெருமாள், தீபநல்லூரில் செல்வி அம்மையைப் பிரதிஷ்டைசெய்து அதற்குரிய திருக்கோயிலும் சீபாதமும் அமைத்ததை இக்கல்வெட்டு தெரிவிக்கிறது.

1. விரொதிகிறுதி வ
2. ருஷம் அற்பதி மா
3. தம் ஓயிமாநாடான
4. கிடங்கில் பற்று அள்
5. ளம்புத்தூர் களப்பா
6. ளர் ஆனைமேலழகியார்
7. புத்தரன் போரருளாளப்
8. பெருமாள் தீபநல்லூர்
9. செல்வி அம்மையை
10. பிறதிஷ்டையும் தி
11. ருக்கோயிலும் சீபா
12. தமும் ஸதாஸேவை
13. தோத்திறம் தோ..........



# 28. நீர்நிலைக் கல்வெட்டுகள்

கு.சேதுராமன், மதுரை.

28 : 1

இடம் : விருதுநகர் மாவட்டம் அருப்புக்கோட்டையிலுள்ள சொக்கலிங்க புரம் ஊருணியில் தண்ணீர் விழும் தூம்பு.

காலம் : சகவாண்டு 1115, கி.பி. 1193.

செய்தி : திருவாலவாயுடையான் சோழகங்கன் மகன் அருளாள அழகப்பெருமாள் செங்காட்டு இடத்துவளியிலுள்ள இக்கல்வெட்டுள்ள ஊரணியைச் செய்வித்ததைத் தெரிவிக்கிறது.

1. ஸ்வஸ்திஸ்ரீ திருவா
2. லவாயுடையா
3. ன் சோழகங்க
4. ன்மைந்தன் அ
5. ருளா(ள)ரழகப்பெ
6. ருமாள் பொருச
7. கரற்கே யுரைக்கீ
8. ற்செங்காட்டிட
9. த்துவளி யூரணி
10. செய்தாயிரத்
11. து நூற்றெரு
12. பத்தைஞ்சு

28 : 2

இடம் : மதுரையிலுள்ள மாடக்குளம் கண்மாயிலுள்ள 'தேவரடியார்கல்' என்றழைக்கப்படும் கற்பலகை.

காலம் : கி.பி. 12-13ஆம் நூற்றாண்டு.

செய்தி : மாடக்குளம் அதன் காலும் எண்டிசை நாட்டு ஏறிவீரகணத்தானால் திருப்பணி செய்யப்பட்டதைக் கூறுகிறது. இவ்வெறி வீரகணத்தான் வணிகர் படை வீரனாக இருக்க வேண்டும். கல்வெட்டின் அருகில் விளக்கு, சவரி, சங்கு, கலப்பை, கத்தி, விளக்கு ஆகிய உருவங்கள் பொறிக்கப்பட்டுள்ளன.

1. ஸ்வஸ்திஸ்ரீ இ
2. ந்தக் குளமுங்கா
3. லும் எண்டிசை
4. நாட்டெறி வீரக
5. ணத்தான்

28 : 3

**இடம்** : விருதுநகர் மாவட்டம் அருச்சுனாபுரம் பெருமாள் கோயில் அருகே அமைந்த கண்மாய் பகுதியில் நடப்பட்ட துலாக்கல்.

**காலம்** : குலசேகரபாண்டியன், யா. 21, கி.பி. 1289.

**செய்தி** : இக்கல்வெட்டுள்ள துலாகிணறு நங்கன் சொக்கன் வில்லிகண்டனின் தோட்டக்கிணறு என்றும் இதன் பெயர் மாக்கண்டன் என்றும் தெரிவிக்கிறது.

1. ஸ்வஸ்திஸ்ரீகுல
2. சேகர தேவர்க்கு யா
3. ண்டு உயக நங்க
4. ன் சொக்கன் வி
5. ல்லிகண்ட(ன்) தொ
6. ட்ட கிணற்றின்
7. பேர்மாக்கண்டன்

28 : 4

**இடம்** : சிவகங்கை மாவட்டம் திருப்புவனம் கண்மாய் மடைத்தூண்.

**காலம்** : முதலாம் இராசராசன், கி.பி. 997.

**செய்தி** : காந்தளூர்ச்சாலை வெற்றி மட்டும் குறிக்கப்பட்டுள்ளது.

1. ஸ்வஸ்திஸ்ரீ காந்தளூ
2. ர்ச்சாலை கலமறுத்த
3. கோராஜராஜகேசரி வ
4. ன்மற்க்கு யாண்டு யஉ ப
5. ன்னிரண்டாவது இரா

# 29. பரளச்சிக் கல்வெட்டுகள்

வே.திருநங்கை, மதுரை.

29 : 1

**இடம்** : விருதுநகர் மாவட்டம், திருச்சுழியில் வட்டம், பரளச்சி என்ற ஊரிலுள்ள கோட்டைக் கிணறு உட்புறச்சுவர்.

**காலம்** : முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன், யா. 7, கி.பி. 1223.

**செய்தி** : சோலையழகனான அவனிநாராயண விழுப்பரையன் என்பவன் பல்லவகுலாந்தகநல்லூர் திருமேற்கோயிலுக்குத் திருவாழி எம்பெருமாளைச் (சக்கரத்தாழ்வார்) செய்தளித்ததைத் தெரிவிக்கிறது.

1. ஸ்வஸ்திஸ்ரீ சோ
2. ணாடு வழங்கிய
3. ருளிய ஸ்ரீசுந்தர
4. பாண்டிய தேவற்
5. குயாண்டு ஏழாமா
6. ண்டு பல்லவ
7. குலாந்தக நல்
8. லூர் திருமேற் கே
9. காயிலுக்கு திருவா
10. ழி எம்பெருமா
11. ளை எழுந்தருளி வி
12. த்தான் இவ்வூர்
13. சோலை அழக
14. னான அவனி நாராய
15. ண விழுப்பரை
16. யன்

29 : 2

**இடம்** : அதே இடம், மேற்புறச் சுவர், தென்புறச் சுவர், இங்கு முதலாம் இராசராசன் மெய்க்கீர்த்தி பொறிக்கப்பட்ட வட்டெழுத்துக் கல்வெட்டும் உள்ளது.

**காலம்** : கி.பி. 13 ஆம் நூ. எழுத்தமைதியில் உள்ளது.

**செய்தி** : கோயிலுக்குக் கொடுக்கப்பட்ட நிலவெல்லையாக இருக்கலாம்.

1. .......... தென்னெல்லையுமேற்
2. ..........மமெ.......... கொற்றனழகனான சுந்தரபா
3. ன்செய்க்கு கிழக்கும் வடவெல்லை தியாக
4. தற்கு மிசைந்தவெல்லை உளரு
5. ..........ரலே மாகாணியுமும் கீழி..........

1. வடவெல்லை வாய்காலுக்கு
2. றையிலி யானமைக்கும்
3. [க்காமான்] சந்திரகுலபதி மூவேந்தவே
4. சாலை செய்க்கு கிழக்கும் வடவெல்லை
5. அரைமாவரைக்காணியும் கீழிறை

29 : 3

**இடம்** : பரளச்சிக் கண்மாய் மடைத்தூண்

**காலம்** : கி.பி. 18 ஆம் நூற்றாண்டு.

**செய்தி** : இக்கல்வெட்டுள்ள மடையை அழகிச்சியாபிள்ளை என்பவர் நல்லபெருமாள்பிள்ளை புண்ணியமாகக் கட்டுவித்தார்.

1. கீலகஙூபு
2. ரட்டாசி ய
3. நல்லபெ
4. ருமாள்பி
5. ள்ளை அய
6. யன்புண்
7. ணியமாக
8. அழகிச்சி
9. யா பிள்ளை
10. கட்டிவித்
11. த மடை

# 30. மானகச்சேரி ஆசிரியம் கல்வெட்டுகள்

ஆர்.பாலச்சந்திரன், திருத்தங்கல்

30 : 1

இடம் : சங்கரன்பிள்ளைத் தோட்டத்திலுள்ள தனிக்கல்.

காலம் : கி.பி. 13 ஆம் நூ.

செய்தி : மல்லிநாட்டு குலசேகரபுரம் என்ற வணிக நகரத்துக்கு வெம்பில் (வெண்பு) நாட்டார், கருநிலக்குடிநாட்டார், இருஞ்சோணாட்டார், ஆரிநாட்டார், வெண்ணைக்குடி நாட்டார், மல்லிநாட்டார் முதலிய நாட்டவையினர் அடைக்கலம் கொடுத்துப் பாதுகாப்பு (ஆசிரியம்) செய்ததைத் தெரிவிக்கிறது. கல்வெட்டின் அருகில் இடுக்கி, உளி, கலப்பை, சுத்தியல், குடை போன்ற உருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன.

1. ஸ்வஸ்திஸ்ரீ திருமல்லி ந
2. ாட்டுடையார் வீரப
3. ண்டித ஈச்சரமுடையந
4. ாயனார் தேவதானம்
5. குலசேகரபுரத்து நகர
6. த்தாரோம் வெம்பில்
7. நாட்டார்க்கும் கருநிலக்
8. டி நாட்டார்க்கும் இருஞ்
9. சோணாட்டார்க்கும் ஆரிந
10. ாட்டார்க்கும் வெண்ணை
11. குடி நாட்டார்க்கும் திரும
12. ல்லி நாட்டார்க்கும் ஆசிரியம்

30 : 2

இடம் : ஊரின் குடியிருப்பு பகுதியிலுள்ள கல்.

காலம் : கி.பி. 13ஆம் நூ.

செய்தி : பெருமாள் ஆட்கொண்டபிள்ளை மலைகாத்த கண்டர் (குலசேகரபுரத்து) ஆசிரியம் அளித்ததைக் கூறுகிறது.

1. ஸ ..........
2. ாட்ட..........
3. ரமு..........
4. தவதா..........
5. சா..........
6. சரபுரத்து பெரும
7. மாள் ஆட்கொண்ட
8. பிள்ளை மலைகா
9. த்த கண்டர்க்கு
10. ஆசி
11. ரியம்.

# 31. தமிழகக் காசுகள்

## (அண்மைக்காலக் கண்டுபிடிப்புகள்)

ஆறுமுகசீதாராமன், தஞ்சாவூர்.

### சங்க கால முத்திரைக் காசுகள் செய்யப்பயன்படுத்திய அச்சு

அச்சின் முகப்புப் பக்கத்தில் இடதுபக்கம் நோக்கி நிற்கும் நாய் ஒன்று உள்ளது. நாயைச் சுற்றிலும் டாரின் சின்னங்கள் (எருதுதலை) காணப் படுகின்றன. முதன் முதலில் முத்திரைக் காசுகளைச் செய்யப்பயன்படுத்திய முறையில் காசிற்குத் தேவையான எடை அளவில் உள்ள உலோகத் தகடுகளைக் காய்ச்சி அவற்றின் மீது ஐந்து வகையான அடையாளங்கள் கொண்ட முத்திரைகள் தனித்தனியாகக் குத்தப்பட்டன. இந்த முறையில் குத்தப்பட்ட ஐந்து அடையாளச் சின்னங்களில் ஓர் அச்சு திருநெல்வேலியில் கிடைத்துள்ளது. எடை : 3.2 கிராம், உலோகம் : வெண்கலம், இந்த வகையான அச்சடிப்பு முறை, முத்திரைக் காசுகள் செய்ய ஆரம்பித்த நிலையைக் காட்டுவதாகும். இந்த அச்சின் காலம் சுமாராக கி.மு.3ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகக் கருதலாம்.



### பல்லவர் காசுகள்

**வகை 1 :**

காசின் முன்பக்கத்தில் வலதுபக்கம் நோக்கி நிற்கும் நீண்ட மெலிந்த கழுத்துள்ள காளைக்கு மேல் தெளிவற்ற சின்னங்கள் காணப்படுகின்றன. பின்பக்கத்தில் வட்டத்திற்குள் ஸ்ரீவத்ஸம் கோடுகளால் பொறிக்கப் பட்டுள்ளது. கிடைத்த இடம் : கும்பகோணம், எடை : 800 மி.கிராம், உலோகம் : கலப்பு உலோகம்.



வகை 2 :

காசின் முன்பக்கத்தில் வலதுபக்கம் நோக்கி நிற்கும் காளைக்கு மேல் '(க)டும்பிடுகு' என்று பல்லவர் காலத் தமிழ் எழுத்துகளில் பொறிக்கப் பட்டுள்ளது. பின்பக்கத்தில் வட்டத்திற்குள் இரண்டு குத்துவிளக்குகளுக்கு நடுவில் செங்குத்தான நிலையில் சக்கரம் ஒன்று உள்ளது. எடை : 1.1 கிராம், உலோகம் : கலப்பு உலோகம், கிடைத்த இடம் : காஞ்சிபுரம், இந்தக் காசு முதலாம் நரசிம்மவர்மனால் (கி.பி. 630-668) வெளியிட்டதாகக் கருதலாம்.



வகை 3 :

காசின் முன்பக்கத்தில் வலதுபக்கம் நோக்கி நிற்கும் காளைக்கு மேல் 'ஸ்ரீபர' என்று பல்லவ-கிரந்த எழுத்துகளில் பொறிக்கப்பட்டுள்ளது. பின்பக்கத்தில் அலங்கரிக்கப்பட்ட வட்டத்திற்குள் செங்குத்தாக ஒருவாள் ஒன்று உள்ளது. எடை : 1.2 கிராம், கிடைத்த இடம் : கரூர், உலோகம்: கலப்பு உலோகம். இந்தக் காசு இராஜசிம்மனால் (கி.பி. 690-729) வெளியிடப்பட்டதாகக் கருதலாம்.



சோழர் காசு :

காசின் முன்பக்கத்தில் நிற்கும் மனித உருவமும், இடதுபக்கத்தில் விளக்கு ஒன்றும் உள்ளன. பின்பக்கத்தில் வலதுபக்கம் நோக்கி நடனமாடும் ஒரு மங்கையின் உருவம் உள்ளது. தலையின் பின்னால் கொண்டை உள்ளது. இடது பக்கத்தில் நீண்ட குத்துவிளக்கு ஒன்று உள்ளது. இந்தக் காசில் உள்ள பெண்ணின் உருவம் நடனமங்கையின் உருவமா அல்லது ராணியின் உருவமா என்று மேலும் ஆய்வு செய்ய வேண்டும். எடை : 2.8 கிராம், உலோகம் : செப்பு, கிடைத்த இடம் : கரூர், இந்தக் காசு இராஜராஜ சோழன் காலத்தில் சிறப்பு வெளியீடாக வெளியிட்டிருக்கலாம்.



**ஹொய்சளர் காசு :**

காசின் முன்பக்கத்தில் மூன்று வளைவுள்ள தோரண வாயிலுக்குள் செங்குத்தாக அங்குசம் காணப்படுகிறது. பின்பக்கத்தில் வலதுபக்கம் நோக்கி நிற்கும் புறா ஒன்று உள்ளது. எடை : 3.2 கிராம், உலோகம் : செம்பு, கிடைத்த இடம் : கரூர். இந்தக் காசு ஹொய்சளர்கள் தமிழகத்தில் ஆட்சி செய்த போது வெளியிடப்பட்டிருக்க வேண்டும்.



**மைசூர் உடையார் காசு :**

காசின் முன்பக்கத்தில் வலதுபக்கம் நோக்கி நிற்கும் பன்றி உள்ளது. பின்பக்கத்தில் '(ஸ்ரீ)பட்டண' என்று இரண்டு வரிகளில் தெலுங்கு-கன்னட எழுத்துகளில் பொறிக்கப்பட்டுள்ளது. எடை : 2.7 கிராம், உலோகம் : செம்பு, கிடைத்த இடம் : திருக்கோவிலூர், இந்தக் காசு மைசூர் உடையார் கண்டீரவ நரச ராச உடையாரால் (கி.பி. 1638-1656) வெளியிடப்பட்டிருக்கலாம்.



### தஞ்சை நாயக்கர் காசுகள் :

#### அ. செவ்வப்ப நாயக்கர் காசு (கி.பி 1532-1580)

காசின் முன்பக்கத்தில் வட்டத்திற்குள் சக்கரம் போன்ற உருவம் உள்ளது. பின்பக்கத்தில் 'சவப' என்று நாகரி எழுத்தில் மன்னரின் பெயர் பொறிக்கப்பட்டுள்ளது. எடை : 3.2 கிராம், உலோகம் : செப்பு, கிடைத்த இடம் : தஞ்சாவூர்.



#### ஆ. விஜயராகவ நாயக்கர் காசு (கி.பி. 1631-1673)

காசின் முன்பக்கத்தில் வட்டத்திற்குள் இராஜகோபாலசுவாமி கையில் செண்டுடன் நின்ற நிலையில் உள்ளார். பின்பக்கத்தில் நந்தி நாகரி எழுத்துகளில் 'விஜயராகவ' என்று இரண்டு வரிகளில் மன்னரின் பெயர் பொறிக்கப்பட்டுள்ளது. எடை : 1.9 கிராம், உலோகம் : செப்பு, கிடைத்த இடம் : மன்னார்குடி.



# 32. தாண்டிக்குடி அகழாய்வு

கா.ராஜன், தஞ்சாவூர்.
ந.அதியமான், தஞ்சாவூர்.

தாண்டிக்குடி திண்டுக்கல் மாவட்டம், கொடைக்கானல் வட்டம், வத்தலகுண்டிலிருந்து வடகிழக்காக 47 கிலோமீட்டர் தொலைவில் கீழ்பழனி மலையில் அமைந்துள்ளது. இவ்வூர் மருத நதியின் இடது கரையில் கடல் மட்டத்திலிருந்து 4400 அடி உயரத்தில் அமைந்துள்ளது. தாண்டிக்குடி சிறப்பான மண்வளம், நீர்வளம் மற்றும் சுற்றுப்புறச் சூழலைக் கொண்டிருக்கிறது. இதனால் இங்கு தொன்மைக் காலம் தொட்டே மக்கள் வாழ்ந்ததற்கான தொல்லியல் எச்சங்கள் கிடைக்கப்பெற்றுள்ளன. இப்பகுதியானது சங்க காலத்தில் வாழ்ந்த குறுநில மன்னர்களான **"தோன்றிக்கோன்"** மற்றும் **"கோடைப்பொருநன்"** ஆகியோருடன் தொடர்புபடுத்தப்படுகிறது. சங்கப் புலவர் அய்யூர் முடவனார் "தோன்றி" பகுதியில் ஆட்சிப்புரிந்த குறுநில மன்னரைப்பற்றிப் புறநானூற்றுப் பாடலில் (399) குறிப்பிடுகின்றார். இப்புலவர் குறிப்பிடும் பகுதியானது தான்றிக்குடியாக இருக்கலாம் என அடையாளப்படுத்தப்படுகிறது. பெருந்தலைச் சாத்தனார் என்ற மற்றொரு சங்கப் புலவர் கோடைப் பொருநன் என்ற குறுநில மன்னன் வேள்வி செய்ததாகக் குறிப்பிடுகின்றார். இதில் **"கோடை"** என்பது தற்போதுள்ள கொடைக்கானல் பகுதியாக அடையாளப்படுத்தப்படுகிறது. தாண்டிக்குடி மற்றும் கொடைக்கானல் ஆகிய இவ்விருபகுதிகளும் அடுக்கம், செண்பகனூர், மச்சூர், பெருமாள்மலை, பண்ணைக்காடு, மூலையூர், கதவுமலை, மணலூர், கானல்காடு, கொடலங்காடு, பேத்துபாறை, பாச்சலூர், ஆடலூர், பூலத்தூர், வெள்ளகவி மற்றும் பெரும்பள்ளம் போன்ற அதிக எண்ணிக்கையிலான தொல்லியல் இருப்பிடங்களைத் தன்னகத்தே கொண்டுள்ளன.

இப்பகுதியில் தொடர்ந்து 3500 ஆண்டுகளுக்கும் மேலாகப் பண்பாட்டுப் பரவல் திகழ்ந்துள்ளமைக்கு இங்குக் காணப்படும் தொல்லியல் எச்சங்கள் சான்று பகர்கின்றன. இதற்கு இப்பகுதியின் சுற்றுப்புறச்சூழலே காரணமாகும். சமவெளிகளைச் சுற்றிலும் இயற்கையான மலைகள், வற்றாத நீர்ஊற்றுகள், வளமையான மண் போன்றன அமைந்துள்ளன. எனவே இப்பகுதியில் தொன்மைக்காலம் தொட்டே மக்கள் வாழ்ந்துள்ளனர். அப்பகுதியில் நிலவிய தட்பவெப்பநிலை அம்மக்கள் மிளகு, ஏலம் முதலியவற்றைப் பயிரிடவும் அவற்றை மேற்கத்திய நாடுகளுக்குக் குறிப்பாக ரோமநாட்டிற்கு ஏற்றுமதி செய்யவும் ஏதுவாக இருந்துள்ளது. இப்பகுதியின் தொல்லியல் முக்கியத்துவத்தை மேலும் உணரும் வகையில் 2004ஆம் ஆண்டிலும் இவ்வாண்டு (2006) மே மாதமும் அகழாய்வுகள் மேற்கொள்ளப்பட்டன. 2004ஆம் ஆண்டு மேற்கொண்ட அகழாய்வு பற்றிய அறிக்கை ஆவணம் இதழ் 15ல் வெளியிடப்பட்டுள்ளது. இக்கட்டுரையில் இவ்வாண்டு நிகழ்த்தப்பெற்ற அகழாய்வு தொடர்பான செய்திகள் மட்டுமே அளிக்கப்பட்டுள்ளன.

2004ஆம் ஆண்டில் நான்கு ஈமச்சின்னங்களும் (எண்கள். 1,2,3,4) மற்றும் இவ்வாண்டு (2006) ஆறு ஈமச்சின்னங்களும் (எண்கள் 5,6,7,8,9,10) ஆக மொத்தம் 10 ஈமச்சின்னங்கள் இதுவரை அகழாய்வு செய்யப்பட்டுள்ளன. மேலும் வாழ்விடங்களிலும் அகழாய்வு செய்யப்பட்டது. இவ்வகழாய்வில் ஈமக்குழி, முதுமக்கள் தாழி, கல்பதுக்கை, கல்திட்டை என நான்கு வகையான ஈமச்சின்னங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இவற்றுள் இரு ஈமக்குழிகள் இரும்புக்காலத்திற்கு முந்தையக் காலமாக (கி.மு.1500) கணக்கிடப்பட்டு உள்ளன. மற்றவை இரும்புக்காலத்தைச் சார்ந்ததாகக் கணக்கிடப்பட்டு உள்ளன. தமிழகத்தில் முதன்முறையாக இரும்புக்காலத்திற்கு முந்தைய ஈமக்குழிகள் அகழாய்வு செய்யப்பட்டுள்ளன.

தாண்டிக்குடி முருகன் கோயிலுக்கு அருகே ஈமக்குழி ஒன்றும் (எண் 7), முதுமக்கள் தாழி ஒன்றும் (எண் 8) அகழாய்வு செய்யப்பட்டது. ஈமக்குழியைச் (எண் 7) சுற்றிலும் கல்வட்டங்கள் காணப்பட்டன. இவ் ஈமக்குழியில் பானைகள், பிரிமணைகள், கிண்ணங்கள், தட்டுகள், தட்டுத்தாங்கிகள் (படம் 1) ஆகியன கிடைத்தன. சிகப்பு நிற குறுகிய வாய்ப்பகுதியைக் கொண்ட குடத்தின் தோள் பகுதியின் மீதும், பிரிமணை மீதும், வட்டு ஒன்றின் மீதும் மாவிலைப் போன்ற உருவம் கொண்ட ஓவியங்கள் கருப்புவண்ணம் கொண்டு தீட்டப்பட்டிருந்தன (படம் 2). இவை காலத்தால் முற்பட்டவை என்பதோடு மட்டுமல்லாமல் முதன்முதலாக தமிழகத்தில் கண்டுபிடிக்கப்பட்டுள்ள அரிய மட்பாண்டங்களாகும். இவ்வகைப் மட்பாண்டங்கள் தமிழகத்திற்கு அப்பால் புதியகற்கால-செம்புக்கால நிலையிலேயே கிடைத்துள்ளன என்பது குறிப்பிடத்தக்கது. இவற்றுடன் சங்கடையின் வாய்ப்பகுதி போன்ற அமைப்புடைய சிவப்பு நிற மட்பாண்டம் (lipped pot) ஒன்றும் இங்கு கிடைத்துள்ளது (படம் 3). இந்த மட்பாண்டமும் மேற்குறிப்பிட்ட மட்பாண்டமும் காலப்பகுப்பிற்கு பெரிதும் துணைநிற்கின்றன. மேலும் அகழாய்வு செய்யப்பட்ட இத்தகைய ஈமக்குழிகளில் இரும்பாலான பொருட்கள் ஏதும் கிடைக்கவில்லை என்பதை இங்கு முக்கியமாகக் குறிப்பிடவேண்டும். இந்த ஈமக்குழியில் மூன்று அடுக்குகளில் மட்பாண்டங்கள் வைக்கப்பட்டிருந்தன. இக்குழியில் வைக்கப்பட்டிருந்த 26 மட்பாண்டங்களும் கிழக்குநோக்கியே வைக்கப்பட்டிருந்தன (படம் 4). இது அக்கால மக்கள் ஈமச்சடங்குகளுக்கு அளித்த முக்கியத்துவத்தை உணர்த்துகிறது.

இதற்கு அருகாமையில் ஈமத்தாழியை உட்கொண்ட ஈமச்சின்னம் ஒன்று (எண் 8) அகழப்பட்டது. இவ்ஈமச்சின்னத்திலும் தாழியின் அடிப்புறத்தில் மேற்குறிப்பிட்ட ஈமச்சின்னத்தில் காணப்படுவது போன்று அனைத்து மட்பாண்டங்களும் கிழக்குநோக்கியே வைக்கப்பட்டிருந்தன (படம் 5). இச்சின்னத்திலும் கருப்பு வண்ணம் தீட்டப்பட்ட சிகப்பு நிற குடமும், பிரிமணையும் கிடைத்தன. இவ்ஈமச்சின்னத்தில் எவ்வித இரும்புப் பொருட்களும் வெளிப்படவில்லை. ஆதலால் இவ்ஈமச்சின்னமும் (எண். 8), மேற்குறிப்பிட்ட ஈமச்சின்னமும் (எண். 9) கிடைத்த தொல்பொருட்களின் அடிப்படையில் இரும்புக்காலத்திற்கும் முற்பட்டதாகக் கருதப்படுகிறது.

அகழாய்வுச் செய்யப்பட்ட இரும்புக்காலத்தைச் சார்ந்த 4 ஈமச்சின்னங்களில் 3 கற்பதுக்கைகளும் (எண்கள் 5, 9, 10) 1 கல்திட்டையும் (எண் 6) ஆகும். மூன்று கல்லறைகளும் கிழக்கு நோக்கிய நிலையில் முற்றத்துடன் காணப்பட்டன. முற்றமும், கல்லறையும் இடுதுளை கொண்டு இணைக்கப்பட்டிருந்தன. இச்சாய்சதுர வடிவ இடுதுளைகள் வெளிப்புறத்தில் பலகைக்கற்கள் கொண்டு மூடப்பட்டிருந்தன. மூன்று கற்பதுக்கைகளில் இரண்டு (எண்கள் 5 மற்றும் 9) முற்றத்துடன் கூடிய கல்லறையைக் கொண்டதாகும். இதில் சேதுக்காடு என்னுமிடத்தில் தோண்டப்பட்ட கல்லறையில் (எண் 5) மேடை (திண்ணை) வடிவ அமைப்பு ஒன்று இடுதுளைக்கு நேராகக் காணப்பட்டது. இவ்வமைப்பு இரு குத்துக்கற்களின் மேல் வைக்கப்பட்ட பலகைக்கல்லால் உருவாக்கப்பட்ட தாகும். இம்மேடை கல்லறையில் செங்குத்தாக நிறுத்தப்பட்ட தென்புறப் பலகைக்கல்லுடன் இணைத்து வைக்கப்பட்டிருந்தது. இதற்குக் கீழே இணையாக ஒரு பலகைக்கல் வைக்கப்பட்டிருந்தது. மேடைப்பலகைக் கல்லுக்குக் கீழேயும், இடைப்பலகைக் கல்லுக்குக் கீழேயும் ஈமக்குழியின் தரைப்பலகை வரை 200க்கும் மேற்பட்ட சூதுபவள மணிகள் கிடைத்தன. இவற்றில் சில வெள்ளைவண்ணம் தீட்டப்பட்டவை.

கற்பதுக்கை (எண் 9) மேற்குறிப்பிட்ட கற்பதுக்கையை ஒத்தே காணப்பட்டாலும் மேடை போன்ற அமைப்பு இக்கற்பதுக்கையில் காணப்படவில்லை (படம் 6).

மற்றொரு கற்பதுக்கை (எண் 10) இரட்டை கற்பதுக்கைகளைக் கொண்டதாகும் (படம் 7). இந்த ஈமச்சின்னத்தில் 1000க்கும் மேற்பட்ட பளிங்கு, அகேட், சூதுபவளம், ஸ்டியடைட் போன்ற அரிய கற்களால் ஆன மணிகள் கண்டுபிடிக்கப்பட்டன (படம் 8). இவற்றுள் 800க்கும் மேற்பட்டவை ஸ்டியடைட் வகை 5 மி.மீ. அளவு கொண்ட நுண் மணிகளாகும் (படம் 9). இவை முதன்முறையாகத் தமிழகத்தில் கற்பதுக்கையிலிருந்து கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இக்கற்பதுக்கைகளில் கிடைத்த பளிங்கு (படம் 10) மற்றும் சூது பவள மணிகள் (படம் 11) அதிக வனப்பு கொண்டவையாகும். பானைகள், பிரிமணைகள், கிண்ணங்கள் ஆகியனவும் மிகவும் உடைந்த நிலையில் கிடைத்தன.

அகழாய்வு செய்யப்பட்ட கல்திட்டை (எண் 6) தெற்கு நோக்கிய மூன்று அறைகளைக் கொண்டதாக இருந்தது (படம் 12). இவ்வறைகள் மிக நேர்த்தியாகப் பலகைக் கற்களால் உருவாக்கப்பட்டிருந்தன. இக்கல்திட்டை பாறையின் மீது உருவாக்கப்பட்டு இதைச்சுற்றிலும் செவ்வக வடிவில் கற்சுவர்கள் எழுப்பப்பட்டு பரல்கள் கொண்டு கல்லறைகள் மூடப்பட்டிருந்தன. இக்கல்லறைகளில் எவ்வித இடுதுளைகளும் காணப்படவில்லை. இது அக்காலத்து மக்களின் கட்டிடக்கலை நுணுக்கத்தை வெளிப்படுத்துவதாகவுள்ளது.

மேலும் அகழாய்வு செய்யப்பட்ட கற்பதுக்கைகளிலும், கல்திட்டையிலும் இரும்பாலான வாட்கள், அம்பு முனைகள், கோடாரிகள், கத்திகள் ஆகியன கண்டெடுக்கப்பட்டன. வாழ்விடங்களில் செய்யப்பட்ட

அகழாய்வில் சமகாலத்திய கருப்பு-சிவப்புப் பானை ஓடுகள், சிவப்பு பூச்சுப் பெற்ற பானை ஓடுகள் கிடைத்துள்ளன. இங்கு கிடைத்த சூதுபவள மணிகள் குஜராத் பகுதியிலேயே கிடைப்பதால் அவை அங்கிருந்தே இப்பகுதிக்கு கொண்டு வரப்பட்டிருக்க வேண்டும். இதற்கு மாற்றுப் பொருளாக மிளகு, ஏலம் ஆகியவை வழங்கப்பட்டிருக்க வேண்டும். அகழ்வு செய்யப்பட்ட ஈமச்சின்னங்களில் இரு ஈமச்சின்னங்களில் இரும்புப் பொருட்கள் எவையும் கிட்டாததாலும், அவை ஈமக்குழியாக இருப்பதாலும், குறைந்த அளவிலேயே கருப்பு சிவப்பு மட்பாண்டங்கள் கிடைத்திருப்பதாலும், கருப்புவண்ணம் தீட்டப்பட்ட சிவப்புநிற மட்பாண்டங்கள் கிடைத்திருப்பதாலும் இப்பகுதி 3500 ஆண்டுகளுக்கு முன்பிருந்தே மக்களின் வாழ்விடங்களாக விளங்கியிருக்க வேண்டும் என்பதை உணரமுடிகிறது.



படம் 1



படம் 2

# 33. மோடிக்குப்பம் - புதிய கற்கால மற்றும் இரும்புக் கால ஊரிருக்கை

கி.குமார், சென்னை.

வேலூர் மாவட்டம், குடியாத்தம் வட்டத்தில் மோடிக்குப்பம் கிராமம் உள்ளது. இவ்வூர் குடியாத்தம்-பலமநேர் சாலையில் குடியாத்தத்திலிருந்து சுமார் 10 கிலோ மீட்டர் தொலைவில் அமைந்துள்ளது. இவ்வூரில் புதிய கற்காலம், இரும்புக் காலம் மற்றும் வரலாற்று ஆரம்பகால மக்கள் வாழ்ந்த ஊரிருக்கைப் பகுதி இக்கட்டுரை ஆசிரியரால் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

**ஊரிருக்கை அமைவிடம்**

மோடிக்குப்பம் கிராமத்திற்குக் கிழக்கே கொட்டாறு (Goddar) என்றழைக்கப்படும் சிறிய ஆறு செல்கிறது. இவ்வாற்றுக்கு கிழக்கே செந்தூர்மலை என்றழைக்கப்படும் பெரியமலை அமைந்துள்ளது. இம்மலையில் இயற்கையாக அமைந்த பல குகைகளும், நீர்ச் சுனைகளும் உள்ளன. இம்மலையின் வடக்கு மற்றும் வடமேற்கு அடிவாரத்தில் சுமார் மூன்று ஏக்கர் நிலப்பரப்பில் ஊரிருக்கைப் பகுதி (Habitation mound) உள்ளது. இவ்வூரிருக்கை மேடானது சுமார் இரண்டு மீட்டர் முதல் மூன்று மீட்டர் ஆழம் வரை படிந்துள்ளது. இவ்வூரிருக்கை மேட்டின் பெரும்பாலான பகுதிகள் சிதைக்கப்பட்டு விளை நிலங்களாக மாற்றப்பட்டுள்ளன. ஒரு சிறிய பகுதி மட்டுமே எவ்வித பாதிப்புமின்றி ஏராளமான தொல்லியல் சான்றுகளுடன் எஞ்சியுள்ளது. இங்கு புதிய கற்காலம் முதல் வரலாற்று ஆரம்பகாலம் (Early Historical Period) வரை மக்கள் தொடர்ந்து வாழ்ந்து வந்ததற்கான சான்றுகள் காணப்படுகின்றன.

**புதிய கற்காலம்**

மோடிக்குப்பம் ஊரிருக்கைப் பகுதியில் கற்கால மக்களால் பயன்படுத்தப்பட்ட கற்கருவிகள் (Neolithic celt), அரைப்பான் (Grinder) போன்ற பல பொருட்கள் முழுமையாகவும், உடைந்த நிலையிலும் கிடைக்கின்றன. மேலும், அக்கால மக்களால் பயன்படுத்தப்பட்ட கையால் செய்யப்பட்ட சிவப்புநிற பானை ஓடுகள் (Coarse redware) சிவப்பு வண்ணம் தீட்டப்பட்ட ஓடுகள் மற்றும் சாம்பல் நிற (Grey ware) பானை ஓடுகள் இங்கு அதிக அளவில் கிடைக்கின்றன.

**இரும்புக் காலம்**

புதியகற்காலத்தைத் தொடர்ந்து இரும்புக் காலத்தில் வாழ்ந்த மக்களால் பயன்படுத்தப்பட்ட பொருட்களும் இங்கு ஏராளமாக காணப்படுகின்றன. கருப்பு-சிவப்பு, கருப்பு, சிவப்பு மற்றும் சிவப்பு வண்ணம் தீட்டப்பட்ட பானை யோடுகள் இங்கு கிடைக்கின்றன. இரும்பை உருக்க

பயன்படுத்தப்பட்ட சுடுமண் குழாய்களும் (tuyers) இரும்புக் கழிவுகளும் (Slags) ஏராளமாக காணப்படுகின்றன.

மேலும், வரலாற்று ஆரம்பகால (Early Historical age) மக்களால் பயன்படுத்தப்பட்ட சிவப்பு மற்றும் சிவப்பு வண்ணம் பூசப்பட்ட (Red slipped ware) பானை ஓடுகளும், மிகச் சிறிய அளவிலான கூரை ஓடுகளும் (Roof tiles) காணப்படுகின்றன. இதே பகுதியிலிருந்து ஒரு தொல்மரப் படிவமும் (Plant Fossil) கண்டெடுக்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.[1]

### குறியீடுகள்

இரும்புகாலம் மற்றும் வரலாற்று ஆரம்ப காலத்தைச் சேர்ந்த கருப்பு-சிவப்பு மற்றும் சிவப்புநிற பானை ஓடுகளில் பல்வேறு வகையான குறியீடுகள் காணப்படுகின்றன. மேலும் செந்தூர்மலையிலுள்ள குகைகளில் வெண்மை நிறத்தாலான ஓவியக் குறியீடுகள் சில வரையப்பட்டுள்ளன. இக்குகைகளிலுள்ள சில ஓவியங்கள் மறைந்து போயுள்ளன.

மோடிக்குப்பம் ஊரிருக்கைப் பகுதியில் மேற்குறித்த பண்பாடுகளைச் சேர்ந்த தொல்லியல் சான்றுகள் மிக அதிக அளவில் காணப்படுவதைக் கருத்தில் கொண்டு அங்கு சிதைக்கப்படாமல் உள்ள எஞ்சியுள்ள பகுதியில் அகழாய்வு மேற்கொண்டால் மேலும் பல தொல்லியல் மற்றும் வரலாற்று உண்மைகளை வெளிக்கொணரலாம்.



மோடிக்குப்பம் செந்தூர்மலை ஊரிருக்கைப் பகுதி

1. வட ஆர்க்காட்டில் மரயினங்களும் மாவினங்களும், வன உயிர் மற்றும் சுற்றுச் சூழல் பாதுகாப்புக்குழு, வேலூர்.



மோடிக்குப்பம் செந்தூர்மலை
ஊரிருக்கை மேட்டின் படிவு-அருகாமை தோற்றம்

# 34. பவானி ஆற்றுப் பள்ளத்தாக்கில் தொல்லியல்

வி.பி.யதீஸ்குமார், தஞ்சாவூர்.

காவிரியின் முக்கிய துணையாறான பவானியாறு கேரளாவில் உள்ள மன்னார்காடு வட்டத்தில் சந்துமலையில் உள்ள கொல்லரிபெட்டா என்ற இடத்தில் உற்பத்தியாகி சுமார் 180 கிலோமீட்டர் பயணிக்கிறது. ஈரோட்டுக்கு அருகே பவானி நகரில் கூடுதுறை என்ற இடத்தில் காவிரியுடன் கலக்கின்றது. சங்க இலக்கியமான பதிற்றுப்பத்து பவானியாற்றை **வாணி** என்று குறிப்பிடுகிறது (பதி. 9, 86:63).

பவானியாற்றுடன் பல கிளையாறுகள் பல்வேறு இடங்களில் கலக்கின்றன. கேரளாவில் உள்ள கோட்டத்துறை என்ற இடத்துக்கருகில் சிறுவாணியாறும், கோரங்கிப்பள்ளமும் கலக்கின்றன. குன்னாறு, குந்தாஆறு, கல்லாறு, ஆகியன நீலகிரிமலைத்தொடரில் உற்பத்தியாகி மேட்டுப் பாளையத்துக்கு மேற்காகப் பவானியாற்றுடன் கலக்கின்றன. பெரும் துணை நதியான மோயாறு சத்தியமங்கலத்திற்கு மேற்காகப் பவானியாற்றுடன் இணைகின்றன. பெரும்பள்ளம், எருமைப்பள்ளம் குரங்குப்பள்ளம் போன்ற பெரும் பள்ளங்களும் இதனுடன் கலக்கின்றன.

இப்பகுதியில் மேற்கொண்ட அகழ்வாய்வில் 100க்கும் மேற்பட்ட இரும்புக்காலத்தைச் சார்ந்த முதுமக்கள் தாழிகள், கல்லறைகள் பல பிரிவுகளுடைய கற்பதுக்கைகள், கல்வட்டம், நடுகற்கள் ஆகியவை வெளிக்கொணரப்பட்டன.



## பவானியாற்றுத் தொல்லியல் - பட்டியல்கள்

| வ.எண். | ஊர்ப் பெயர்கள் | ஈமச்சின்னங்கள் | வட்டம் | அட்சரேகை | | | தீர்க்கரேகை | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | 0 | ' | " | 0 | ' | " |
| 1. | பவானி | கற்பதுக்கைகள் | பவானி | | | | | | |
| 2. | ஜம்பை | வாழ்விடங்கள்- முதுமக்கள்தாழிகள் | பவானி | 77 | 40 | 52 | 11 | 26 | 47 |
| 3. | தொட்டியபாளையம் | முதுமக்கள்தாழிகள் | பவானி | 77 | 38 | 30 | 11 | 28 | 9 |
| 4. | எலவமலை | வாழ்விடங்கள், கற்பதுக்கைகள், முதுமக்கள்தாழிகள் குறியீடுகள் | ஈரோடு | 77 | 40 | 57 | 11 | 28 | 23 |
| 5. | மூலப்பாளையம் | கற்பதுக்கைகள், முதுமக்கள்தாழிகள் | ஈரோடு | 77 | 39 | 28 | 11 | 27 | 12 |
| 6. | செத்தகாடு | கல்வட்டங்கள் | மேட்டுப்பாளையம் | 77 | 39 | 54 | 11 | 26 | 53 |
| 7. | செமங்குழி | கற்பதுக்கைகள், முதுமக்கள்தாழிகள் | பவானி | 76 | 46 | 13 | 11 | 11 | 54 |
| 8. | சின்னமோளப்பாளையம் | முதுமக்கள்தாழிகள், வாழ்விடங்கள் | பவானி | 77 | 39 | 20 | 11 | 28 | 13 |
| 9. | முனியப்பம்பாளையம் | கற்பதுக்கைகள் | கோபிச்செட்டிபாளையம் | 77 | 36 | 35 | 11 | 28 | 1 |
| 10 | ஓரிச்சேரி | கற்பதுக்கைகள், முதுமக்கள்தாழிகள் | பவானி | 777 | 33 | 30 | 11 | 32 | 48 |
| 11. | ஆம்பகூடல் | முதுமக்கள்தாழிகள் | பவானி | 77 | 37 | 9 | 11 | 27 | 27 |
| 12. | கூத்தம்பூண்டி | வாழ்விடங்கள், முதுமக்கள்தாழிகள் | கோபிச்செட்டிபாளையம் | 77 | 36 | 35 | 11 | 27 | 24 |

| வ.எண். | ஊர்ப் பெயர்கள் | ஈமச்சின்னங்கள் | வட்டம் | அட்சரேகை | | | தீர்க்கரேகை | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 13. | மேவாணி | முதுமக்கள்தாழிகள் | கோபிச்செட்டிபாளையம் | 77 | 34 | 40 | 11 | 28 | 00 |
| 14. | கீழ்வாணி | கற்பதுக்கைகள், முதுமக்கள்தாழிகள் | கோபிச்செட்டிபாளையம் | 77 | 33 | 16 | 11 | 28 | 36 |
| 15. | பெருமுகை | கற்பதுக்கைகள் | கோபிச்செட்டிபாளையம் | 77 | 31 | 34 | 11 | 30 | 17 |
| 16. | வேம்பத்தி | கற்பதுக்கைகள் முதுமக்கள்தாழிகள் | பவானி | 77 | 29 | 7 | 11 | 31 | 31 |
| 17. | அத்தாணி | முதுமக்கள்தாழிகள் | கோபிச்செட்டிபாளையம் | 77 | 33 | 5 | 11 | 30 | 18 |
| 18. | கள்ளிப்பட்டி | முதுமக்கள்தாழிகள் | கோபிச்செட்டிபாளையம் | 77 | 30 | 53 | 11 | 31 | 16 |
| 19. | கணக்கம்பாளையம் | கற்பதுக்கைகள் | கோபிச்செட்டிபாளையம் | 77 | 35 | 12 | 11 | 31 | 13 |
| 20. | அரசபாளையம் | முதுமக்கள்தாழிகள் | கோபிச்செட்டிபாளையம் | 77 | 27 | 31 | 11 | 30 | 58 |
| 21. | பங்களாபுதூர் | முதுமக்கள்தாழிகள், நெடுநிலைநடுகல் | கோபிச்செட்டிபாளையம் | 77 | 26 | 47 | 11 | 31 | 43 |
| 22. | புஞ்சைதுறையன்-பாளையம் | முதுமக்கள்தாழிகள் | கோபிச்செட்டிபாளையம் | 77 | 24 | 59 | 11 | 30 | 39 |
| 23. | ஏலூர் | கற்பதுக்கைகள் முதுமக்கள்தாழிகள் | கோபிச்செட்டிபாளையம் | 77 | 24 | 54 | 11 | 31 | 31 |
| 24. | பெரியகொடிவேரி | கற்பதுக்கைகள் முதுமக்கள்தாழிகள் | கோபிச்செட்டிபாளையம் | 77 | 19 | 34 | 11 | 29 | 26 |
| 25. | சதுமுகை | கற்பதுக்கைகள் முதுமக்கள்தாழிகள் | கோபிச்செட்டிபாளையம் | 77 | 17 | 42 | 11 | 28 | 45 |
| 26. | சிவியர்பாளையம் | முதுமக்கள்தாழிகள் | கோபிச்செட்டிபாளையம் | 77 | 17 | 00 | 11 | 28 | 19 |
| 27. | சத்தியமங்களம் | முதுமக்கள்தாழிகள் | சத்தியமங்கலம் | 77 | 15 | 33 | 11 | 29 | 54 |

| வ.எண். | ஊர்ப் பெயர்கள் | ஈமச்சின்னங்கள் | வட்டம் | அட்சரேகை | | | தீர்க்கரேகை | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 28. | துரைசாமிபாளையம் | கற்பதுக்கை | சத்தியமங்கலம் | 77 | 14 | 6 | 11 | 29 | 52 |
| 29. | அக்கரைநிகமம் | கற்பதுக்கைகள் முதுமக்கள்தாழிகள் | சத்தியமங்கலம் | 77 | 37 | 48 | 11 | 30 | 52 |
| 30. | ஒட்டனூர் | கற்பதுக்கைகள் முதுமக்கள்தாழிகள் | சத்தியமங்கலம் | 77 | 12 | 30 | 11 | 29 | 26 |
| 31. | இக்கரைத்தட்டப்பள்ளி | கற்பதுக்கைகள் முதுமக்கள்தாழிகள் | சத்தியமங்கலம் | 77 | 12 | 30 | 11 | 29 | 1 |
| 32. | ஆலம்பாளையம் | கற்பதுக்கைகள் | சத்தியமங்கலம் | 77 | 11 | 21 | 11 | 29 | 1 |
| 33. | கரைதொட்டம்பாளையம் | கற்பதுக்கைகள் | சத்தியமங்கலம் | 77 | 11 | 18 | 11 | 26 | 53 |
| 34. | கோட்டமங்களம் | கற்பதுக்கைகள் | சத்தியமங்கலம் | 77 | 11 | 43 | 11 | 25 | 59 |
| 35. | பெரியகள்ளிப்பட்டி | கல்வட்டம் | சத்தியமங்கலம் | 77 | 7 | 30 | 11 | 29 | 4 |
| 36. | ஐயம்பரளையம் | கல்வட்டம் கற்பதுக்கைகள் முதுமக்கள்தாழிகள் | சத்தியமங்கலம் | 77 | 7 | 6 | 11 | 23 | 19 |
| 37. | கோவூக்கல்மேடு | கல்வட்டம் கற்பதுக்கைகள் முதுமக்கள்தாழிகள் | மேட்டுப்பாளையம் | 77 | 5 | 12 | 11 | 23 | 23 |
| 38. | பெத்திக்குட்டை | கல்வட்டம் | மேட்டுப்பாளையம் | 77 | 3 | 46 | 11 | 23 | 42 |
| 39. | ஜெ ஜெ நகர் | கல்வட்டம் | மேட்டுப்பாளயைம் | 77 | 4 | 32 | 11 | 21 | 59 |
| 40. | பூலாமொக்கை | கல்வட்டம் | மேட்டுப்பாளையம் | 77 | 4 | 34 | 11 | 22 | 46 |
| 41. | கூத்தப்பூண்டி | கல்வட்டம் | மேட்டுப்பாளையம் | 77 | 2 | 53 | 11 | 22 | 5 |
| 42. | லிங்காபுரம் | கல்வட்டம் | மேட்டுப்பாளையம் | 77 | 1 | 36 | 11 | 20 | 53 |

| வ.எண். | ஊர்ப் பெயர்கள் | ஈமச்சின்னங்கள் | வட்டம் | அட்சரேகை | | | தீர்க்கரேகை | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 43. | அன்னதாசன்பாளையம் | கல்வட்டம் கற்பதுக்கைகள் | மேட்டுப்பாளையம் | 77 | 0 | 24 | 11 | 20 | 27 |
| 44. | தட்டப்பள்ளி | கல்வட்டம் கற்பதுக்கைகள் முதுமக்கள்தாழிகள் | மேட்டுப்பாளையம் | 77 | 2 | 1 | 11 | 19 | 17 |
| 45. | சிறுமுகை | கல்வட்டம் கற்பதுக்கைகள் முதுமக்கள்தாழிகள் | மேட்டுப்பாளையம் | 77 | 1 | 7 | 11 | 21 | 54 |
| 46. | பாலப்பட்டி | கல்வட்டம் | மேட்டுப்பாளையம் | 77 | 0 | 41 | 11 | 18 | 33 |
| 47. | வச்சனம்பாளையம் | கல்வட்டம் | மேட்டுப்பாளையம் | 76 | 58 | 45 | 11 | 21 | 49 |
| 48. | மேட்டுப்பாளையம் | கற்பதுக்கைகள் முதுமக்கள்தாழிகள் | மேட்டுப்பாளையம் | 76 | 59 | 32 | 11 | 20 | 35 |
| 49. | நெல்லித்துறை | கல்வட்டம் | மேட்டுப்பாளையம் | 76 | 56 | 31 | 11 | 18 | 18 |
| 50. | மருதூர் | கல்வட்டம் | மேட்டுப்பாளையம் | 76 | 52 | 18 | 11 | 17 | 24 |
| 51. | தேக்கம்பட்டி | கல்வட்டம் | மேட்டுப்பாளையம் | 76 | 54 | 26 | 11 | 14 | 11 |
| 52. | குறுதுமலை | கல்வட்டம் | மேட்டுப்பாளையம் | 76 | 53 | 20 | 11 | 15 | 18 |
| 53. | கக்கராமொக்கை | கல்வட்டம் | மேட்டுப்பாளையம் | 76 | 55 | 36 | 11 | 15 | 0 |
| 54. | இரும்பறை | கல்வட்டம் | மேட்டுப்பாளையம் | 76 | 51 | 12 | 11 | 14 | 12 |
| 55. | இந்திரா நகர் | கல்வட்டம் | மேட்டுப்பாளையம் | 77 | 5 | 30 | 11 | 20 | 40 |
| 56. | விம்பாண்டம்பாளையம் | கல்வட்டம், பல பிரி-வுடைய கற்பதுக்கை, முதுமக்கள்தாழி, சூதுபவளமணிகள்(3) | ஈரோடு | 77 | 3 | 55 | 11 | 20 | 29 |

| வ.எண். | ஊர்ப் பெயர்கள் | ஈமச்சின்னங்கள் | வட்டம் | அட்சரேகை | | | தீர்க்கரேகை | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 57. | மாரப்பம்பாளையம் | கல்வட்டம், கற்பதுக்கை | ஈரோடு | 77 | 39 | 17 | 11 | 26 | 49 |
| 58. | பெரியபுலியூர் | வாழ்விடங்கள் கல்வட்டம் | ஈரோடு | 77 | 39 | 39 | 11 | 25 | 37 |
| 59. | வைரமங்கலம் | முதுமக்கள்தாழிகள் | கோபிச்செட்டிபாளையம் | 77 | 38 | 31 | 11 | 23 | 9 |
| 60. | சிறைமீட்டான்பாளையம் | முதுமக்கள்தாழிகள் | ஈரோடு | 77 | 38 | 1 | 11 | 25 | 29 |
| 61. | குட்டிபாளையம் | முதுமக்கள்தாழிகள் | ஈரோடு | 77 | 36 | 29 | 11 | 26 | 36 |
| 62. | ப.மேட்டுபாளையம் | கற்பதுக்கைகள், முதுமக்கள்தாழிகள் | கோபிச்செட்டிபாளையம் | 77 | 35 | 35 | 11 | 26 | 30 |
| 63. | கூடப்பட்டி | கற்பதுக்கைகள் முதுமக்கள்தாழிகள் | மன்னார்காடு (கேரளா) | 77 | 35 | 34 | 11 | 27 | 14 |
| 64. | சாலையூர் | கற்பதுக்கைகள், முதுமக்கள்தாழி | மன்னார்காடு (கேரளா) | 77 | 34 | 5 | 11 | 26 | 14 |
| 65. | கோபனாரி | நெடுநிலை நடுகல் | மேட்டுப்பாளையம் | 76 | 41 | 39 | 11 | 9 | 27 |
| 66. | கோட்டத்துறை | நெடுநிலை நடுகல், முதுமக்கள்தாழிகள் | மன்னார்காடு (கேரளா) | 76 | 41 | 25 | 11 | 9 | 27 |
| 67. | இடவாணி | முதுமக்கள்தாழிகள் | மன்னார்காடு (கேரளா) | 76 | 43 | 25 | 11 | 8 | 45 |
| 68. | மேலுமத்தம்படிகா | முதுமக்கள்தாழிகள் | மன்னார்காடு (கேரளா) | 76 | 41 | 19 | 11 | 8 | 15 |
| 69. | மேபாவி | முதுமக்கள்தாழிகள் | மேட்டுப்பாளையம் | 76 | 35 | 6 | 11 | 8 | 31 |
| 70. | அரக்கடவு | வாழ்விடங்கள் முதுமக்கள்தாழிகள் | மேட்டுப்பாளையம் | 76 | 37 | 23 | 11 | 9 | 14 |
| 71. | சுண்டப்பட்டி | முதுமக்கள்தாழிகள் நெடுநிலைக்கல் | மன்னார்காடு (கேரளா) | 76 | 45 | 30 | 11 | 8 | 35 |

| வ.எண். | ஊர்ப் பெயர்கள் | ஈமச்சின்னங்கள் | வட்டம் | அட்சரேகை | | | தீர்க்கரேகை | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 72. | கொரவங்கண்டி | முதுமக்கள்தாழிகள் | மேட்டுப்பாளையம் | 76 | 44 | 55 | 11 | 9 | 45 |
| 73. | எழுத்துகளூர் | நடுகற்கள் | மேட்டுப்பாளையம் | 76 | 43 | 43 | 11 | 11 | 27 |
| 74. | பெரியமுள்ளி | முதுமக்கள்தாழிகள் | மன்னார்காடு (கேரளா) | 76 | 44 | 7 | 11 | 11 | 16 |
| 75. | சின்னமுள்ளி | கல்வட்டம் முதுமக்கள்தாழிகள் | மன்னார்காடு (கேரளா) | 76 | 43 | 23 | 11 | 10 | 59 |
| 76. | மேல்பரளி | கல்வட்டம் முதுமக்கள்தாழிகள் | மேட்டுப்பாளையம் | 76 | 42 | 49 | 11 | 13 | 27 |
| 77. | பில்லூர் | கல்வட்டம் முதுமக்கள்தாழிகள் | மேட்டுப்பாளையம் | 76 | 44 | 4 | 11 | 12 | 42 |
| 78. | கொடியூர் | கல்வட்டம் | மேட்டுப்பாளையம் | 76 | 46 | 10 | 11 | 13 | 46 |
| 79. | சிந்துகனி | கல்வட்டம் | பவானி | 76 | 48 | 29 | 11 | 16 | 21 |
| 80. | வீரக்கல் | கல்வட்டம் | மேட்டுப்பாளையம் | 76 | 49 | 27 | 11 | 15 | 46 |
| 81. | அத்திக்கடவு | கல்வட்டம், நடுகற்கள் | மேட்டுப்பாளையம் | 76 | 50 | 6 | 11 | 16 | 27 |
| 82. | தாமரைக்கரை | கல்வட்டம், நடுகற்கள் | பவானி | 76 | 45 | 12 | 11 | 13 | 25 |
| 83. | பூருகூர் | கல்வட்டம் கற்பதுக்கைகள், நடுகற்கள் | பவானி | 76 | 46 | 00 | 11 | 13 | 11 |
| 84. | பெஜ்ஜில்பாளையம் | கல்வட்டம் கற்பதுக்கைகள் நடுகற்கள் | பவானி | 77 | 33 | 31 | 11 | 46 | 2 |

| வ.எண். | ஊர்ப் பெயர்கள் | ஈமச்சின்னங்கள் | வட்டம் | அட்சரேகை | | | தீர்க்கரேகை | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 85. | துருசினாம்பாளையம் | கல்வட்டம் | பவானி | 77 | 32 | 50 | 11 | 48 | 36 |
| 86. | ஊசிமலை | கல்வட்டம் கற்பதுக்கைகள் | பவானி | 77 | 31 | 43 | 11 | 48 | 16 |
| 87. | தட்டக்கரை | நடுகல் | பவானி | 77 | 32 | 18 | 11 | 49 | 10 |
| 88. | நெல்லூர் | கல்வட்டம்,கற்பதுக் கைகள், நடுகற்கள் | பவானி | 77 | 32 | 39 | 11 | 50 | 15 |
| 89. | கற்கேகண்டி | கல்வட்டம் | பவானி | 77 | 31 | 48 | 11 | 50 | 42 |
| 90. | சோளாகனி | கல்வட்டம் | பவானி | 77 | 27 | 22 | 11 | 53 | 39 |
| 91. | கோரல்கட்டி | கல்வட்டம் | பவானி | 77 | 28 | 16 | 11 | 57 | 29 |
| 92. | மங்கலகரைபுதூர் | கல்வட்டம் | மேட்டுப்பாளையம் | 77 | 35 | 10 | 11 | 51 | 13 |
| 93. | தாயனூர் | கல்வட்டம் | மேட்டுப்பாளையம் | 77 | 35 | 37 | 11 | 49 | 56 |
| 94. | சுள்ளிப்பாளையம் | முதுமக்கள்தாழிகள் | மேட்டுப்பாளையம் | 76 | 56 | 32 | 11 | 15 | 47 |
| 95. | முத்துக்கல்லூர் | முதுமக்கள்தாழிகள் | மேட்டுப்பாளையம் | 76 | 52 | 11 | 11 | 12 | 25 |
| 96. | அந்தியூர் | முதுமக்கள்தாழிகள் | பவானி | 76 | 52 | 49 | 11 | 13 | 48 |
| 97. | புன்னம் | முதுமக்கள்தாழிகள் | பவானி | 76 | 49 | 38 | 11 | 12 | 17 |
| 98. | கல்பாவி | முதுமக்கள்தாழிகள் | பவானி | 77 | 35 | 11 | 11 | 34 | 28 |
| 99. | குறிச்சி | புதிய கற்காலகருவிகள் | பவானி | 77 | 38 | 3 | 11 | 29 | 51 |
| 100. | பெருந்தலையூர் | முதுமக்கள்தாழிகள் | பவானி | 77 | 41 | 26 | 11 | 32 | 35 |
| 101. | பருவாச்சி | கல்வட்டம் | பவானி | 77 | 41 | 26 | 11 | 32 | 35 |
| 102. | கோரக்காட்டூர் | கல்வட்டம் முதுமக்கள்தாழிகள் கற்பதுக்கைகள் | கோபிச்செட்டிபாளையம் | 77 | 32 | 54 | 11 | 27 | 47 |
| 103. | காந்திநகர் | கல்வட்டம் | சத்தியமங்கலம் | 77 | 37 | 53 | 11 | 31 | 34 |
| 104. | இன்டியனபாளையம் | முதுமக்கள்தாழிகள் | சத்தியமங்கலம் | 77 | 28 | 1 | 11 | 24 | 5 |

# 35. கரூர் வட்டாரத் தொல்லியல்

இரா.அன்பரசன், தஞ்சை.
ம.ராஜேஷ், தஞ்சை.

இவற்றைக் கருத்தில் கொண்டு கரூர் வட்டாரப்பகுதியில் கள ஆய்வு மேற்கொள்ளப்பட்டு தொல்லியல் எச்சங்கள் பதிவுசெய்யப்பட்டுள்ளன. இக்கள ஆய்வின் போது கரூர் வட்டாரப் பகுதிகளில் இரும்புகாலத்தைச் சேர்ந்த ஈமச்சின்ன வகைகள் கண்டறியப்பட்டன. இப்பகுதிகளில் கண்டறியப்பட்ட ஈமச்சின்னங்கள் சுமார் 10 முதல் 50 ஏக்கர் பரப்பளவு கொண்டுள்ளன. இங்கு காணப்படும் ஈமச்சின்னங்களின் அமைப்பு மற்றும் வாழ்விடப்பகுதிகள் கொங்கு வட்டாரப் பகுதிகளுக்குரிய சிறப்பு அம்சங்களை எடுத்துக்காட்டுகிறது. பொதுவாக கிழக்குப் பகுதியிலேயே வாழ்விடங்களின் எச்சங்கள் காணப்படுகின்றன. மேலும் தொல்லியல் ஈமச்சின்னங்கள் ஆற்றுப்படுகையின் அருகில் காணப்படும்போது ஆற்றின் மறுமுனைகளில் வாழ்விடப்பகுதிகள் கண்டறியப்பட்டுள்ளன. (கேதம்பட்டி, நாகம்பள்ளி, மஹாலக்ஷ்மிபுரம் மற்றும் திருவெஞ்சாமக்கூடலூர்) இந்த கள ஆய்வின் போது கற்குவியலுடன் கூடிய கல்வட்டம், கல்வட்டத்துடன் கூடிய முதுமக்கள்தாழி, மற்றும் கல்வட்டத்துடன் கூடிய கற்பதுக்கைபோன்ற இரும்புகாலச் ஈமச்சின்ன வகைகள் கண்டறியப்பட்டன. மேற்சுட்டிய ஈமச்சின்னங்களைக் கொண்டு கிழக்கு, மேற்கு, வடக்கு மற்றும் தெற்கு என கரூர் வட்டாரப் பகுதிகள் பிரிக்கப்பட்டன.

மண்மங்கலம் மற்றும் புகளூர் உள்ளடக்கிய பகுதிகளின் ஈமசின்னங்களின் தொடர்ச்சியானது கரூரின் வடக்கே சேலம் மாவட்டம் எல்லை வரை செல்கிறது (மோகனூர்)[2]. இந்தப் பகுதிகளில் கற்குவியலுடன் கூடிய கற்பதுக்கை அதிக அளவில் காணப்படுகிறது. பொதுவாக இந்த ஈமச் சின்னங்கள் ஆற்றுப்படுகைகளில் மேற்சுட்டியவாறே அமைந்திருக்கின்றன. இந்தப் பகுதியில் கற்பதுக்கை மற்றும் தாழிவகை ஈமச்சின்னங்கள் கிடைக்கப்பெற்றாலும், எல்லைப்பகுதிகளில் தாழிவகைகள் அதிகமாகக் காணப்படுகிறது. இந்த பகுதியில் காணப்படும் ஈமதாழிகள் அமைப்புகளில் கோயமுத்தூர் மற்றும் ஈரோடு வட்டாரத்தினுடைய கல்பதுக்கையின் பாதிப்புகள் இருக்கக்கூடும் எனத் தோன்றுகிறது. மேற்சுட்டிய அனைத்து வகையான இரும்புகால ஈமச்சின்னங்களும் அரவக்குறிச்சி வட்டத்திலுள்ள கீழ்கேதம்பட்டி என்ற இடத்தில் கண்டறியப்பட்டுள்ளன. மேலும் தற்போது மேற்கொள்ளப்பட்ட மேற்பரப்பாய்வின்போது நுண்ணிய கற்காலத்தைச் சேர்ந்த இரண்டு கருவிகள் கண்டறியப்பட்டன. ஆனால் இவற்றைப்பற்றி மேலும் ஆய்வுகள் செய்ய வேண்டியுள்ளது.

அரவக்குறிச்சியின் தென்மேற்குப் பகுதியில் நோக்கும்போது, குறைந்த அளவு மட்டுமே தொல்லியல் சின்னங்கள் காணப்படுகின்றன. ஏனெனில் இந்த பகுதியில் ஏராளமான கல்குவாரிகள் இருப்பதால் இந்த ஈமச்சின்னங்கள் சேதப்படுத்தப்பட்டுள்ளன. கொத்தபாளையம்,

புரவிபாளையம், குளத்தூர், பல்லபாளையம் போன்ற இடங்களில் கல்வட்டம் அகற்றப்பட்ட நிலையில் காணப்படுகிறது.

தென்பகுதியில் காணப்படும் ஈமச்சின்னங்கள் தென்பகுதிநோக்கி நகர்ந்து திண்டுக்கல் மாவட்டம் நோக்கிச் சென்று (சங்க கால வணிக வழிப்பாதை) அயிரைமலையைச் சென்றடைகிறது. இந்த அயிரை மலையில்தான் சேரர்களின் போர்க்கடவுள் கொற்வை காணப்படுகிறது.

கரூரின் கிழக்குப் பகுதியில் குறிப்பாக மூக்கணாங்குறிச்சி, பஞ்சமாதேசி ஆகிய இடங்களைத் தொடர்ந்து குளித்தலை வட்டத்தின் கிழக்குப் பகுதியில் ஆதிநத்தம், கருங்கநத்தம், குரும்பநத்தம் போன்ற வாழ்விடப் பகுதிகள் கண்டறியப்பட்டன. பண்டைய கொங்குப் பெருவழி என்ற வணிகப் பாதையானது இந்த வழியேதான் திருக்காம்புலியூர், அழகரை மற்றும் உறையூர் வழியே பூம்புகாரைச் சென்றடைய முடியும். இப்பகுதியில் விவசாயத்தின் காரணமாக பல இரும்புகால ஈமச்சின்னங்களைக் கொண்ட இடங்கள் அழிக்கப்பெற்றுவிட்டது.

இங்குள்ள இரும்புகாலச் ஈமச்சின்னங்களை மூன்று பிரிவுகளாகப் பிரிக்கலாம். கற்களுடன் கூடிய கல்வட்டம், கல்வட்டம் மற்றும் முதுமக்கள்தாழி. இவற்றில் கற்பதுக்கை மற்றும் முதுமக்கள்தாழி மண்ணில் மறைந்து காணப்படுவதினால் இவை கற்பதுக்கையா அல்லது கற்பதுக்கையுடன் கூடிய முதுமக்கள் தாழியா அல்லது முதுமக்கள்தாழி வகையைச் சேர்ந்ததா என அறிய தயக்கம் ஏற்படுகிறது.

**கற்குவியலுடன் கூடிய கல்வட்டம்**

இவ்வகை ஈமச்சின்னங்களின் மையப்பகுதியில் சிறிய கருங்கற்களையோ அல்லது பளிங்கு கற்களையோ கொண்டு நிரப்பப்பட்டுள்ளது. இக்கற்குவியலின் உயரம் கல்வட்டத்திலிருந்து அதிகமாகக் காணப்படுகிறது. கடினமில்லாத மண்பகுதியில் 30 முதல் 60 செ.மீ. கீழே தான் தாழிவகை அல்லது கற்பதுக்கைக் காணப்படுகிறது. இந்த நிலையில் இக்கற்குவியலின் உயரமானது 50 முதல் 60 செ.மீ. உயரத்திற்குள் தான் காணப்படுகிறது. இவற்றில் நல்ல முறையில் தயார் செய்யப்பெற்ற கல்வட்டம் பயன்படுத்தப் பட்டுள்ளது. ஆட்டயாம்பாளையம் கீழ்கேதம்பட்டி மற்றும் மஹாலெட்சுமி புரம் போன்ற இடங்களில் நல்ல தொழிற்நுட்பத்துடன் கல்வட்டங்கள் அமைக்கப்பட்டுள்ளன.

**கல்வட்டம்**

அரவங்குறிச்சி வட்டப் பகுதிகளை நோக்கும்போது கல்வட்ட ஈமச்சின்னங்களே பெரிதும் காணப்படுகின்றன. இந்தப் பகுதிகளில் பெரும்பாலும் கல்வட்டத்துடன் கூடி முதுமக்கள் தாழியே அதிகமாகக் காணப்படுகின்றன. பொதுவாக இந்த ஈமச்சின்னங்களுக்கு இடையே குறைந்த அளவு இடைவெளி காணப்படுகின்றன. (காருடையான்பாளையம், கரூர் வட்டம்).

**கற்பதுக்கை**

இக்கற்பதுக்கை வகையானது, நான்கு பலகைக்கற்கள் வலப்புறமாகவோ அல்லது இடபுறமாகவோ அடிப்பலகை ஒன்றின்மீது வைக்கப்பெற்றிருக்கும். இதன் கிழக்குப் பலகையில் இடுதுளை காணப்படும். கரைப்பாளையம் பகுதியில் மட்டுமே நீண்ட கற்பதுக்கை கண்டறியப் பெற்றது. இந்த கற்பதுக்கைகள் பெரும்பகுதி நிலத்திற்குக் கீழே காணப்படுவதால் இவற்றில் இடுதுளை இருப்பதை அறிய முடியவில்லை.

**முதுமக்கள் தாழி**

முதுமக்கள் தாழி வகையானது, தெற்கு மற்றும் தென்கிழக்குப் பகுதியில் அதிக அளவு காணப்படுகிறது. இவற்றில் காணப்படும் முதுமக்கள் தாழிகளின் வாய் பகுதி அகன்றும், பட்டன் அமைப்பை ஒத்த அடிப்பகுதியும் கொண்டுள்ளது. மேலும் இதன் வாய்ப்பகுதி உருண்டையாகவும் தடித்தும் காணப்படுகிறது. முதுமக்கள்தாழி வெளிப்புறத்தில் மாலை போன்ற பூ வேலைப்பாடு செய்யப்பட்டுள்ளது. கீழ்கேதம்பட்டி என்ற இடத்தில் மூடுகல்லுடன் முதுமக்கள் தாழி கண்டறியப்பட்டுள்ளது. இம் முதுமக்கள் தாழி செங்குத்தாகவும் இதன் அருகிலேயே சடங்கிற்கு வைக்கப்பட்ட பானைகளும் கண்டறியப்பட்டன.

இந்த ஈமச்சின்னங்களைச் செய்வதற்கான மூலப்பொருட்கள் ஈமச்சின்ன இடங்களின் அருகிலேயே காணப்படுகின்றன. கல்வட்டம், பலகைகற்கள் மற்றும் மூடுகல் போன்றவை பெரும்பாலும் கருங்கற்காலாலேயே செய்யப்பட்டுள்ளன. ஆத்தூர், பல்லப்பாளையம், காருடையான்பாளையம், மடைகாட்டுபுதூர், வடுகனூர் மற்றும் கீழ்தேகதம்பட்டி போன்ற இடங்களில் மூடுகற்கள் கண்டறியப்பட்டுள்ளன. இந்த பகுதிகளில் பலகைகற்களில் காணப்படும் உளியின் அச்சினை நோக்கும்போது இவற்றை மூலக்கற்களில் இருந்து வெட்டியிருப்பது தெளிவாகிறது.



| கரூர் வட்டாரத் தொல்லியல் - பட்டியல் | | | |
|---|---|---|---|
| வ.எண். | ஊர்ப் பெயர்கள் | வட்டம் | ஈமச்சின்ன வகைகள் |
| 1. | ஆதிநத்தம் | குளித்தலை | வாழ்விடப்பகுதி |
| 2. | அருமைக்காரன்பட்டி | கரூர் | கல்வட்டம் |
| 3. | ஆத்தூர் | கரூர் | கல்வட்டத்துடன் கூடிய கற்பதுக்கை |
| 4. | கீழ்கேதம்பட்டி | அரவக்குறிச்சி | கல்வட்டம், கற்குவியலுடன்கூடி கல்வட்டம், முதுமக்கள் தாழி மற்றும் கற்பதுக்கைகளுடன் கூடிய முதுமக்கள் தாழி |
| 5. | கூடலூர் | அரவக்குறிச்சி | கல்வட்டத்துடன் கூடிய கற்பதுக்கை |
| 6. | காலிப்பாளையம் | அரவக்குறிச்சி | கல்வட்டம் |
| 7. | கரைப்பாளயைம் | அரவக்குறிச்சி | கல்வட்டம் |
| 8. | காருடையாம்பாளையம் | அரவக்குறிச்சி | கல்வட்டம், கற்குவியலுடன்கூடிய கல்வட்டம் மற்றும் கற்பதுக்கை |
| 9. | கருங்கநத்தம் | குளித்தலை | வாழ்விடப்பகுதி |
| 10. | கரூர் | கரூர் | வாழ்விடப்பகுதி |
| 11. | கேதம்பட்டி | கரூர் | கற்பதுக்கை மற்றும் முதுமக்கள்தாழி |
| 12. | கொத்தப்பாளையம் | அரவக்குறிச்சி | வாழ்விடப்பகுதி |
| 13. | குண்டாங்கல்மேடு | குளித்தலை | வாழ்விடப்பகுதி |
| 14. | குரும்பநத்தம் | குளித்தலை | வாழ்விடப்பகுதி |
| 15. | குரும்பபட்டி | அரவக்குறிச்சி | கல்வட்டம் |
| 16. | மடைக்காட்டுபுதூர் | அரவக்குறிச்சி | கல்வட்டம் கற்குவியலுடன் கூடிய கல்வட்டம் |
| 17. | மஹாலெட்சுமிபுரம் | அரவக்குறிச்சி | கல்வட்டம் |
| 18. | மலைக்கோவிலூர் | அரவக்குறிச்சி | கற்குவியலுடன் கூடிய கல்வட்டம் |

| வ.எண். | ஊர்ப் பெயர்கள் | வட்டம் | ஈமச்சின்ன வகைகள் |
|---|---|---|---|
| 19. | மண்மங்கலம் | கரூர் | கல்வட்டம், கற்குவியலுடன் கூடிய கல்வட்டம் |
| 20. | மாயனூர் | கரூர் | கற்குவியலுடன்கூடிய கல்வட்டம், கோட்டைமதில் சுவர் |
| 21. | மூக்கனாங்குறிச்சி | கரூர் | கல்வட்டம் |
| 22. | முன்னூர் | அரவக்குறிச்சி | கற்குவியலூடன்கூடிய கல்வட்டம் |
| 23. | நாகம்பள்ளி | அரவக்குறிச்சி | கல்வட்டம் |
| 24. | நத்தமேடு | கரூர் | வாழ்விடப்பகுதி |
| 25. | ஒண்டம்பட்டி | அரவக்குறிச்சி | கல்வட்டம் |
| 26. | பள்ளபாளையம் | அரவக்குறிச்சி | கற்பதுக்கை |
| 27. | பணப்பாளையம் | அரவக்குறிச்சி | கல்வட்டம் |
| 28. | பஞ்சமாதேவி | கரூர் | வாழ்விடப்பகுதி |
| 29. | பரமத்தி | அரவக்குறிச்சி | கற்குவியலுடன்கூடிய கல்வட்டம் |
| 30. | பசுபதிபாளையம் | அரவக்குறிச்சி | கற்குவியலுடன் கல்வட்டம், கல்வட்டம் |
| 31. | பவித்திரம் | அரவக்குறிச்சி | கல்வட்டம் |
| 32. | பில்கல்மேடு | கரூர் | வாழ்விடம் |
| 33. | பொரனி | கரூர் | கல்வட்டம் |
| 34. | புகளூர் | கரூர் | வாழ்விடப்பகுதி |
| 35. | புண்ணம் | கரூர் | கல்வட்டம் |
| 36. | புத்தாம்பூர் | கரூர் | கற்குவியலுடன் கூடிய கல்வட்டம் |
| 37. | இராமகவுண்டன்புதூர் | அரவக்குறிச்சி | கல்வட்டத்துடன் கூடிய கற்பதுக்கை |
| 38. | ரெங்கநாதபுரம் | அரவக்குறிச்சி | கற்குவியலுடன் கூடிய கல்வட்டம் |

| வ.எண். | ஊர்ப் பெயர்கள் | வட்டம் | ஈமச்சின்ன வகைகள் |
|---|---|---|---|
| 39. | செனபிரட்டி | கரூர் | வாழ்விடம் மற்றும் முதுமக்கள்தாழி |
| 40. | சோமூர் | கரூர் | வாழ்விடப்பகுதி |
| 41. | திருக்காம்புலியூர் | கரூர் | வாழ்விடப்பகுதி |
| 42. | உப்புப்பாளையம் | கரூர் | கல்வட்டம் |
| 43. | வடுகனூர் | அரவக்குறிச்சி | கற்குவியலுடன் கூடிய கல்வட்டம் |
| 44. | இராமநாதபுரம் | அரவக்குறிச்சி | கல்வட்டத்துடன்கூடிய கற்பதுக்கை |
| 45. | வாழநாயக்கன்பட்டி | அரவக்குறிச்சி | கல்வட்டம் மற்றும் முதுமக்கள்தாழி |
| 46. | வேலாயுதம்பாளையம் | அரவக்குறிச்சி | தமிழ் பிராமி கல்வெட்டு |
| 47. | வெள்ளியணை | கரூர் | வாழ்விடப்பகுதி |
| 48. | வெஞ்சமகூடலூர் | அரவக்குறிச்சி | கல்வட்டம் |
| 49. | வேட்டைமங்கலம் | கரூர் | வாழ்விடப்பகுதி |
| 50. | விஜிபி நகர் | கரூர் | கற்குவியலுடன் கூடிய கல்வட்டம் |

# 36. இலட்சுமியம்மாள்புரம் சமண குகைப்பள்ளி

கி.குமார், சென்னை,

வேலூர் மாவட்டம், குடியாத்தம் வட்டத்தில் மேல்பட்டி இரயில் நிலையத்திற்கு வடக்கே சுமார் நான்கு கி.மீ. தொலைவில் இலட்சுமியம்மாள்புரம் என்னும் சிற்றூர் உள்ளது. இவ்வூருக்கு வடமேற்கே சுமார் ஒரு கி.மீ. தொலைவில் ஜவுரிக்கல் என்றழைக்கப்படும் மலை அமைந்துள்ளது. இம்மலை பொகலூர் மலையின் தொடர்ச்சியாகும். ஜவுரிக்கல் மலையின் தெற்குச் சரிவில் சுமார் 200 அடி உயரத்தில் இயற்கையாக அமைந்த இரண்டு குகைகள் தெற்கு நோக்கியவாறு காணப்படுகின்றன. இதனை உள்ளூர் மக்கள் 'பாண்டுராஜா பாறை' என்றும் 'சாம்பிராணி கெவி' என்றும் அழைக்கின்றனர்.

பாண்டுராஜா பாறையின் கிழக்குப் பகுதியில் உள்ளது சிறிய குகையாகும். இக்குகையின் முன்புறம் சுமார் ஒரு மீட்டர் உயரம் உள்ளது. உட்பகுதி மிகவும் குறுகலாகக் காணப்படுகிறது. இதன் நீளம் சுமார் 5 மீட்டரும் அகலம் 3 மீட்டரும் உள்ளது. இக்குகையினுள் சிறிது வழவழப்பாக்கப்பட்ட ஐந்து பாறைப் படுக்கைகள் அமைக்கப்பட்டுள்ளன. அவைகளுக்குத் தலையணைப் பகுதி வெட்டப்படவில்லை. இப்படுக்கைகள் வடக்கு-தெற்காக சரிவாக காணப்படுகின்றன.

இரண்டாவது குகைப்பள்ளியானது முதல் குகையை ஒட்டியவாறு சற்று மேற்கில் அமைந்துள்ளது. இதனுடைய நுழைவுப் பகுதி சுமார் ஒன்றரை மீட்டர் உயரம் உள்ளது. இக்குகையின் உட்பகுதியும் மிகவும் தாழ்வாகக் காணப்படுகிறது. இது சுமார் 7 மீட்டர் நீளமும் 5 மீட்டர் அகலமும் கொண்டுள்ளது. இதனுடைய அடித்தளம் சமணத் துறவிகள் உறைவதற்கேற்ப சமமாகக் காணப்படுகிறது. இக்குகையின் கூரைப்பகுதி செதிள் செதிளாகப் பெயர்ந்து விழுவதால் குகை முழுவதும் பாறை துண்டுகள் பரவிக் கிடக்கின்றன. இக்குகைப்பள்ளிக்கு எதிரே சமமான பகுதி உள்ளது.

**தீர்த்தங்கரர் சிற்பம்**

கிழக்கு பகுதியிலுள்ள சிறிய குகையின் முகப்பின் மேல் பகுதியில் 65 செ.மீ. அகலமும் 60 செ.மீ. உயரமும் கொண்ட தீர்த்தங்கரரின் சிற்பம் மிக அழகாக வடிக்கப்பட்டுள்ளது. தீர்த்தங்கரர் சிறிய மேடையின் மீது தியான நிலையில் அர்த்த பரியங்காசனத்தில் அமர்ந்துள்ளார். இவரின் முகமும், உடலமைப்பும் தட்டையாக வடிக்கப்பட்டுள்ளன. தீர்த்தங்கரரின் முக அமைப்பு அமைதியான தோற்றத்தில் காணப்படுகிறது. காதுகள் நீளமாக

வடிக்கப்பட்டுள்ளன. தீர்த்தங்கரரின் தலைக்கு மேல் மெலிதாக முக்குடை செதுக்கப்பட்டுள்ளது. முக்குடைக்கு இரண்டு பக்கங்களிலும் தர்ம சக்கரம் போன்ற அமைப்பும் அதற்கருகில் மலர் மொட்டுகள் கீழே தொங்குவது போலவும் செதுக்கப்பட்டுள்ளன. தீர்த்தங்கரருக்கு இரு பக்கங்களிலும் இரண்டு இயக்கர்கள் நின்ற நிலையில் உள்ளனர். அவர்கள், ஒரு கையினால் தீர்த்தங்கரர் மீது மலர் தூவுவது போலவும், மற்றொரு கையில் மலர்கள் வைத்திருப்பது போலவும் காணப்படுகின்றனர். இயக்கர்களின் இடுப்பில் கச்சை அணிந்துள்ளனர். காதுகளில் அணிகலன்களும் தலையில் மகுடமும் அணிந்து காணப்படுகின்றனர்.

தீர்த்தங்கரரின் சிற்பம் கி.பி. 8ஆம் நூற்றாண்டின் கலைப்பாணியில் காணப்படுகிறது. ஆகவே, இக்குகைப் பள்ளியும் அதே நூற்றாண்டில் தோற்றுவிக்கப்பட்டிருக்கலாம். கல்வெட்டுகள் எதுவும் இங்கு காணப் படவில்லை. இக்குகைப்பள்ளிக்கு அருகே பெருங்கற்கால சின்னங்கள் (Dolmen) ஏராளமாகக் காணப்படுகின்றன.

இக்குகைப்பள்ளி அமைந்துள்ள மலைக்கு வடபகுதியில் பொகலூர் என்றழைக்கப்படும் ஊர் அமைந்துள்ளது. பண்டை காலத்தில் இவ்வூர் சமணர்களின் புகலிடமாக விளங்கியிருக்க வேண்டும். ஆகவேதான், இவ்வூருக்குப் பொகலூர் என்றும் புகளூர் என்றும் பெயர் வழங்கப் பட்டிருக்க வேண்டும் எனக் கருதப்படுகிறது. இவ்வூரில் மிகவும் பழமை வாய்ந்த பைரவநாதர் கோயில் ஒன்றும் காணப்படுகிறது.



இலட்சுமி அம்மாள்புரம் சமணகுகைப்பள்ளியின் முன்புறத் தோற்றம்



இலட்சுமியம்மாள்புரம் - தீர்த்தங்கரர் சிற்பம்

# 37. அம்பாசமுத்திரம் பகுதியில் முற்காலப் பாண்டியர் காலச் சிற்பங்கள்

சு. கண்ணன், அண்ணாமலை நகர்.

திருநெல்வேலி மாவட்டம் அம்பாசமுத்திர வட்டத்தில் அம்பாசமுத்திரம் மற்றும் அரிகேசரிநல்லூர் ஆகிய ஊர்களில் அண்மையில் மேற்கொள்ளப்பட்ட கோயிற் களஆய்வுகளின் போது இதுவரை அறியப்படாத முற்காலப் பாண்டியர்களின் காலத்தைச் சேர்ந்த சிற்பங்கள் புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்டன. இச்சிற்பங்களின் காலத்தை கி.பி. 9ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி எனக்கொள்ளலாம்.

அம்பாசமுத்திரம் திருமூலநாதசுவாமி கோயிலுள்ள பிற்காலத்தில் கட்டப்பட்ட பெருமாள் சன்னதியின் கருவறையில் முற்காலப் பாண்டியர் காலத்தைச்சேர்ந்த திருமாலின் நெடிய சிற்பம் ஒன்று (ஒளிப்படம் 1) காணப்படுகிறது. இச்சிற்பத்தில் திருமால் சமபாதஸ்தானக நிலையில் நின்றவாறு காட்சியளிக்கிறார். திருமால் அணிந்துள்ள நீண்ட கூம்பு வடிவ கிரீடம், கனத்த காதணிகள், அலங்கரிக்கப்பட்ட வளைந்து செல்லும் பட்டையான முப்புரிநூல், எளிய அணிகலன்கள், கீழாடையின் வடிவமைப்பு போன்ற சிற்பவியல் தன்மைகள் இச்சிற்பத்தை முற்காலப் பாண்டியர்களின் கலைப்படைப்பு எனத் தெளிவாக உணர்த்துகின்றன. திருமால் சிற்பத்தின் நீண்ட உடலமைப்பும் நீள்வட்டவடிவ முகத்தோற்றமும் இச்சிற்பத்தில் பல்லவ சிற்பக்கலையின் தாக்கம் இருப்பதைச் சுட்டிக்காட்டுகின்றன.

அம்பாசமுத்திரம் காசிபநாதர் கோயிலின் தெற்கு வெளிப்பிரகாரத்தில் யானையின் மீது பரியங்காசனத்தில் அமர்ந்தவாறு காட்சியளிக்கும் இந்திரனின் முற்காலப் பாண்டியர்காலச் சிற்பம் தனியாக காணப்படுகிறது. இந்திரன் சிற்பத்தின் நறுங்கிய உடல்கூறு அமைப்பு, வட்ட வடிவ முகம், குறைவான அணிகலன்கள் ஆகியன முற்காலப் பாண்டியர்களின் சிற்பக்கலைத் தன்மையை வெளிப்படுத்துகின்றன. இச்சிற்பம் முன்னர் காசிபநாதர் கோயிலில் அமைந்துள்ள எரிச்சாவுடையார் கோயிலின் கிழக்கு கிரீவ கோஷ்டத்தில் இருந்திருக்கலாம் எனத் தெரிகிறது.

அம்பாசமுத்திரம் வட்டம் அரிகேசரிநல்லூரிலுள்ள அரிகேசநாதர் கோயிலின் தெற்கு வெளிப்பிரகாரத்தில் முற்காலப் பாண்டியர் காலத்தைச் சேர்ந்த லகுலீசர், சேட்டை ஆகியோரின் சிற்பங்களும், கிழக்கு வெளிப் பிரகாரத்தில் காவல்பூதச் சிற்பமும் கண்டறியப்பட்டுள்ளன. இவற்றில் சேட்டை மற்றும் காவல்பூத உருவங்கள் மண்ணில் புதையுண்டுள்ளன.

லகுலீசர் சிற்பத்தில் (ஒளிப்படம் 2) லகுலீசர் இரண்டு கரங்களுடன் யோக நிலையில் பத்மாசனத்தில் அமர்ந்த வண்ணம் தோற்றமளிக்கிறார். இவரின் மடக்கித் தூக்கிய வலதுகரம் அக்ச மாலையைப் பற்றியவாறும் இடது கரம் தொடையின் மீது வைத்தவாறும் அமைக்கப்பட்டுள்ளன. இச்சிற்பத்தில் லகுலீசரின் இடுப்பு மற்றும் தூக்கிய வலதுகையைச் சுற்றி யோக பட்டையொன்று காணப்படுகிறது.

சேட்டை அமர்ந்த நிலையில் காணப்படும் சிற்பத்தில் (ஒளிப்படம் 3) அவளுக்கு வலப்புறம் அவளின் மாட்டுத்தலை மகனும், இடப்புறம் அவளின் மகளும் காணப்படுகின்றனர். சேட்டை இவர்கள் இருவரையும் தழுவியவாறு சித்தரிக்கப்பட்டுள்ளாள். சேட்டை உருவத்தின் உடல் மற்றும் முக அமைப்பு, அவளின் கிரீடத்தின் கீழ் காணப்படும் தடித்த உருளை வடிவ அமைப்பு, கனத்த காதணிகள் போன்றவை இச்சிற்பத்தில் இடம் பெறும் குறிப்பிடத் தக்க முற்காலப் பாண்டியர் காலச் சிற்பவியல் தன்மைகளாகும். (படம் 3)

நன்கு புதையுண்டுள்ள காவல்பூதச் சிற்பம் (ஒளிப்படம் 4) தன்னுடைய மடக்கிய வலது கையில் கதாயுதத்தைத் தூக்கியவாறு காட்சியளிக்கிறது. இச்சிற்பத்தின் உருவத்தோற்றமும், அணிகலன்களின் அமைப்பும் இது முற்காலப் பாண்டியர்களின் கலைப்படைப்பு என உணர்த்துகின்றது.



படம் - 1



படம் - 2



படம் - 3



படம் - 4

# 38. சாளுவங்குப்பம் - குரவை புடைப்புச் சிற்பம்

கோ.திருமூர்த்தி, சென்னை.

மாமல்லபுரத்திலிருந்து வடக்கில் 5 கி.மீ. தொலைவில் சாளுவங்குப்பம் (காஞ்சிபுரம் மாவட்டம்) அமைந்துள்ளது. பல்லவர்களின் அரிய படைப்பான புலிக்குகை மற்றும் அதிரணசண்டேஸ்வரம் குடைவரை கோயில் இவ்வூரில் உள்ளன. மேலும் பல்லவர் காலத்திய தாய்மார் எழுவர் சிற்பங்களும் பல்லவர் சோழர் காலத்திய பாறைக் கல்வெட்டுகளும் இங்குள்ளன. சுனாமி ஏற்பட்ட பிறகு இவ்வூரின் கடலோரத்தில் உள்ள பாறையில் சுப்ரமணியர் கோயிலை குறிப்பிடும் இராட்டிரகூட மன்னன் மூன்றாம் கிருஷ்ணன் காலத்தில் (கி.பி. 9ஆம் நூ.) கல்வெட்டு கண்டறியப்பட்டது.

### அகழாய்வு

சுப்ரமணியர் கோயில் மண்ணுக்குள் புதையுண்டிருக்கும் என்று எண்ணி இந்திய தொல்லியல் துறையின் சென்னை வட்டத்தின் தொல்லியல் கண்காணிப்புப் பிரிவு 2005 மற்றும் 2006ஆம் ஆண்டுகளில் அகழாய்வு மேற்கொண்டது. அகழாய்வில் வரலாற்று தொடக்க காலத்தில் செங்கற்களினால் கட்டப்பட்ட கோயில், கல்லால் ஆன வேல், பல்லவர், ராஷ்டிரகூடர், சோழர் காலத்து தூண், கல்வெட்டுக்கள் கண்டுபிடிக்கப் பட்டன. சுடுமண் உருவங்கள், சுதை உருவங்கள், சுடுமண் விளக்குகள், மட்கலன் ஓடுகள், கூரை ஓடுகள் போன்ற அரும்பொருட்களும் அகழாய்வில் கிடைத்தன. அவற்றுள் முக்கியமானது குரவை புடைப்புச் சிற்பம் ஆகும்.

### குரவை புடைப்புச்சிற்பம்

சுடுமண்ணால் செய்யப்பட்ட இச்சிற்பம் நாற்கர வடிவில் உள்ளது. 16 செ.மீ. உயரத்தையுடைய இச்சிற்பம் முறையே 23 செ.மீ. மற்றும் 17 செ.மீ. அகலத்தை அடிப்பகுதியிலும், மேற்பகுதியிலும் கொண்டுள்ளது. 4 செ.மீ. தடிப்பினை உடையது. இச்சிற்பத்தில் 5 பெண்கள் நின்ற நிலையில் உள்ளனர். ஒருவரையொருவர் தழுவியுள்ளது போல சித்தரிக்கப்பட்டுள்ள இவர்களின் வாய் சற்று திறந்து காணப்படுகிறது. தலையில் கொண்டை மற்றும் கழுத்தணிகள் காணப்படுகின்றன. கடைசியில் உள்ள இருபெண்களின் ஓரங்களில் உள்ள கைகள் மட்டும் தொங்கியபடி உள்ளன.

இப்புடைப்புச்சிற்பம் கையால் செய்யப்பட்டுள்ளது. கண்கள் போன்றவை Applique Technique ல் உருவாக்கப்பட்டுள்ளன. தமிழ்நாட்டில் இதுகாறும் கல்லில் செய்யப்பட்ட (Stone plaque) புடைப்புச் சிற்பங்களே கிடைத்துள்ளன. சுடுமண்ணால் செய்யப்பட்ட இப்புடைப்புச் சிற்பம்

'குரவைக் கூத்து' என்பதைக் குறிப்பதாக இதனை நேரில் பார்வையிட்ட எ.சுப்பராயலு கருத்து தெரிவித்துள்ளார். தொண்டகச் சிறுபறைக் குரவையர்[1] என்று திருமுருகாற்றுப்படையில் வரும் அடிகளுக்கேற்ப குரவைக் கூத்தைச் சித்தரிக்கும் இச்சிற்பம் முருகன் கோயிலில் கிடைத்துள்ளமை மேலும் சிறப்புக்குரியதாகும். குரவைக்கூத்து பெண்கள் கைக்கோத்து ஆடும் கூத்தாகும். பெண்கள் எழுவர், எண்மர் கைப்பிணைப்புடன் ஆடப்பட்ட இக்கூத்து சங்கம் மருவிய காலத்தில் இறைவன் முன் ஆடப்பட்ட ஒன்றாக அறியப்படுகிறது.[2]



1. *திருமுருகாற்றுப்படை*, யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலர் உரை, தவத்திரு ஆறுமுக நாவலர் சைவப்பிரகாச வித்தியாசாலை அறக்கட்டளை, சிதம்பரம் 2004, ப. 51.
2. இரா. கலைக்கோவன், 'பல்லவர் பாண்டியர் காலத்தில் ஆடற்கலை', *காவேரி* (பேராசிரியர் எ.சுப்பராயலு மணி விழா மலர்), சென்னை, 2001.

# 39. பல்லவர் செப்பேடுகள் - ஓர் மீள் பார்வை

பு.சந்திரசேகரன், இராஜபாளையம்.

பல்லவச் செப்பேடுகளை முதுபெரும் அறிஞர்கள் கீல்கான், உல்ட்ஜ், டி.என்.சுப்பிரமணியன், டி.வி.மகாலிங்கம், மீனாட்சி, என்.சுப்பிரமணியன் போன்றோர் ஒவ்வொரு எழுத்தாக ஆய்வு செய்துள்ளனர். அவர்களின் ஆய்வு முறையானது செப்பேடு வாசகங்களில் என்ன செய்திகள் இருக்கின்றன என்பதை அப்படியே கட்டுரையாக எழுதும் போக்காக இருந்தது. தற்சமயம் வரலாற்று ஆய்வு முறைகளில் பல பரிணாம வளர்ச்சிகள் ஏற்பட்டுள்ளன. அதில் ஒன்று : ஆவணங்கள் ஒரு கால கட்டத்தில் ஏற்படுத்தும் கருத்துருவாக்கங்கள் என்ன என்பது பற்றி ஆராய்வதாகும். இந்த முறை ஆங்கிலத்தில் `Discourse Analysis' என்ற பெயரில் அழைக்கப்படுகிறது.[1] ரோமிலா தாபர் போன்றோர் இந்த முறையை மெருகுபடுத்திப் பல கட்டுரைகள் எழுதியுள்ளனர்.[2] இந்த முறையைப் பயன்படுத்தி, பல்லவர் காலச் செப்பேடுகளின் சமஸ்கிருதப் பகுதி எந்த விதமான கருத்துக்களை ஏற்படுத்தியுள்ளது என்பது பற்றி இக்கட்டுரையில் ஆராய்ச்சி செய்யப்படுகிறது.

முதலில், பல்லவச் செப்பேடுகளில் காணப்படும் சமஸ்கிருதப்பகுதி, ஒரு புதிய கலாச்சாரத்தைத் தமிழுக்கு அறிமுகப்படுத்தும் வாசகங்களாகும். இவை முழுக்க முழுக்க வட இந்தியக் கலாச்சாரத்தைப் பிரதிபலிக்கும் முழு நூல் (Test) அல்ல. மேலும் இவைகள் தமிழ்நாட்டுப் பாரம்பரியத்தை (Tradition) சிதைக்க முயலும் முயற்சியும் அல்ல. அதற்குப் பதிலாக தமிழ்நாட்டுக் கலாச்சாரத்தில் களப்பிரர் காலத்தில் வளர்ந்திருந்த சில மாற்றுப் (dissent) போக்குகளைத் திசை திருப்பும் பாணியாக அமைந்துள்ளது.

பல்லவச் செப்பேடுகளின் சமஸ்கிருதப் பகுதி, சங்க காலத்தில் பிராமணர்களுக்குக் கொடுக்கப்பட்ட நிலங்கள், களப்பிரர் காலத்தில்[3] பறி போனதால் ஏற்பட்ட விளைவுகளைக் கட்டுப்படுத்தும் நோக்கத்துடன் வாசகங்களைக் கொண்டுள்ளன. இதில் நிலங்களைத் தானமாக வழங்கும் வழக்கமும், அதிலும் பிராமணர்களுக்குத் தானமாக அளிக்கப்படும் நிலங்களைப் பற்றியும் முக்கியமாக விளக்கம் செய்யப்பட்டுள்ளது.

சிம்மவர்மனின் விழவெட்டி[4] செப்பேடுகள், பூதானத்தைக் காட்டிலும் உயர்ந்த தானம் இவ்வுலகத்தில் அறிந்ததில்லை. பூமியை அளிப்பது எல்லா விருப்பங்களையும் நிறைவேற்றும். பிராமணர்களின் சொத்து கொடிய விஷம். மற்ற விஷம் விஷமல்ல. அந்த விஷம் ஒருவனையே கொல்லும். பிராமணன் சொத்தோ புத்திர பௌத்திரர்களையும் கொல்லும் என்று சொல்லுகிறது;

கசாக்குடிச் செப்பேடுகள்[5] பூமிதானத்திலும் சிறந்த தானம் இருந்ததுமில்லை. இருக்கப் போவதுமில்லை. அதை அபகரிப்பதினின்றும் உயர்ந்த பாவம் இருந்ததுமில்லை. இருக்கப் போவதுமில்லை என்கிறது. சங்க கால வீரயுகத்தில் இல்லாத புதிய கருத்தான 'பாவம்' என்பதை முன்னிறுத்தி பிராமணர்களுக்கென்று உருவாகும் புதியச் சொத்துரிமைகள் பறிபோகாமல் தடுக்க, ஒரு புதிய பாரம்பரியத்தை ஏற்படுத்தியுள்ளன பல்லவர் செப்பேடுகள்.

ஒரு கூட்டுச் சொத்துரிமையிலிருந்து தனியார் சொத்துரிமையைத் தோற்றுவித்த செப்பேடுகள், அந்தத் தனியார் சொத்துரிமையைப் பாதுகாக்க வீரயுகத்திற்குப் பின்னால் உருவாகி இருந்த வலிமையான குடும்பப் பிணைப்பு ஆபத்துகளுக்குள்ளாகும் என்று கூறி தன்னுடைய சொத்துக்களைத் தக்க வைத்துக் கொள்கிறது. இது கூட்டுச் சொத்துக்கள் தகர்ந்து குடும்ப சொத்துக்கள் உருவாகிய காலத்தை அடிப்படையாக வைத்துக் கொண்டு எழுதப்பட்டது[5] என்று நன்கு புலப்படுகின்றது.

கூட்டுச் சொத்துக்களை அடிப்படையாகக் கொண்டு இயங்கிய சங்க கால மன்னர் அரசுகள் வீழ்ந்து விட்ட போதில், இன்னமும் கூட்டுச் சொத்துக்களின் தன்மைகள் விலகாத நிலையில் அரச பதவியைக் காப்பதற்காக, அரச பதவிகள் இறையிடமிருந்து தோன்றியுள்ளவைகள் என்று ஒரு தெய்வீக உரிமையை (Divine Right) செப்பேடுகள் ஏற்படுத்தியுள்ளன. பட்டத்தாள்மங்கலம் என்ற கொற்றங்குடிச் செப்பேடுகள்[7] பல்லவ மன்னர்கள் ஒரு அபரிதமான சக்தியைப் பெற்றவர்கள் என்று அவர்களுக்கேச் சொல்கிற பாவனையில் அவர்களின் பிறப்பை சமஸ்கிருத பாரம்பரிய கடவுள் விஷ்ணுவிடமிருந்து ஆரம்பிக்கின்றது. விஷ்ணு-பிரம்மா-அங்கிரஸ்-பிரகஸ்பதி-சமயு-பரத்வாஜர்-துரோணர்-அசுவத்தாமர்-பல்லவர் என்ற ஒரு வாரிசு வழியைச் சுட்டிக்காட்டி, ஒரு குலம் அரச குலமாக மாற வேண்டுமென்றால், ஒரு பெரிய பரம்பரை உருவாக்கப்பட்டிருக்க வேண்டும். அப்படி உருவாக்கப்படுவதற்கு, செப்பேடுகள் காரணமாகின்றன என்பதையும் விவரிக்கின்றன.

நில உடமைச் சமூகத்தில் தோன்றிய பல்லவ மன்னர்கள், வீரயுக மன்னர்களைப் போலக்கூட்டுக் குடும்பமன்னர்கள் அல்ல. அவர்களுக்கும் மக்களுக்குமிடையே இருந்த உறவு இரத்த உறவல்ல என்பதால், மக்களுக்கும் மன்னனுக்குமிடையே ஒரு உறவினை ஏற்படுத்த பக்திக் கண்ணோட்டத்தை செப்பேடுகள்அறிமுகப்படுத்தியுள்ளன. பீகிரச் செப்பேடுகள்[8] சிம்மவர்மனைப் பற்றிச் சொல்லும் பொழுது பகவானுடைய பாதங்களைத் தியானிப்பவன், பப்ப பட்டாரகர் திருவடிகளில் பக்தி பூண்டவன் என்று கூறுகின்றது.

ரேயூருச் செப்பேடுகள்[9] ஸ்ரீநரசிம்மவர்மனைப் பற்றிச் சொல்லும் போது, அவன் பாகவதர்களில் (விஷ்ணு பக்தர்களில்) சிறந்தவனும், மாகேசுவரர்களில் (சிவனடியார்களில்) தலையானவனும், பிரம்மண்யர்களில்

சிறந்தவனும், பப்பட்டாரர்களுடைய திருவடிகளில் பக்தி பூண்டவனு மானவன் என்று பக்தியை அறிமுகப்படுத்துவதை முக்கியமாகக் கொண்டுள்ளது. இந்தக் கருத்து ஆர்.செண்பக இலட்சுமி குறிப்பிடும் பக்தி கருத்து தமிழ் பக்தி இலக்கியங்கள் மூலம் வந்தது[10] என்பதற்கு மாறாக செப்பேடுகளிலே காணப்படுகிறது.

செப்பேடுகள் பழைய பாரம்பரியத்திலிருந்த வேறானவைகளை ஒன்று கூட்டி, ஒரு புதிய பாரம்பரியத்தை உருவாக்கியது என்பதை நாம் அறிய முடிகிறது.

**அடிக்குறிப்புகள்**

1. Rajan Gurukkal (1996) 'Towards a New Discouse : Discursive Process in Early South India', (ed) R.Champakalakshmi, Tradition, Dissent & Ideology, Oxford University, New Delhi, 114 001, p. 312.
2. Romila Thapar, 'Society and Historical, Consciousness:(1986) The Itithasa-Purana Traditions' in S.Bhattacharya and R.Thapar (ed) Situating Indian History, OUP, New Delhi.
3. 'வேள்விக்குடிச் சாசனம்', *பாண்டியர் செப்பேடுகள் பத்து*, தமிழ் வரலாற்றுக் கழகம், சென்னை, 1967, பக்கம் - 19.
4. பல்லவர் செப்பேடுகள் முப்பது.
5. மேலது
6. Rajan Gurukkal, *op. cit.*,
7. 'பட்டத்தாள் மங்கலம் செப்பேடுகள்', பல்லவர் செப்பேடுகள் முப்பது, தமிழ் வரலாற்றுக் கழகம், பக். 237.
8. 'பீகிரச் செப்பேடுகள்', *மேலது*, பக். 297.
9. 'ரேயூருச் செப்பேடுகள்', *மேலது*, பக். 75.
10. R.Champalakshmi, From Devotion and Dissent to Domilnance; The Bhakti of the Tamil Alwars and Nayanmars' (ed) R.Champakalakshmi, S.Gopal *Tradition, Dissent and Ideology*, Oxford University Press, 2001, pp-135-163.

# 40. அத்யந்தகாமம்*

இரா.கலைக்கோவன், திருச்சிராப்பள்ளி.

மாமல்லபுரத்தின் தென்பகுதியில் கடற்கரையிலிருந்து சற்றுத் தள்ளி அமைந்திருக்கும் ஒருகல் தளிகள் ஐந்தும் பல்லவர் கலைநயம்பேசும் சிற்பச் செழுமைகள். இவற்றுள் ஒரே வரிசையில் அமைந்திருக்கும் நான்கு தளிகளுள் தென்கோடியில் காட்சிதரும் பெருந்தளி உள்ளூர் மக்களால் தர்மராஜரதமென்று உவந்தழைக்கப்படுகின்றது.

மேற்குப் பார்த்த இப்பெருந்தளி முத்தள ஒருகல் தளியாகும். குன்றொன்றை மேலிருந்து செதுக்கி, இரண்டு முன்றில்களும் மூன்று தளங்களும் மூன்று கருவறைகளும் நான்கு முகப்புகளும் எண்ணற்ற சிற்பங்களும் அமைத்துப் பழந்தமிழர்தம் பொறியியல் சிந்தனை வளர்ச்சியின் விரிவையும் அவர்தம் அழகியல் அறிவின் உச்சத்தையும் பல்லவ உளிகள் பொருத்தமுற வடித்துக் காட்டியிருக்கும் இத்தளியே, தமிழ்நாட்டுக் குடைவு செதுக்குப் பணிகளுள் தலையாயதெனலாம். பல முதல்களுக்குச் சொந்தமான இத்தளி நாகர தளங்களைக் கொண்டிருப்பதாலும் இதன் கிரீவ, சிகர அமைப்பு எண்முகமாக இருப்பதாலும் இதைக் கலப்புத் திராவிட விமானமென்றழைப்பதே பொருந்தும்.

### கட்டமைப்பின் சிறப்புக் கூறுகள்

பல்லவர் கட்டடக் கலையில் மட்டுமன்று, தமிழ்நாட்டுக் கலை வரலாற்றிலேயே தர்மராஜரதம் ஒரு திருப்புமுனையெனலாம். செதுக்குத் தளிகளைப் பின்பற்றியமைந்த கட்டுத்தளிகளின் பல்வேறு அமைப்புகளுக்கு அடிப்படையாய் அமைந்த பெருமை இத்தளிக்கு உண்டு.

வடக்குத் தெற்காய் மல்லையில் உருவான நான்கு செதுக்குத் தளிகளுள் முதல் மூன்றினும் மேம்பட்டதாய், பல முதல்களுக்குச் சொந்த மானதாய், முழுமுதற் கடவுளுக்கமைத்த முதல் முழுத் திருக்கோயிலாய் இம்முத்தள ஒருகல் தளியை உருவாக்கினர் பல்லவச் சிற்பிகள். விமானம் எனும் ஆறங்க அமைப்பை முதலில் பெறும் அருச்சுனர்தளியில் கருவறை யில்லை. கருவறை பெற்ற கொற்றவைத்தளியில் ஆறங்கப் பார்வையில்லை. அகன்று விரிந்து ஆறங்கம்பெறும் பீமத்தளியில் படுக்கை மட்டுமே; பராந்தாமன் இல்லை. தள்ளியமைந்துள்ள தூங்கானைத்தளி, தனியாய் அமர்ந்துள்ள கணேசர்தளி, குட்டைக்கருகில் காணப்படும் வலையன்தளி, பிடாரிக்குப் பக்கத் துணையாகியுள்ள எண்ணங்க, நாகரத்தளிகள் என மல்லையில் மலர்ந்த செதுக்குத் தளிகள் எவற்றிற்குமே, 'இறைவன் இனிதமர்ந்த விமானம்' எனும் இணையற்ற பெருமை இல்லாமலே போய்விட்டது.

---

* தவத்திரு நாச்சியப்ப ஞானதேசிக சுவாமிகள் கோவிலூர் சுவாமிகள் ஆண்டவர் பெயரில் ஏற்படுத்திய அறக்கட்டளைச் சொற்பொழிவு. 30.7.2005 அன்று திருவெறும்பூரில் (திருச்சி) ஆவணம் இதழ் 16இன் வெளியீட்டு விழாவில் நிகழ்த்தப் பெற்றது.

பல்லவச் செதுக்குத்தளிகள் ஒன்பதில் தாங்குதளம் பெற்றவை மூன்றே. அவற்றுள் கொற்றவைத் தளியும் அருச்சுனர்தளியும் குடைவரைக் காலத்திலேயே பிறந்துவிட்ட பாதபந்தத் தாங்குதளம் கொண்டன. ஆனால் தர்மராஜரதம் புத்தம் புதிய வடிவமைப்பாய்க் கபோதபந்தத் தாங்குதளம் பெற்றது.

பீமத்தளியும் தர்மராஜரதமும் ஆதிதள அமைப்பு நோக்கில் ஒன்றானவை. இரண்டுமே நாற்றிசைகளிலும் குடைவரை முகப்புகளொத்த திறப்புகள் கொண்டு, சுற்றுவழிச் சூழ்க் கருவறை பெற்றவை. இரண்டிலுமே இச்சுற்றுவழி நிறைவுறவில்லை. ஆதிதளக் கருவறையும் வடிவம் கொள்ளவில்லை. இரண்டுமே நாற்புறத்தும் முகப்புகளையொட்டிப் பக்கச் சுவர்கள் கொண்டவை. இச்சுவரெச்சங்களும் பீமத்தளியில் நிறைவுறவில்லை. பல்நோக்கில் ஒன்றுபடும் இவ்விரு தளிகளின் ஆதிதளங்கள் ஓரமைப்பில் மட்டுமே வேறுபடுகின்றன. தர்மராஜரதத்தின் மேற்கு முகப்பிற்கு முன்னால் முன்றிலொன்று காட்டப்பட்டுள்ளது. பீமத்தளியின் ஆதிதள அமைப்பில் அது இடம் பெறவில்லை.

தர்மராஜரதத்தின் ஆதிதளப் பக்கச் சுவர்கள் சிற்பம் நிறைக்கும் கோட்டங்கள் பெற்றுத் தளவானூர் சத்ருமல்லேசுவரம், மண்டகப்பட்டு இலக்ஷிதாயதனம் ஆகியவற்றின் முகப்புப் பக்கச் சுவர்களை நினைவூட்டினாலும், மேலமர்ந்துள்ள கர்ணகூடங்களோடு இணைத்துப் பார்க்கும்போது, காஞ்சிபுரம் இராஜசிம்மேசுவரம், திருவதிகை வீரட்டானேசுவரம் போன்றவற்றின் அங்கலாய அமைப்புகள் இவற்றை முன்னோடியாகக் கொண்டு மலர்ந்துள்ளமை நன்குணரப்படும்.

பல்லவச் செதுக்குத் தளிகளுள் விமானம் மட்டும் கொண்டமைந்தது கொற்றவைத்தளி ஒன்றுதான். ஏனைய எட்டனுள் ஆறுதளிகள் விமானத்தின் முன் முகமண்டபம் பெற்றன. தூங்கானைத்தளியும் தர்மராஜரதமும் மட்டுமே விமானத்தில் முன் முன்றில் கொண்டன. இவ்விரண்டின் முன்றில்களுள் பேரளவினதாய் அமைவது தர்மராஜரத முன்றிலே. முன்றில், குடைவரைக் காலத்துச் சிந்தனைதான் என்றாலும், தளவானூர் சத்ருமல்லேசுவரத்தில் கருவறைக்கு முன்நிற்கும் அமைப்பாக உருவான அதை தர்மராஜரதத்தின் முகப்பிற்கு முன்னமைப்பாய்க் கொணர்ந்தது. கட்டமைப்புகளை இடமாற்றம் செய்து கடுமானங்களுக்குப் புதுப் பொலிவூட்டிய பல்லவத் துணிவின் சாதனைத் தடமெனலாம்.

பீமத்தளி, கொற்றவைத்தளி தவிர ஏனைய செதுக்குத் தளிகள் அனைத்துமே இரண்டாம் தளம் கொண்டிருந்த போதும், இத்தள அரமியத்தைச் சுற்றிவந்து கண்டு மகிழ வாய்ப்பான சுற்றுவழி அத்யந்தகாமப் பல்லவேசுவர கிருகமான தர்மராஜரதத்தில் மட்டுமே அமைந்துள்ளது. முதல் தள ஆரத்திற்கும் இரண்டாம் தள அரமியத்திற்கும் இடைப்பட்டு அமைந்திருக்கும் இந்தச் சுற்றுவழி தமிழ்நாட்டுத் திருக்கோயில்களில் இடம்பெறுவது இதுவே முதல் முறையாகும். இச்சுற்றுவழியால் அரமியம் ஒட்டாது தள்ளி நிற்கும் ஆரமும் அனர்பிதப் பெருமை கொள்கிறது.

இரண்டாம் தள அரமியத்தில் தொடங்கப்பட்டுத் தடைப்பட்டிருக்கும் கருவறை, வடிவம் கொண்டிருந்தால், இரண்டாம் தளத்திலும் கருவறை பெற்ற முதற் கோயிலென்ற பெருமையை இத்தளிக்கு வழங்கியிருக்கும், கருவறைப் புறச்சுவர்களை அரைத்தூண்களால் பகுப்பதும் அப்பகுப்புகளில் சிற்பங்களை அமைப்பதும் குடைவரைக் காலத்திலேயே தொடங்கிவிட்ட பணி. இப்பகுப்புப் பத்திப் பிரிப்பாகிப் பிதுக்க, ஒடுக்க அமைப்புப் பெற்றது அருச்சுனர்தளியில்தான். சுவரமைப்பில் காட்டப்பட்ட இந்த முன்தள்ளல்களும் உள்வாங்கல்களும் தளிக்கு அழகூட்டின. இதற்கேற்பவே தாங்குதளமும் கூரையுறுப்புகளும் பிதுக்க, ஒடுக்க நிலைகளில் காட்டப்பட்டதுடன், ஆரமும் இத்தொடரொழுங்கில் அமைக்கப்பட்டதால், கட்டட அமைப்பில் அழகுணர்வோடு பொருந்திய மாற்றம் ஏற்பட்டது. ஆதிதளச் சுவரிலேற்பட்ட இந்த மாற்றம், தர்மராஜரதத்தின் அரமியச் சுவர்களில் எதிரொலித்திருப்பதை இரசித்து மகிழலாம். அரமியச் சுவர் பத்திப்பிரிப்பு எனும் இக்கலைமுறை தர்மராஜரதத்தில்தான் முதல் முறையாக முயற்சிக்கப்பட்டிருக்கிறது என்பது இத்தளியின் எண்ணற்ற முதல் பெருமைகளுள் ஒன்றாகும்.

ஆதிதள முகப்புக்கு முன்னுள்ள முன்றில் போலவே, இரண்டாம் தளக் கருவறைக்கு முன்பும் விலங்கடித் தூண்களோடு முன்றிலொன்று அமைக்கப்பட்டுள்ளது. வேறெந்தச் செதுக்குத் தளிகளிலோ அல்லது முத்தளம் கொண்டு பின்னாளில் உருவான பல்லவக் கட்டுத்தளிகளிலோ இது போன்ற இரண்டாம் தள மூன்றில் இடம்பெறவில்லையென்பது குறிப்பிடத்தக்கது.

இரண்டாம் தளத்தின் கிழக்குப் பகுதியில், மூன்றாம் தளம் செல்வதற்காக அமைக்கப்பட்டிருக்கும் இருபுறப் படிவரிசையும் பிடிச்சுவர்களும் அவற்றை உமிழும் மகரங்களும் மேற்படியின் புறத்தமைந்த வளைவுச் சுவரமைப்பும் வேறெந்தப் பல்லவத் தளியிலும் பார்க்கமுடியாத புதுமைகள். அவற்றைத் திட்டமிட்டிருக்கும் பாங்கும் அதற்கேற்ப அரமியத்தின் கிழக்குச் சுவர் கோட்டமேற்றிருக்கும் முறையும் மேற்படியிலிருந்து மூன்றாம் தளத்தினுள் நுழைய வாய்ப்பாக, ஆரச்சுவரை வழிவிட வைத்திருக்கும் நேர்த்தியும் அந்த வழியின் இருபுறத்தும் சுவர்ப் பிளப்புத் தெரியாதவாறு தலைப்போடமைந்த வளைவுகள் காட்டியிருக்கும் நயமும் பல்லவச் சிற்பிகளின் திட்டமிடும் ஆற்றல், செதுக்குத் திறன், கலைநோக்கு ஆகியவற்றின் வெளிப்பாட்டு விளக்கங்களாக ஒளிவீசுகின்றன.

ஆதிதள வலபியை அலங்கரிக்கும் பூதவரி, மேற்கிலுள்ள கோட்டங்களின் மீதும் வட, தென்பக்கங்களிலுள்ள மேற்குக் கோட்டங்கள் மீதும் கணதோரணமாகக் காட்டப்பட்டுள்ளது. பேரறிவாளனுக்குப் பேரளவிலுள்ள மாலையொன்றை கணங்கள் சுமந்துவருமாறு போலக் காட்டப்பட்டுள்ள இத்தோரணம், இராமாநுஜ மண்டப வலபியில்தான் முதல் முறையாக இடம்பெறுகிறது. இதே போன்ற கணதோரணம் தர்மராஜரதத்தின் மூன்றாம் தளக்கருவறை முன்னும் வடிக்கப்பட்டுள்ளது. இம்மூன்று கணதோரணங்களுமே தனித்தன்மை வாய்ந்தவையென்றாலும்,

ஒவ்வொன்றும் மற்றொன்றிலிருந்து ஏதாவதொரு வகையில் வேறுபடுகின்றன. இம்மூன்றனுள் ஆதிதள வலபித் தோரணம் பல சிறப்புகள் பெற்று முதலில் நிற்கிறது.

இராமானுஜ மண்டப கணதோரணமும் தர்மராஜரதத்தின் ஆதிதள கணதோரணமும் வலபியில் அமைந்தவை. ஆனால் தர்மராஜரதத்தின் மூன்றாம் தள கணதோரணம் கபோத முகப்பில் அமைக்கப்பட்டதால், இடம்மாறிய பெருமை கொள்கிறது. இராமானுஜ மண்டபத் தோரணமும் இம்முன்றாம் தளத் தோரணமும் நுழைவாயில்களுக்கு மேலைந்து வாயில் தோரணங்களாயின. ஆதிதளத்தோரணமோ தளத்தின் வடக்கு, தெற்கு முகங்களில் மேற்குப்பகுதிக் கோட்டங்களின் மேலும், மேற்கில் இருகோட்ட வலபிகளிலும் அமைந்து பக்கத் தோரணங்களாய் மலர்ந்துள்ளது. வாயில் தோரணம் வழக்கமானது. ஆனால் பக்கத் தோரணம் புதுமையானது.

தர்மராஜரதத்தின் மூன்றாம் தளத் தோரணம் ஒரே தொடரொழுங்கில் வடக்கு நோக்கி நகரும் கணங்கள் சுமக்கும் மாலையைக் கொண்டுள்ளது. இராமானுஜ மண்டபத் தோரணம் ஒரே தொடரொழுங்கில், ஆனால் எதிரெதிராய் அமைந்த இரண்டு கணத்தொடர்கள் சுமக்கும் இருமாலைகளுடன் உள்ளது. ஆதிதளத் தோரணமோ ஒரே திசை நோக்கிய தொடரொழுங்குடன் இருதொகுதிகளாகப் பிரித்தமைக்கப்பட்ட கணத்தொடர்கள் சுமக்கும் இரண்டு மாலைகள் பெற்றுள்ளது. இம்மூன்று கணதோரணங்களுள் இராமானுஜ மண்டபத் தோரணம் முகப்பு வாயிலுக்கு மேலமர்ந்து முகப்புத் தோரணமாகியுள்ளது. தர்மராஜரதத்தின் ஆதிதளத் தோரணம் சுற்றுவழியின் முதன்மை வாயிலான மேற்கு வாயிலுக்குப் பக்கத் தோரணங்களாய்ப் பிறந்துள்ளது. இதே தளியின் மூன்றாம் தளத்தோரணம் மட்டுமே கருவறை வாயிலுக்கு மேலமைந்த கணதோரணமாய்க் காட்சி தருகிறது.

இராமானுஜ மண்டபத் தோரணம் வலபி முழுவதற்குமாய் அமைந்துள்ளதால் ஒரே அளவினதாய் அமைந்துள்ளது. தர்மராஜரதத்தின் மூன்றாம் தள கணதோரணமும் கபோத முகப்பு முழுவதற்குமாய் இடம்பெற்றிருப்பதால் ஒரே அளவினதாய் உள்ளது. ஆனால் இத்தளியின் ஆதிதள கணதோரணம், கோட்ட வலபிகளின் மீது மட்டும் இடம் பெற்றிருப்பதால், இதிலுள்ள கணங்கள் முகப்பு வலபி கணங்களின் தொடரொழுங்கு போலவே, முதற் பார்வையில் எந்த வேறுபாடும் உணரமுடியாத அளவிற்கு வடிவமைக்கப்பட்டிருக்கும் நேர்த்தி பல்லவரின் ஒருங்கிணைவுத் திறன் மேன்மைக்கும் கட்டுமான உத்திக்கும் சான்று பகர்வதாய்ச் சுடர்கிறது.

செதுக்குத் தளிகளுள் முத்தளம் பெற்ற ஒரே தளி தர்மராஜரதம்தான். இதன் மூன்றாம் தளமும் சுற்றுவழி பெற்றதாய், மேலே ஆரவரிசையுடன் அமைக்கப்பட்டுள்ளது. இரண்டாம் தள அரமியம் போலவே மூன்றாம் தள அரமியமும் பிதுக்கம், ஒடுக்கம் பெற்ற சுவர்களைக் கொண்டுள்ளது. இரண்டாம் தள அரமியச் சுவர்கள் ஒவ்வொன்றும் ஏழு பத்திகளாய்ப் பிரிக்கப்பட்டிருக்க, அளவில் அவற்றினும் சிறியனவான மூன்றாம் தள

அரமியச் சுவர்கள் ஒவ்வொன்றும் ஐந்து பத்திகளாய்ப் பகுக்கப்பட்டுள்ளன. இப்பத்திப் பிரிப்புக் கட்டுமானத்தை எடுப்பாகக் காட்டுவதுடன், எழிலார்ந்ததாகவும் மாற்றியுள்ளது. இடத்திற்கேற்பக் கட்டுமானத்தைத் திட்டமிடுவதும், கட்டுமானத்திற்கேற்பக் கைவண்ணம் காட்டுவதும் எளிதான செயல்களல்ல. ஆனால் பல்லவச் சிற்பாசிரியர்கள் மல்லைக் கடலோரம் முழுவதும் மிக இயல்பாக இவற்றைக் கையாண்டிருப்பது அவர்தம் உள ஆற்றலையும் உளித் திறத்தையும் விளக்குவதாக அமைந்துள்ளது.

மூன்றாம் தளக் கருவறை வாயிலின் மேலும் அதையொட்டிய வல, இடஒடுக்கங்களின் மேலும் காட்டப்பட்டுள்ள கபோதம், ஆதிதள அரமியச் சுவரின் கபோத அமைப்பிலிருந்து முற்றிலும் மாறுபட்டுத் தட்டையான அமைப்புடன் கணதோரணக் களமாகத் திகழ்கிறது. இது போன்ற வடிவமைப்பும் பயன்பாடும் தர்மராஜரதத்திற்கு முற்பட்ட தளிகளிலோ அல்லது அதற்குப் பின்னால் வந்த தளிகளிலோ காணப்பெறாத புதுமைகளாகும். நோக்கிற்கேற்ப மாற்றிய அமைப்புதானென்றாலும் அதன் காரணமாகவே வாயிற் கபோதம் தனிமைப்பட்டுவிடக் கூடாதென்று, அதை அரமியக் கபோதத் தொடரொழுங்குடன் இருபுறத்தும் ஒன்றிணையச் செய்திருக்கும் நேர்த்தி, பல்லவரின் புதுமை அவாவும் போக்கையும் அப்புதிய அமைப்புகளைக் கட்டுமானச் சூழலோடு கரைத்துவிடும் அபாரத் திறத்தையும் வெளிப்படுத்துவதாய் உள்ளது.

ஆதிதள ஆரமாகத் திசைக்கு மூன்று சாலைகளென மேற்குத் தவிர்ந்த முத்திசைகளிலும் ஒன்பது சாலைகள் அமைய, மூலைகளில் கர்ணகூடங்கள். மேற்கில் முன்றிலமைப்பு, கர்ணசாலைகளையும் இடைப்பட்ட உறுப்பாய்ச் சாலையையும் அதன் இருபுறத்தும் பஞ்சரங்களையும் ஆரமாகப் பெற்றுத் தென், வடமூலைக் கூடங்களுடன் தொடரொழுங்கு கொள்கிறது. அவற்றையிணைக்கும் ஆரச்சுவர் இவ்வொழுங்கைத் தன் கட்டுப்பாட்டில் கொண்டு, இவ்வுறுப்புகளைப் பதக்கம் போலாக்கி ஆரத்தொடரை உண்மையானதோர் ஆரமாகவே மாற்றிவிடுகிறது.

இரண்டாம் தளத்தின் ஆரம், தள அமைப்பிற்கேற்ப மேற்குத் தவிர்ந்த முத்திசைகளிலும் திசைக்கு இரண்டு சாலைகள், மூலைகளில் கூடங்கள் எனக் கொண்டு இணைக்கும் சுவருடன் இயல்பான பதிவாக அமைந்தாலும், மேற்கில் கீழ்த்தளம் போலவே மூன்றில் கூரைமீது இடையில் சாலையும் இருபுறத்தும் கர்ணசாலைகளுமென மாறியமைந்துள்ளது. இங்கும் ஆரச்சுவரின் முன்னோட்டம் வட, தென்மூலைக் கூடங்களுடன் இம்மூன்றில் பதக்கத்தை இணைத்து, இணையற்ற ஆரமாக இரண்டாம் தள ஆரத்தை மாற்றிவிடுகிறது. இத்தகு பதக்க ஆரங்கள் வேறு செதுக்குத் தளிகள் எவற்றிலும் அமையவில்லை என்பதும், இப்பதக்கத்தை அமைக்கக் குடைவரைத் தோன்றலான கர்ணசாலைகளையும் புதிய படைப்பான பஞ்சரங்களையும் பல்லவச் சிற்பாசிரியர்கள் மிகச் சிறப்பாகப் பயன்படுத்திக் கொண்டனர் என்பதும் குறிப்பிடத்தக்க சிறப்புகளாகும்.

**சிற்பச் சிறப்புகள்**

பல்லவர்களின் சிற்பத்திறம் குடைவரைக் கோயில்களின் தொடக்கக் காலத்திலேயே வீறுடன் வெளிப்படத் தொடங்கியதாகக் கூறலாம். முதலாம் மகேந்திரவர்மர் கால கங்காதரமூர்த்தியும் புஜங்கத்ராசிதரும் அமலைக் கூத்தர்களும் பல்லவச் சிற்பாசிரியர்களின் செதுக்காற்றலில் விளைந்த செம்மாந்த சிற்பங்களாகும். குடைவரைக் கோயில்களின் இரண்டாம் பருவம் கட்டமைப்பு, சிற்பம் ஆகிய இரு துறைகளிலும் வியத்தகு முன்னேற்றம் காட்டி வளர்ந்தது. மகிடாசுரமர்த்தனி சிற்பத்தொகுதியும் மகாவராக பரமேசுவர விஷ்ணு கிருகக் கொற்றவைத் தொகுதியும் கலையாற்றலின் கலங்கரை விளக்கங்கள்.

முன்னோக்கி வளர்ந்த கலைநோக்கு, மேல்நோக்கிப் பார்த்தபோது விமானங்கள் பிறந்தன. ஒற்றைக்கல் தளிகளெனவும் செதுக்குத் தளிகளென வும் அழைக்கப்படும் மல்லை ரதங்களைப் பல்லவர்கள் தோற்றுவித்த முதல் ஒன்பது விமானங்களாகக் கொள்ளலாம். இவையனைத்துமே கட்டமைப் போடு ஒன்றிய சிற்பங்களைப் பெற்றவைதான் என்றாலும். இப்பருவச் சிற்பக்கலைத்திறம் முழுவீச்சோடு மலர்ந்திருப்பது அருச்சுனர் ரதத்திலும் தர்மராஜா ரதமான அத்யந்தகாமத்திலும் மட்டும்தான்.

அருச்சுனர் ரதத்தோடு ஒப்பிடும்போது அத்யந்தகாமம் சிற்பங்களின் சொர்க்கம். மூன்று தளங்களிலுமாய் ஐம்பத்தொன்பது சிற்பங்கள் திட்டமிடப்பட்டு ஐம்பத்தெட்டுச் சிற்பங்கள் உருவாகியுள்ள உன்னதக் கலைக்களம். மேற்றளக் கருவறைத் தொகுதியையும் உருவாக்கத்தோடு ஒன்றியிருக்கும் கணவரிகள், வியாழவரிகள் கந்தர்வத் தலைகள், விலங்குருவங்கள், மகரங்கள், நிதிக்கணங்களையும் நீக்கிய மேற்கணக்கு, தமிழ்நாட்டின் வேறெந்தச் செதுக்குத்தளியும்பெறாத பேறாகும். தளத்திற்கேற்ப உயரம் கொண்ட கோட்டம், அந்தக் கோட்டத்திற்கென்றே திட்டமிடப்பட்ட சிற்பம் அல்லது சிற்பங்கள், இதுதான் அத்யந்தகாம உருவாக்கச் சிறப்பின் அடிப்படைத் தத்துவம்.

முகப்பிற்கேற்ற உயரத்துடன் அகழப்பட்டிருக்கும் ஆதிதளத்தின் எட்டுக் கோட்டங்களில் ஏழில் இறைவடிவங்கள். இவற்றுள் ஐந்து, தனிக் கடவுளரையும் இரண்டு, ஒன்றாயிணைந்த கடவுளரையும் காட்டுகின்றன. ஒன்றாயிணைந்தவர்களுள் ஹரிஹரர், குடைவரைக் காலச் சிந்தனையாக மகாவராகர் மண்டபத்தின் கருவறைச் சுவரில் இடம்பெற்றுள்ளார். ஆனால் அம்மையப்பர், அத்யந்தகாமம் படிம இயலுக்கு வழங்கிய புதிய பரிசு. பல்லவக் குடைவரைகளிலோ, பிற செதுக்குத் தளிகளிலோ இடம் பெறாத இவ்வடிவம், அவர்தம் கட்டுத் தளிகளிலும் மிக அரிதாவே காணப்படுகிறது. ஆதிதளத்தில் எஞ்சியிருக்கும் எட்டாவது சிற்பம் பல்லவ அரசர் ஒருவரைப் படம் பிடிக்கிறது.

இரண்டாம் தளத்திலுள்ள இருபத்திரண்டு கோட்டங்களுக்கும் இருபத்திரண்டு சிற்பங்கள் திட்டமிடப்பட்டு, இருபத்தொரு சிற்பங்கள் உருவாக்கப்பட்டுள்ளன. தள அரமியத்தின் மேற்கில் கருவறையின்

தென்புறத்தமைய வேண்டிய காலவர் மட்டுமே வடிவம் பெறவில்லை. அரமியத்தின் வடக்கிலும் தெற்கிலும் திசைக்கு ஏழு சிற்பங்களாகப் பதினான்கும், கிழக்கில் நான்கும், மேற்கில் மூன்றுமாக அமைக்கப்பட்டுள்ள இவ்விருபத்தொரு சிற்பங்களுள் சிவபெருமானைக் குறிப்பவை பன்னிரண்டு. மூன்று சிற்பங்கள் விஷ்ணுவையும் ஐந்து சிற்பங்கள் கோயிற் பணியாளர்களையும் ஒரு சிற்பம் வாயிற் காவலரையும் வடிவாய்க் கொண்டு அமைந்துள்ளன.

பன்னிரண்டு *சிவச் சிற்பங்களுள்*, சிவபெருமான் தனித்தமைந்த சிற்பங்கள் நான்கு, சிவபெருமான் இன்னொருவருடன் அல்லது இன்னொன்றுடன் இணைந்தமைந்த எட்டுச் சிற்பங்களுள் இரண்டு அவரது அழிக்கும் ஆற்றலைக் காட்டுவன. ஒன்று, அவரது தாங்கும் பேராற்றலுக்கு எடுத்துக்காட்டாய் விளைந்தது. ஏனைய ஐந்தனுள் இரண்டு கலையோடு தொடர்புடையவை. இரண்டு அனுக்கிரக மூர்த்திகள்.ஒன்று மிருகவாஞ்சை வெளிப்படுத்தும் நந்தியணுக்கர். இப்பன்னிரண்டு சிற்பங்களுள் கங்காதரர் தவிர ஏனைய பதினொன்றும் படிமக்கலை வரலாற்றில் முதல் தோற்றம் காட்டும் இடம்அத்யந்தகாமம்தான். கங்காதரரும் முன்தோன்றிய நிலைகளிலிருந்து முற்றிலும் மாறுபட்டு வேறுவிதமாய் கங்கையேற்கும் கோலத்தில் வடிக்கப்பட்டிருப்பது இத்தளியமைத்த சிற்பிகளின் தனித்தன்மை காட்டுகிறது.

சிவபெருமான், தண்டு முனிவர் இணைந்துள்ள சிற்பத்தோற்றம் பரதரின் நாட்டிய சாத்திர வரலாற்றை விளக்கும் முகத்தான் விளைந்துள்ளது. தாம் இயற்றிய நாடகத்தை பரதர் நடித்துக் காட்டியதும், சிவபெருமான் திருமுன் அதை நிகழ்த்தி அவர் கருத்துப்பெற விழைந்த நான்முகன், அதற்கு ஏற்பாடு செய்தார். நாடகம் நிகழ்ந்தது. கண்டு மகிழ்ந்த சிவபெருமான், தாம் ஆடும் பூர்வரங்கத்தை உடன் இணைத்துக் கொண்டால் சிறக்குமென்று கூறி, கரணங்களைப் பரதருக்குச் கற்றுத்தருமாறு தண்டுவிற்கு உத்தரவிட்டார். இறைவன் ஆணைப்படியே, இறைவன் ஆடத் தாம் கண்டு கற்றறிந்த கரணங்களைத் தண்டு பரதருக்குக் கற்பித்தார். இந்த இனிய வரலாறு தமிழ்நாட்டுத் திருக்கோயில்களில் சிற்பக்காட்சிகளாக இடம் பெற்றுள்ளது. இறைவன் மகிழ்ந்தாடும் கரணக்கோலங்கள் தஞ்சாவூர் இராஜராஜீசுவரத் திலும், அக்கரணங்களைக் கற்றுத் தண்டு இறைவனுக்கு ஆடிக்காட்டுவது மாமல்லபுரம் அத்யந்தகாமத்திலும், இறைவன் ஆணையேற்று பரதருக்குத் தண்டு கரணங்களைக் கற்பிக்கும் காட்சி கும்பகோணம் சார்ங்கபாணி கோயிலிலும் சிற்பக் காட்சிகளாய்ச் சிறக்க வடிக்கப் பெற்றுள்ளன.

அனுக்கிர மூர்த்திகளுள் சண்டேசுவர அனுக்கிரக மூர்த்தி மிகச் சிறந்த சிற்பமாகும். நின்ற கோலத்தில் ஆண்டவனும் அடியவனும் தனித்துக் காணப்படும் அனுக்கிரகக் கோலம் தமிழ்நாட்டிலேயே இது ஒன்றுதான் என்று துணியலாம். சண்டேசுவரரைத் தோழமையோடு அணைத்தபடி அன்பு கமழ சிவபெருமான் உற்றுநோக்குவதும் பயபக்தியுடன் பணிந்து குனிந்து சண்டேசுவரர் அடக்கமாய்ப் பத்திமைப் பணிவு காட்டுவதும் வேறெந்தச் சிற்பத் தொகுதியிலும் காணமுடியாத சிறப்புகளாகும்.

நினைத்த இடத்தில், நினைத்த மாத்திரத்தில் இறைவனுக்கு வடிவம் தந்து இன்பங் கண்டவர் விசாரதருமர். இறைவனுக்குப் பூசனை செய்வதில், இகலோக நடப்புகளை மட்டுமல்ல, சூழலை, தம்மை என எல்லாவற்றையுமே மறந்தவர். அதனால்தான் தந்தை நையப் புடைத்ததுகூடத் தெரியாது சிவதரிசனத்திலிருந்தார். தாம் மணலால் செய்த இலிங்கத்திற்குத் திருமஞ்சனமாட்ட வைத்திருந்த பாலைத் தந்தை எச்சதத்தன் காலால் இடறுவது கண்டபோதுதான் பூசனைக்கு இடையூறு என்று பொறிதட்டியது. என்ன செய்கிறோம் என்பதே தெரியாமல், இடறியவர் கால் மீது அருகிலிருந்த கோலை வீச, அது மழுவாகி எச்சதத்தன் கால்களைத் துணித்து அவரைவீழ்த்தியது. வீழ்த்தியவரைப் பற்றிய கவலையே இல்லாது தடை நீங்கிய மகிழ்வோடு பூசனையில் புகுந்த விசாரதருமரை சிவபெருமான் ஆட்கொண்டார். 'நம் பொருட்டால் ஈன்ற தாதை விழ எறிந்தாய், அடுத்த தாதை இனி உனக்கு நாம்' என்று விசாரதருமரை அரவணைத்த பெருமான், 'அனைத்து நாம் உண்டகலமும் உடுப்பனவும், சூடுவனவும் உனக்காகச் சண்டீசனுமாம் பதம் தந்தோம்' என மகிழ்ந்துரைத்துத் தம் சடையிருந்த கொன்றை மாலையைச் சண்டீசருக்குச் சூட்டிப் பெருமைப்படுத்தினார். சிவபெருமானின் திருமகனாகும் பேறு பெற்ற மானிடர்கள் இருவரே. ஒருவர் சம்பந்தர். மற்றொருவர் விசாரதருமர், சம்பந்தரோ உமையிடம் பால் அருந்தியதால் மகனானார். ஆனால் அறிவிப்பு நிகழவில்லை. விசாரதருமரை சிவபெருமானே தத்தெடுத்தார். உலகறிய அறிவிப்பு நிகழ்ந்தது.

அறுபத்து மூன்று நாயன்மார்களுள் ஒருவராகக் கருதப்படும் சண்டீசருக்கு, வேறு எந்த நாயன்மாருக்கும் கிடைக்காத பேறுகள் சில வாய்த்தன. முதற்பேறு இறைவனே உலகறிய அறிவித்து மகனாக ஏற்ற பேறு. இரண்டாம் பேறு சண்டீசப் பதம். இறையருள் பெற்ற பலர் கணநாயகங்களாக, வாயிற்காவலர்களாக, இறைவன் ஆடலுக்கே முழவு வாசிப்பவர்களாக அமைந்தனரென்பது உண்மையெனினும், சண்டீசப் பதத்தில் அவை சாதாரணமானவை. இறைவனின் மழுவையே தம் ஆயுதமாகக் கொண்டு சிவன் கோயில்கள்அனைத்திலும் தனித் திருமுன்னில் அமரும்பேறு விசாரதருமருக்கு மட்டுமே வாய்த்தது. 'ஆதிசண்டேசுவர தேவர்' என்று அவர் பெயராலேயே இறைக்கோயில் சொத்துக்கள் வாங்கப்பட்டன; விற்கப்பட்டன. தமிழ்நாட்டுக் கல்வெட்டுகளில் பரவலாகவும் உரிமையோடும் இடம்பெறும் திருப்பெயர் சண்டீசருடையதே. சிவமரபைச் சேர்ந்த வேறு யாருக்கும் அந்தப் பேறு வாய்க்கவில்லை. சூடிக்கொடுத்த சுடர்க்கொடி வைணவக் கலாச்சாரத்தில் ஆண்டாள். அதற்கு நேர்மாறாக இறைவன் சூட்டியது மட்டுமல்ல உடுத்ததும் உண்டதும் பெற்ற சுடர்க்கொடி விசாரதருமர். சைவக் கலாச்சாரத்தில் உமையன்னைக்குக் கூட வாய்க்காத பேறு இது.

இத்தகு பெரும்பேறு வாய்க்க விசாரதருமர் செய்ததுதான் என்ன? சைவ மரபில் வந்த அத்தனை அடியவர்களும் சிவபெருமானிடம் இணையற்ற அன்பு பூண்டவர்கள்தான். அவர் பொருட்டுப் பிள்ளையை, மனைவியை எனப் பலவும் இழக்கத் துணிந்தவர்கள்தான். என்றாலும் அவர்களுக்

## 42 : 4 : 2 துர்க்கை

விழுப்புரம் மாவட்டம் செஞ்சி வட்டம் செஞ்சிசக்கராபுரம் பகுதியில் பொன்பற்றி ஏரியின் கிழக்குப்புற கரையின் சரிவில் பூமி மட்டத்திலிருந்து சுமார் 140 செ.மீ. உயரமும் 90 செ.மீ. அகலமும் 16 செ.மீ. கனமும் கொண்ட ஒரு கற்பலகையில் துர்க்கை சிலை ஒன்று காணப்படுகிறது.



கிடைமட்டமாக இடது, வலது புறமாக நீட்டிய கொம்புகளுடன் கூடிய எருமைத் தலையின் மீது நின்ற நிலையில் உள்ளது. நான்கு கைகளில் மேல் இடது கையில் சங்கும் மேல் வலதுகையில் எய்யும் நிலையிலுள்ள ஆழியும் கீழ் இடது கை இடுப்பில் வைத்த நிலையிலும் கீழ்வலதுகை அபயத்திலும் காட்டப்பட்டுள்ளன. தோள்களில் அழகிய வேலைப்பாடுகள் அமைந்த தோள்வளையும் கழுத்தில் நேர்த்தியான மணி ஆரங்களும் தலையில் மகுடமும் அணிசெய்கின்றன. இடுப்பில் மேகலையோடு கூடிய இடை ஆடை கணுக்கால் வரை அமைந்துள்ளது.

பாதங்களின் இருபுறங்களிலும் தங்கள் தலைகளை அரிந்து கொள்ளும் இருபக்தர்களின் உருவங்கள் பண்டைய நெறிமுறையைப் பிரதிபலிக்கும் வகையில் காட்டப்பட்டுள்ளன. இச்சிற்ப அமைதியை நோக்கும் போது பல்லவர் பாணியை வெளிப்படுத்துவதாக இருந்தாலும் பல்லவ காலசிற்பியின் செவ்வியல் நெறியைப் பின்பற்றிய நாட்டுப்புற சிற்பியின் கைவண்ணமோ என சிந்திக்க வைக்கிறது.

**பெ.இலெனின், புதுச்சேரி**

## 42 : 5 மாண்ட இரட்டை ரிஷபங்களுக்கு நினைவுக் கோயில்

கரூர் அருகில் உள்ள பசுபதி பாளையம். 1897ஆம் ஆண்டுக்குரியது. இரட்டைப் பிறவிகளாகப் பிறந்த ராமர், லட்சுமணன் என்னும் இரு காளை

மாடுகள் இறந்ததால் அதன் நினைவாக கலை அழகுடன் ஒரு கோயில் அமைத்திருக்கிறார்கள். விநாயகர் கோயிலில் மூஞ்சுர் சிலை வைப்பது தான் மரபு. இதில் உள்ள கல்வெட்டில் காணப்படும் பிள்ளையாருக்கு முன்பாக இரண்டு பக்கத்திலும் மாடுகள்அமைக்கப்பட்டுள்ளது சிறப்பாகும்.




வெ. இராஜு*, கரூர்.

## 42 : 6 மேல்பட்டி பாறை குறியீடுகள்

வேலூர் மாவட்டம், குடியாத்தம் வட்டத்தில் மேல்பட்டி என்னும் ஊர் உள்ளது. இவ்வூர் குடியாத்தம் - ஆம்பூர் சாலையில் குடியாத்தத்திற்கு தென்மேற்கே சுமார் 8 கிலோமீட்டர் தொலைவில் அமைந்துள்ளது. இவ்வூருக்கு வடக்கே அமைந்துள்ள மலையில் இயற்கையாக அமைந்த குகைகள் பல உள்ளன. மேலும், இம்மலையைச் சுற்றிலும் பல இடங்களில் பண்டைய ஊரிருக்கைப் பகுதிகள் காணப்படுகின்றன. புதிய கற்காலக் கருவிகள், கருப்பு - சிவப்பு, சிவப்பு மற்றும் வண்ணம் தீட்டப்பட்ட பானை ஓடுகளும், இரும்பு உருக்கு உலைக்களத்தின் எச்சங்களும் இங்கு ஏராளமாக காணப்படுகின்றன. மேலும், இவ்வூருக்கு வடக்கே பாலாற்றை ஒட்டிய பகுதியில் இரும்புக் காலத்தைச் சேர்ந்த கல் வட்டங்கள் (stone circles) சில சிதைந்த நிலையில் காணப்படுகின்றன.

### பாறை குறியீடுகள்

மேல்பட்டி மலையின் தெற்கு அடிவாரத்தில் இயற்கையாக அமைந்த சிறிய குகை ஒன்று உள்ளது. சாலையை ஒட்டினாற்போல் உள்ள இக்குகையினை உள்ளூர் மக்கள் 'நாமக்கல் பாறை' என அழைக்கின்றனர். இக்குகையின் கூரைப் பகுதியில் வெண்மை நிறத்தில் வரையப்பட்ட ஓவியக் குறியீடுகள் காணப்படுகின்றன. இக்குகைக்கு அருகில் பேருந்துகள் செல்லும் சாலை இருப்பதால், குகையினுள் தூசு படிந்து அதிலுள்ள குறியீடுகள் மிகவும் மங்கலாகத் தெரிகின்றன.

இக்குகையில் ஒரேயொரு மனித உருவம் கோட்டுருவமாக தீட்டப்பட்டுள்ளது. மற்றவைகள் அனைத்தும் குறியீடுகளாகும். அவற்றுள், ஸ்வஸ்திக், நட்சத்திரம், திரிசூலம், நாமம் போன்ற சமயம் சார்ந்த குறியீடுகளும், வட்டம், குறுக்கு கோடிட்ட வட்டம், செவ்வகம் மற்றும் கூம்பு வடிவம் ஆகியவைகளும் (Geometrical designs) மணி மாலையைப் போன்று பல புள்ளிகளைக் கொண்டுள்ள குறியீடும் குறிப்பிடத் தக்கவைகளாகும்.

மேலும், தமிழ் பிராமி எழுத்துகளை ஒத்துள்ள +, ∪, ∪, Z, / போன்ற குறியீடுகளும் இக்குகையில் வரையப்பட்டுள்ளன. இவை அனைத்தும் ஆங்காங்கே தனித்தனியாக இல்லாமல் வரிசை வரிசையாக

வரையப்பட்டுள்ளன. ஆகவே, இவை தமிழ் பிராமி எழுத்துக்கள் முழுமையான வளர்ச்சியடைவதற்கு முன்னவர் பயன்படுத்தப்பட்ட ஆரம்ப கால எழுத்துக்களைக் கொண்ட குறியீடுகளின் வரி வடிவமாக இருக்கலாம் என ஐயப்பட வைக்கின்றன. சில குறியீடுகள் சிந்துவெளி குறியீடுகளைப் போலவும் உள்ளன. இருப்பினும், இக்குறியீடுகளின் பொருளை முழுமையாக அறிய இயலவில்லை.

தமிழகத்தில் மகாராஜக்கடை, கீழ்வாலை, சிவநாதபுரம் போன்ற பல இடங்களில் இதுபோன்ற குறியீடுகள் காணப்படுகின்றன. ஆகவே, மேல்பட்டி குறியீடுகளையும், பிற இடங்களில் காணப்படும் குறியீடுகளையும் ஒப்பாய்வு செய்தால் தமிழ் பிராமி எழுத்து வளர்ச்சியின் ஆரம்ப கால கட்டத்தை அறிய இயலும்.

**கி.குமார், சென்னை.**

## 42 : 7 கம்பத்துமலை பாறை ஓவியச் சுவடுகள்

கிருஷ்ணகிரி மாவட்டத்தில் பல இடங்களில் பாறை ஓவியங்கள் கண்டறியப்பட்டுள்ளன. தற்போது இம்மாவட்டம், போச்சம்பள்ளி வட்டம், நாகரசம்பட்டியை அடுத்துள்ள N.தட்டக்கல் என்ற ஊரின் கிழக்கே அமைந்துள்ள கம்பத்துமலையின் மேலே நடுவில் அமைந்துள்ள நிலப்பகுதி ஒட்டிய பாறையின் மீது பாறை ஓவியங்கள் இரண்டின் தடயங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. அவை ஒவ்வொன்றும் சுமார் 3 அடி உயரமுள்ளவை. ஒன்றிலிருந்து மற்றொன்று சுமார் 15 அடி தள்ளி உள்ளது. இவை பாறைச்சரிவில் அமைந்துள்ளதால் வெயில் மற்றும் மழையினால் வண்ணம் அழிந்துபோய் அதன் சுவடு மட்டும் தற்போது காணப்படுகிறது.

வலப்பக்க உருவம் : ஒரு மனிதன் நடந்து செல்வது போல் உள்ளது. பக்கத் தோற்றம் என்பதால் கைகள் காட்டப்படவில்லை போலும். அவன் எதிரே ஒரு சதுரம் காட்டப்பட்டுள்ளது. இது அவனது இருப்பிடம், அல்லது வயல் அல்லது பட்டியைக் குறிக்கலாம்.

இடப்பக்கம் உருவம் : இம்மனித உருவம் பக்கவாட்டில் கைகளை நீட்டி நேராய் நிற்பது போல் உள்ளது. இடது கையில் உள்ளதை வில் எனக் கருதலாம். வில்லை ஒட்டி இரண்டு செங்குத்து இரண்டு கிடைக்கோடுகள் உள்ளன. கொணவக்கரை, சிறுமலையில் உள்ளது போன்று இவை தட்டையான உருவங்களாகும். இம்மலைக்கு மேற்கே கானப்பாறை என்னுமிடத்தில் உள்ள பாறை ஓவியங்கள் குறித்து இக்கட்டுரை ஆசிரியர் ஆவணம் இதழ் 12ல் தெரிவித்துள்ளார். இது வெண்மை நிற கோட்டுருவ ஓவியமாகும். இதில் 3 உருவம் அமர்ந்த நிலையிலும் ஒரு உருவம் நின்ற நிலையிலும் மற்றோர் உருவம் கிடந்த நிலையிலும் உள்ளன.

இவ்வோவியங்கள் காணப்படும் பகுதியில் பெருங்கற்படைக் காலக் கல் திட்டை மற்றும் கருப்பு சிவப்பு பானையோடுகள் காணப்படுகின்றன. எனவே இவை பெருங்கற்படைக் காலத்தைச் சேர்ந்தவையாகும்.


கம்பத்துமலை உருவங்கள் கானப்பாறை ஓவியங்கள்

**செ.கோவிந்தராஜ்**, புதுக்கோட்டை.

## 42 : 8 நஞ்சை அளவு கோல்

சேலம் மாவட்டம் எடப்பாடி வட்டம், புதுப்பாளையம் கிராமத்தில் சரபங்கா நதிக்கரையில் உள்ள முப்பீஸ்வரம் கோயில். பிரஞ்ச் இன்ஸ்டியூட் பேராசிரியர் விஜயவேணுகோபால் அவர்களுடன் இணைந்து ஆய்வு மேற்கொண்ட போது இக்கோயில் நில அளவுகோல் இருப்பது கண்டறியப்பட்டது. இந்த நில அளவுகோல் அதிட்டானத்தின் தென்புற சுவரில் உள்ளது. "நஞ்சை அழவு கோல்" எனத் தொடங்குகின்றது. இதில் அளவு என்பதில் 'ள' கரம் 'ழ' கரமாக திரிந்து உள்ளது. முடிவு பெறுவதை குறிக்கின்றது. இந்த அளவு கோலின் நீளம் 25 அடியாக உள்ளது. இது நஞ்சை அளவு கோல் எனக் குறிக்கப்பட்டுள்ளதினால் நஞ்சை நிலங்களை மட்டுமே அளக்க இந்த அளவு கோல் பயன்பட்டிருக்க வேண்டும். முப்பீஸ்வரர் கோயில் அளவு கோல் எழுத்தமைதியைக் கொண்டு சுமார் கி.பி.13ஆம் நூற்றாண்டு எனலாம். இன்று வறண்ட நிலையில் காணப்படும் சரபங்கா நதியில் அக்காலத்தில் நீர்பெருக்கு நிறைந்திருந்திருந்த நஞ்சை நிலங்கள் செழிந்திருந்ததை இந்த நஞ்சை அளவுகோல் உணர்த்துவதாகக் கொள்ளலாம்.

**ந.சுந்தரராஜன்**, சேலம்

## 42 : 9 உள்ளிக்கோட்டை புத்தர் சிலை

திருவாரூர் மாவட்டம் மன்னார்குடி வட்டத்தில் மன்னார்குடி நகருக்கு அருகேயுள்ள உள்ளிக்கோட்டை என்னும் சிற்றூரில் புத்தர் சிலை ஒன்று அண்மையில் கண்டுபிடிக்கப்பட்டது. ஒருங்கிணைந்த திருச்சி, ஒருங்கிணைந்த தஞ்சாவூர் மற்றும் புதுக்கோட்டை மாவட்டங்களை உள்ளடக்கிய சோழ நாட்டில் இதுவரை சுமார் அறுபதுக்கும் மேற்பட்ட புத்தர் சிலை ஆசிரியரால் கண்டுபிடிக்கப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது. கற்சிலைகளைப் பொறுத்தவரை அமர்ந்த நிலையிலுள்ள புத்தர் சிலைகளே தமிழ்நாட்டில் அதிகமாகக் காணப்படுகின்றன. அவ்வகையான புத்தர்

சிலைகளைப் போலவே இதுவும் உள்ளது. 3½ அடி உயரத்தில் அமர்ந்த நிலையில் தியான கோலத்தில் உள்ள இச்சிலைக்கு சற்றே மூடிய கண்களும், புன்னகை சிந்தும் இதழ்களும் அழகைத்தருகின்றன. நீண்டு தொங்கிய காதுகள், தலையில் சுருள் முடி, மார்பில் மேலாடை போன்றவை நேர்த்தியாக வடிவமைக்கப்பட்டுள்ளன. வழக்கமாக புத்தர் சிலையில் தலைமுடிச்சுருளின்மீது காணப்படும் உஷ்னிஷா எனப்படும் தீச்சுடரும், மூக்கின் பகுதியும் இச்சிலையில் உடைந்துள்ளன. அதைப்போலவே பீடத்தில் கால் பகுதிகளும், தியான நிலையில் வைக்கப்பட்டுள்ள கைகளும் உடைந்த நிலையில் உள்ளன. திண்ணிய மார்பும், பரந்த தோள்களும் சிலையின் அழகை மேம்படுத்துகின்றன. சோழ நாட்டில் பரவலாக ஆங்காங்கு காணப்படுகின்ற புத்தர் சிலைகள், ஒருகால கட்டத்தில் பௌத்த சமயம் இப்பகுதியில் செழித்திருந்த நிலையினை எடுத்துரைக்கும் சான்றாக உள்ளன.

பா.ஜம்புலிங்கம், தஞ்சாவூர்.

## 42 : 10 புதிய சிற்பக் கண்டுபிடிப்புகள்

### 42 : 10 : 1 அனுமன் கற்சிலை

திருவண்ணாமலை மாவட்டம் ஆரணி வட்டம் சிறுமூரில் கற்பலகை ஒன்றில் வீரஅனுமன் சிலை செதுக்கப்பட்டிருக்கிறது. தலை துணியால் கட்டப்பட்டு அதனுடைய முனை பின் பக்கத்தில் காட்டப்பட்டிருக்கிறது. காதணி சிறியதாகச் செதுக்கப்பட்டிருக்கிறது. வலது கை பதாக முத்திரையைக் காட்டுகிறது. அது இங்கு வீரத்தைக் குறிக்கிறது. தலைக்கு மேல் சீராக வளைந்து கீழ் நோக்கி வருகின்ற வாலை இடது கை பிடித்திருக்கிறது. கழுத்தில் ஓர் ஆரம் காணப்படுகிறது. அனுமனின் கைகளில் கேயூரங்களும் வளையல்களும் அழகு செய்கின்றன. சிற்பத்தின் உச்சியில் பூ வேலைப்பாடு சிறப்பாகக் காணப்படுகிறது. சிலை தன்னுடைய இடுப்பு வரை பூமியில் புதைந்துள்ளது. இச்சிலை கி.பி.15ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது.



## 42 : 10 : 2 வீரக்கல்

சிறுமூரில் காணப்படும் மற்றொரு கற்பலகையில் வீரன் உருவம் நின்ற கோலத்தில் வடிக்கப்பட்டுள்ளது. முகம் தேய்ந்துள்ளது. தலையின் உச்சியில் முடி குண்டாகக்கட்டப்பட்டிருக்கிறது. வலது கை அம்பையும் இடது கை வில்லையும் பிடித்திருக்கின்றன. வலது தோளின் பின் பக்கத்தில் அம்புரா தூணி அம்புகளுடன் தெரிகின்றது. கைகளில் கேயூரங்களும் வளையல்களும் காட்சியளிக்கின்றன. வீரத்தைக்குறிக்கும் சன்னவீரம் மார்பில் சுங்குடன் விளங்குகிறது. இடுப்பில் உள்ள ஆடை வலிமையாகக் கட்டப்பட்டிருக்கிறது. இடுப்பின் பக்கங்களில் இருந்து துணியின் முனைகள் தொங்குகின்றன. இடையின் இடது பக்கத்தில் ஒரு குறுவாள் தொங்குகிறது. சிலை அதிகம் புடைப்பாகச் செதுக்கப்படாததால் காலின் பாதங்கள் சிலையின் வலது பக்கம் திருப்பப்பட்டதாகக் காட்டப்பட்டிக்கின்றன. இந்தச் சிலை பிற்காலச் சோழர் ஆட்சிக் காலத்தைச் சேர்ந்தது எனலாம்.



## 42 : 10 : 3 எழுத்துப்பொறிப்புடைய பொன் கயிறு

திருவண்ணாமலை மாவட்டம் செய்யாறு வட்டம் ஆக்கூரில் பொன் கயிறு கிடைத்துள்ளது. இந்தக் கயிற்றின் இணைப்பில் சதுரமான பாகத்தில் நான்கு எழுத்துகள் பொறிக்கப்பட்டிருக்கின்றன. அவை கிரந்தத்தில் க, மற்றவை ய, ம, க ஆகும். எழுத்துகளின் தன்மையை நோக்கினால் இந்தப் பொன் கயிறு கி.பி.16ஆம் நூற்றாண்டில் செய்திருக்க வேண்டும் என்ற முடிவிற்கு வரத் தோன்றுகிறது.



ம.காந்தி, வேலூர்.

## 42 : 11 ஜூனிக்குரன் அகழாய்வு

சிந்துவெளி பண்பாட்டுக்குரிய சின்னங்களைக் கொண்ட ஜூனிகுரன் (23 57 வ 23 57 கி) குஜராத் மாநிலம் கட்ச் மாவட்டத்தில் உள்ள காவ்டா என்ற பகுதியில் அமைந்துள்ள பஸ்சம் என்ற தீவின் வடகிழக்குப் பகுதியில் அமைந்துள்ளது. இங்கு இந்தியத் தொல்லியல் அளவீட்டுத் துறையினரால் 2005ஆம் ஆண்டு அகழாய்வு மேற்கொள்ளப்பட்டது.

இவ்வூர் நாற்புறமும் கோட்டைச் சுவர்களால் சூழப்பட்டுள்ளது. இதன் மொத்தப்பரப்பு 350 மீட்டர் × 410 மீட்டர். இக்கோட்டைச்சுவரின் மேற்குமூலையில் ஒரு உட்கோட்டை சுவர் காணப்படுகிறது. வெளிக்கோட்டைச் சுவரின் ஒரு பகுதி உட்கோட்டைச் சுவரின் வடக்கு மற்றும் மேற்குப்புற சுவராக விளங்குகிறது. உட்கோட்டைச் சுவரின் வெளிப்புறத்தில் ஒன்றும், தெற்கு புறத்தில் இரண்டும், கிழக்குபுறத்தில் இரண்டும் ஆக ஐந்து நுழைவு வாயில்கள் காணப்படுகின்றன. வெளிப்புற கோட்டைச் சுவரின் கிழக்குப்புறத்தில் ஒரு நுழைவு வாயில் காணப்படுகின்றது. வெளிப்புறக் கோட்டைச்சுவர் 220 மீட்டர் 225 மீட்டர் அளவு கொண்டுள்ளது. இது கற்கள் மற்றும் மண் கலவையினால் ஆனது. உட்கோட்டைச் சுவர் 7 மீட்டர் × 4.5 மீட்டர் அளவு கொண்டுள்ளது. உட்கோட்டைச் சுவர் உயர்ந்தோர் வாழ்ந்த பகுதியின் வடக்குப்பகுதியில் வளர்ச்சி பெற்ற ஹரப்பா காலப்பண்பாட்டைச் சேர்ந்த சுடப்படாத செங்கற்கள் கண்டறியப்பட்டுள்ளன. இது 6 மீட்டர் ஆரம் வரை செல்கிறது. மேலும் தெற்குபுறத்தில் இரண்டு கட்டிடங்கள் சிறிய சந்துகளுடன் கண்டறியப்பட்டுள்ளன. ஹரப்பா பண்பாட்டுக் கூறுகளை வெளிப்படுத்தும் இந்த அகழாய்வின் சிறப்பு அம்சம் முத்திரை ஒன்று உடைந்த நிலையில் கண்டறியப்பட்டுள்ளதாகும். இதில் ஒன்றைக்கொம்புடன் எருது ஒன்றும், சிந்துவரிவடிங்கள் எட்டும் காணப்படுகின்றன.

ஹரப்பா பண்பாட்டுப் பகுதிகள் ஒவ்வொன்றும் தனக்கென்று ஒரு சிறப்பு அம்சத்தைக் கொண்டிருப்பது போல ஜூனிக்குரன் பகுதி இரண்டு திடல்களைக் கொண்டிருக்கின்றது. இதில் சமுதாயத்தில் உயர்நிலைப் பெற்றவர்களுக்கு என்றும் சாதாரண மக்களுக்கு என்றும் தனித்தனியே ஏற்படுத்தப்பட்டிருக்கலாம்.

உட்கோட்டைக்கு வெளியே தென்பகுதியில் வணிகர்களின் குடியிருப்புப் பகுதியும் சடங்குகள் செய்யும் பகுதியும் அமைந்துள்ளன. இங்கு காணப்படும் கட்டிட அமைப்புகள் திட்டமிடப்பட்ட முறையில் அமைக்கப் பட்டுள்ளன. இந்த கட்டிடத்தின் அளவுகள் முறையே 1.30 மீட்டர் × 1.4 மீட்டர் முதல் 6.60 மீட்டர் 6.80 மீட்டர் அளவு கொண்டதாகும். இதன் அருகில் 6 முதல் 8 வரையிலான தாழிகள் சில வைக்கப்பட்டிருக்கின்றன. இவற்றின் உள்ளே காணப்படும் எலும்புகளைக் கொண்டு இரண்டாம் நிலை அடக்கமுறையாக இருக்கலாம் என அகழாய்வாளர்கள் கருதுகிறார்கள். இங்கு சமார் 50 முதல் 60 வரையிலான வெவ்வேறு அளவு கொண்ட வட்ட வடிவில் ஆன எடைக்கற்கள், மண் மற்றும் சங்குகளால் செய்யப்பெற்ற வளையல் துண்டுகள், சால்சிடோனி மற்றும் அகேட் போன்ற கற்களில் செய்யப்பட்ட வெவ்வேறு அளவு கொண்ட பிளேடுகள் கண்டெடுக்கப் பட்டன. சூர்கோட்டாவில் கண்டறியப்பட்டுள்ளது போன்றே மண்ணால் ஆன சிறிய செவ்வக தொட்டிகளும் அகேட், சால்சிடோனி, கார்னீலியன், குவாட்ஸ், பியன்ஸ், ஸ்டியடைட் போன்ற அரிய வகைக் கல்மணிகள் மற்றும் செம்பினால் செய்யப்பட்ட அம்பு முனைகள், மீன்பிடி கருவி, கைவிரல் மற்றும் காதில் அணியும் அணிகலன்களும் கண்டறியப்பட்டன.

ஜே.பி.ஜோஷி அவர்களின் கருத்துப்படி இந்தத் தீவானது பண்டைய வாணிப தளமாக இருந்திருக்க கூடும் என்றும் மொஹஞ்சதாரோவில் இருந்து இடம் பெயர்ந்த ஒரு கூட்டம் முதலில் இப்பகுதியில் நுழைந்து பின்னர் இங்கிருந்து தோலவீரா சென்றிருக்க வேண்டும் என்று கருதுகின்றார். ஏனெனில் மொஹஞ்சதாரோ மற்றும் தோலவீரா பகுதிகளை இணைக்கும் பண்டைய வணிகப் பாதையில் தான் இந்த ஜூனிகுரன் பகுதி அமைந்திருக்கிறது.

**எம்.தாவூத் அலி, தஞ்சாவூர்.**
**ஆர்.அன்பரசன், தஞ்சாவூர்.**

## 42 : 12 செஞ்சி வட்டத்தில் சில புதிய நடுகற்கள்

விழுப்புரம் மாவட்டம், செஞ்சித்தாலுக்கா, செஞ்சியில் உள்ள பீரங்கிமேடு என்ற பகுதியில், தெற்கே அமைந்துள்ள மந்தைவெளி. கி.பி. 16ஆம் நூற்றாண்டு விஜயநகர மன்னர்களின் காலத்தைச் சார்ந்தவையாகும். இங்குள்ள நடுகல்லில் உள்ள குதிரையின் மீது அமர்ந்துள்ள வீரன் வலது கையில் வாளை ஏந்தியும், இடது கையில் குதிரையின் கடிவாளத்தைப் பிடித்தும் அமர்ந்துள்ளான். அவனுக்குப் பின்பக்கத்தில் அவனுடைய மனைவி பயத்துடன்கூடிய பக்தியுடன் அமர்ந்திருக்கிறாள். அவளுடைய தலையின் ஜடை நீளமாகக் காட்டப்பட்டுள்ளது. குதிரைக்குப் பின்பக்கத்தில் அந்த வீரனுடைய பணியாளன் குடைபிடிக்கிறான். அதனால் குதிரையின் மேல் இருக்கும் வீரன் சமூகத்தில் மரியாதைக்கு உரியவனாகவோ அல்லது தலைவனாகவோ இருக்க வேண்டும். இச்சிலைக்கு மேல்ப்பக்கத்தில் பிரபை செதுக்கப்பட்டுள்ளது. இந்த நடுகல் 1¾ அடி நீளம் 2½ அடி உயரம் உள்ளது.



இங்குள்ள மற்றோரு நடுகல் 1½ அடி அகலமும் 2½ அடி உயரமும் கொண்டது. வீரன் குதிரையில் சவாரி செய்கிறான். வலதுகையில் பட்டாக்கத்தியை ஓங்கி இடது கையால் குதிரையின் கடிவாளத்தைப் பிடித்தும் உள்ளான். வீரனுக்கு மீசையும் தாடியும் உள்ளன. தலையில் தலைப்பாகை தேய்ந்துள்ளது. அவன் அணிந்த ஆடையில் பொத்தான்கள் கழுத்தில் இருந்து இடுப்பு வரை வரிசையாகக் காணப்படுகின்றன. வலது இடுப்பில் ஒருகுறுவாள் தொங்குகிறது. குதிரை நன்கு அலங்கரிக்கப்பட்டும், குதிரையின் தலையில் கொக்கு இறகும் அலங்காரம் செய்கிறது. குதிரையின் பின்பக்கத்தில் ஒரு சேவகன் சின்னத்தை வீரனுக்கு மேல் பிடித்துக் காண்பிக்கிறான்.



விழுப்புரம் மாவட்டம், செஞ்சி தாலுக்காவில் செஞ்சியிலிருந்து 15 கி.மீ. தூரத்தில் செஞ்சி ஆரணி நெடுஞ்சாலையில் தேவனூருக்குச் செல்லும் பிரிவுச் சாலையின் ஓரமாக ஒரு நடுகல் நடப்பட்டுள்ளது. கி.பி. 16ஆம் நூற்றாண்டு விஜயநகர மன்னர்களின் காலத்தைச் சார்ந்ததாகும். வீரன் ஒரு நெடிய தடியை வலது கையில் பூமியில் ஊன்றி நிற்கிறான். தலையில் தலைப்பாகை காணப்படுகிறது. வீரன் தன் தலையைத் திருப்பி மனைவியைப் பார்க்கிறான். அவனுடைய கீழாடை கணுக்கால் வரையில் உள்ளது. இடது கையால் தனது மனைவியினுடைய வலது கையைப் பிடித்திருக்கிறான். வீரனுக்கு இடது பக்கத்தில் கட்குடம் தொங்குகிறது. இடது கையில் ஏதோ ஒன்றை பிடித்துள்ளாள். இவளுடைய புடவையின் மடிப்புகள் தெளிவாக செதுக்கிக் காண்பிக்கப்பட்டுள்ளது. தலையின் இடது பக்கத்தில் கொண்டை காட்டப்பட்டு அதில் இருந்து இரண்டு சுங்கங்கள் இடது தோள்மேல் படும்படி தொங்குகிறது. கணவன் வீரமரணம் அடைந்ததும் அவன் உடல் எரியும் தீயில் மனைவியும் பாய்ந்து உடன்கட்டை ஏறியதால் தீப்பாய்ந்தாள் கல் என இந்நகரில் அழைக்கப்படுகிறது.



**ஆர்.மணி, செஞ்சிக்கோட்டை**

# 43. புதிய வெளியீடுகள்

மே.து.ராசுகுமார், **சோழர் கால நிலவுடைமைப் பின்புலத்தில் கோயில் பொருளாதாரம்**, மக்கள் வெளியீடு, சென்னை, 2004.

முனைவர். மே.து.ராசுகுமார் இடைக்காலச் சோழர்காலச் சமூகப் பொருளியல் வரலாறு பற்றி கடந்த முப்பது ஆண்டுகளாகப் பல கட்டுரைகளை எழுதியுள்ளார். அவற்றின் முத்தாய்ப்பாக இந்நூல் விளங்குகிறது என்று சொல்லலாம். சோழர்காலக் கோயில்களைப் பெரும்பாலும் சமய நிறுவனமாகவும், கட்டடம், சிற்பக்கலையின் வெளிப்பாடாகவும் ஆராய்வது வழக்கமாக இருந்துவருகிறது. எல்லாவற்றுக்கும் மேலாக அது ஒரு நிலவுடமை அல்லது பொருளியல் நிறுவனமாக விளங்கியது என்பதை இந்த நூலில் அழுத்தமாக எடுத்துச் சொல்கிறார் ஆசிரியர். கோயில்களில் காணப்படும் கல்வெட்டுகளையே சான்றுகளாகக் கொண்டு இது எழுதப்பட்டுள்ளது.

இந்நூலின் மையக் கருத்துக்களைப் பின்வருமாறு சுருக்கிச் சொல்லலாம். சோழர் காலத்தில் தொடர்ந்து பொன், ஆடு, மாடுகள், நகைகள், நிலங்கள் என்று கொடைகளைப் பெற்றுவந்த கோயில்கள் பொருளியல் நிறுவனங்களாக மாறின. அரச குடும்பத்தினர், அரசு அலுவலர், வசதிபடைத்த பெருமக்கள் ஆகிய பலரும் நிலக்கொடைகள் கொடுத்தனர். நாளடைவில் கோயில்களில் நில உடைமைகள் குவிந்தன. கோயில் நீர்வள உரிமைகளையும் பெற்றதனால் நிலங்களை மேலும் பெறுவது எளிதாயிற்று. பெரும்பாலான நிலக்கொடைகள் முன்பு நில உரிமைகள் வைத்திருந்த சிறு நிலக்கிழார்களிடமிருந்து நேரடியாகவோ மறைமுகமாகவோ கவரப்பட்டு கோயில்களுக்குக் கொடுக்கப்பட்டன. தங்கள் நில உரிமைகளை இழந்த அவர்கள் அந்தக் கோயில்களிலேயே உழுகுடிகளாக மாறவேண்டிய அவலநிலை ஏற்பட்டது. கோயில் நில உடைமைகள் யாவும் அவ்வவ் ஊர்களிலிருந்த பெரிய நிலவுடைமையாளரான வேளாளர் அனுபவத்தில் வந்ததால் கோயில் மேலாண்மை வேளாளரிடமே பெரும்பாலும் இருந்தது. பிராமண நில உடைமையாளர் அவருக்கு அடுத்த நிலையிலேயே இருந்தனர். வேளாளருக்குச் சாதகமான இந்த நிலவுடைமை அமைப்புக்கு அரசும் துணைபோனது. வேளாளரே உள்ளூர் அவைகளிலும் கோயிலிலும் ஆதிக்கம் செலுத்தியதால் (ப. 44) கோயில் நிலவுடைமைகளை மேலாதிக்கம் செலுத்துவது எளிதாயிற்று.

மேற்சொன்ன இந்த முடிவுகளில் பலவற்றை ஏற்கலாம் எனினும் தொடர்புள்ள வேறு சில கேள்விகளுக்கும் விடை காண வேண்டும். பொதுவாக இடைக்கால வரலாற்றுச் சான்றுகளைக் கல்வெட்டுகள் வாயிலாகவே பெறுகிறோம். அக்கல்வெட்டுகள் யாவும் (ஒரு சிலவற்றைத்

தவிர்த்து) கோயில்களிலேயே கிடைப்பதால் கோயில் சார்பான செய்திகளே மிகுதியாக அவற்றில் உள்ளன. கோயிலுக்கு அப்பால் உள்ள சமூகப் பொருளியல் செய்திகளை மறைமுகமாக உய்த்துணரும் நிலையிலேயே உள்ளோம். இருப்பினும் அச்செய்திகளையும் கணக்கிலெடுத்துக் கொண்டால் தான் அக்காலத்தைப் பற்றி ஓரளவு முழுமையான உருவம் கிடைக்கும். காட்டாக, கோயில்களின் நிலவுடைமை அக்கால சோழ நாட்டின் மொத்த நிலவுடைமையில் எவ்வளவு விழுக்காடு என்பதைக் கணக்கிட வேண்டும். நிலவுடைமையாளர் உழுகுடி (அதாவது உற்பத்தியாளர்) உறவுகள் கோயில் சாராத நிலங்களில் எவ்வாறு இருந்தன என்பதைக் கண்டறிய இது உதவும்.

கோயில் நிலங்கள் பெரும்பாலும் சிறு உழவர்களிடமிருந்து பறிக்கப்பட்டவை என்ற ஆசிரியர் கூற்றை மேலும் ஆராய வேண்டும். குடி நீக்கி/குடிநீக்கா தேவதானம் என்ற சொற்றொடர்களிலிருந்து இந்த முடிவுகள் எட்டப்பட்டுள்ளன. உண்மையில் இந்த குடிநீக்கி/குடிநீக்கா அடைகளில் உள்ள குடி பெரும் நிலக்கிழார்களையே குறித்தது. பழைய நிலக்கிழார் கோயிலுக்கு கொடை செய்த நிலங்களின் மீயாட்சி அல்லது மேலுரிமையைத் தங்களிடமே வைத்துக்கொள்வதைக் குடிநீக்கா என்ற தொடர் குறித்தது. அரசிடம் வரிச்சலுகைகளைப் பெற இந்த முறை வசதியளித்தது. குடிநீக்கி வகை ஒரு சில கல்வெட்டுகளில் மட்டுமே குறிக்கப்பட குடிநீக்கா வகையே பெரும்பான்மையாகப்படுகிறது. இவற்றுக்கும் உழுகுடிகள் பிரச்சினைக்கும் தொடர்பு அவ்வளவாக இல்லை.

அக்கால நிலவுடைமைச் சமூகத்தில் முதன்மை நிலையில் இருந்தவர்கள் வேளாளரே என்று நூல் முழுதும் ஆசிரியர் குறிப்பிட்டாலும், வேளாளர் யார் என்பதை வரையறுத்துச் சொல்லவில்லை. பிராமணர் அல்லாத எல்லா உடைமையாளரையும் சுட்டப் பயன்படுத்துகிறார் என்றால் அதை முதலிலேயே தெளிவுபடுத்தியிருக்க வேண்டும். இயல் 10இல் பக்தி இயக்கம், சமஸ்கிருதமயமாக்கம் அல்லது மேநிலையாக்கம் ஆகிய பொருள்களைப் பற்றி இன்று நிலவி வரும் கருத்துக்கள் யாவும் தவறு என்று வற்புறுத்துகிறார் ஆசிரியர். இவருடைய கருதுகோள்கள் மேலும் சிந்திக்கப்பட வேண்டியவை. சில அவர் கொண்டுள்ள மார்க்சியக் கோட்பாடுகளுக்கு முரண்படும் போல் தோன்றுகிறது. காட்டாக சாதி இறுக்கத்துக்கும் சமூகப் பொருளியல் முரண்பாட்டுக்கும் தொடர்பு இல்லை (ப. 188) என்று கூறுவது வியப்பாக உள்ளது. வேளாளர் வடபுலக் கருத்துகளுக்கு ஆட்படவில்லை என்பதும் ஆசிரியரின் விருப்பத்தை வெளிப்படுத்துமே யொழிய உண்மைநிலையைக் காட்டாது எனவும் தோன்றுகிறது. இப்படிப் பல ஐயங்களையும் கேள்விகளையும் கிளப்பும் இந்நூல் சிறிதும் சலனமற்றுள்ள தமிழக வரலாற்றாசிரியர்களைத் தட்டி யெழுப்பும் என்பதில் ஐயமில்லை.

**எ. சுப்பராயலு.**

டாக்டர் கு.சேதுராமன், **பௌத்தக் கலைவரலாறு**, J.J.பப்ளிக்கேசன்ஸ், மதுரை, 2006, பக்கங்கள் 272, விலை ரூ.124/-.

இந்திய நாட்டின் பௌத்தசமயக் கட்டடக்கலை, சிற்பக்கலை, ஓவியக்கலை ஆகியவற்றை வரலாற்று முறையில் காலவாரியாகத் தொகுத்தும் வகுத்தும் ஆய்ந்தும் எழுதப்பட்ட இந்நூலில் தமிழகத்தில் பௌத்த கலை, ஆசிய நாடுகளில் பௌத்தக்கலை என்று தனி இயல்கள் ஒதுக்கி அவற்றின் வரலாறும் தரப்பட்டுள்ளது. இறுதியில் கலைச்சொல் விளக்க அட்டவணையும், வரலாற்று ஆர்வலர்கள் பௌத்தக் கலையை அறிந்து கொள்ளும் வகையில் நல்ல புகைப்படங்களும் திரட்டித் தரப்பட்டுள்ளன. பௌத்த சமய ஸ்தூபம், சைத்தியம், விகாரம் ஆகியவற்றை வரலாற்று ரீதியாக அறிந்து கொள்வதற்கு இது நல்லநூல். பௌத்த சமய கட்டடக்கலை நுணுக்கங்கள், பௌத்தசமய சிற்பங்களின் உருவ அமைதி அவற்றின் தன்மை, சிறப்பு முதலியவற்றைத் திறம்பட நூலாசிரியர் விளக்கியுள்ளார். உலகலாளவிய பௌத்தசமயக் கலைப்பொக்கிசங்களைப் பற்றி எண்ணற்ற ஆங்கில நூற்கள் உள்ளன. ஆனால் தமிழில் விரிவான வரலாற்று உண்மையோடு கூடிய நூல் இல்லை. இக்குறையைப் போக்க தமிழ் மக்களுக்கு ஆசிரியர் அளித்த அரியபடைப்பு இந்நூல்.

**சு.கண்ணன்**, சிதம்பரம்.

முனைவர். மா.பவானி, **தமிழகத்தில் நாணயச் செலவாணி முறை (கி.பி. 600-1600)**, மனோ பதிப்பகம், தஞ்சாவூர், 2006, பக்கங்கள் 280, விலை ரூ.120/-.

அண்மையில் தமிழ்நாட்டு நாணயங்கள் பற்றி வெளிவந்த ஆய்வு நூற்களில் இது குறிப்பிடத்தக்கது. இதில் நாணயவகைகள், நாணயப் பரிவர்த்தனை, வட்டி, கூலி தண்டங்களில் நாணயங்கள், நாணயம் தொடர்பான வரிகள், நாணயங்களை இனங்கானல், அக்கச்சாலைகள் என்று பல இயல்களில் நாணயச் செலவாணி முறை ஆய்வு செய்யப்பட்டுள்ளது. நூலின் பாதிக்கு மேல் நாணய ஆய்வு தொடர்பான பட்டியல்கள் குறிப்புகள் தரப்பட்டுள்ளன. இவை எதிர்கால ஆய்வாளர்களுக்குப் பல நூற்கள் எழுத வழிகாட்டும். விவாதங்களுக்கும் மேலாய்வுகளுக்கும் அடிப்படையாக அமையும்.

கல்வெட்டுகள் குறிப்பிடுகின்ற நாணயங்கள், தொல்லியல் ஆய்வில் கண்டறிந்த நாணயங்கள், சேகரிப்பாளரிடம் உள்ள நாணயங்கள் ஆகியவற்றை ஒருங்கிணைத்து ஒப்பிட்டு இந்நூல் எழுதப்பட்டுள்ளது. தமிழ்நாட்டு நாணயங்களைப் பொருளாதார வரலாற்றிற்குரிய சான்றாகக் கொண்டு ஆய்வுசெய்து வெளிவந்த நூற்கள் மிகக் குறைவு. அந்த முறையில் இந்நூல் குறிப்பிடத்தக்க ஒன்றாகும். இடைக்காலத் தமிழ்நாட்டில் இயற்கைப் பொருளாதாரத்திலிருந்து நாணயப் பொருளாதாரம் படிப் படியாக எப்படி வளர்ந்தது என்று இந்நூலாசிரியர் விளக்க முற்பட்டுள்ளார்.

**கு.சேதுராமன்**, மதுரை.

**திருக்கழுக்குன்றமும் அதன் கோயில்களும்** *(Tirukkazukkundram (Paksitiirtham) and its Temples),* K.V.Gopalakrishnan, Abinav Publications, New Delhi, 2005.

இந்த நூல் 1958-60இல் ஆசிரியர் தன் முதுகலை பட்டப்படிப்புக்காக மேற்கொள்ளப்பட்ட ஓர் ஆய்வு நூல் ஆகும். இந்நூலின் சிறப்பு இதில் கொடுக்கப்பட்டுள்ள ஒளிப்படங்கள் ஆகும். இரண்டாம் இயலில் திருக்கழுக் குன்றம் தொடர்பாக தலபுராணங்கள் தரும் செய்திகள் விரிவாகக் கொடுக்கப் பட்டுள்ளன. மூன்றாம் இயலில் திருக்கழுக்குன்றத்தின் அரசியல் வரலாற்றை கல்வெட்டுகள் மூலம் விளக்கியுள்ளார். நான்காம் இயல் இவ்வூர்க் கோயில்களின் தொடக்கம் மற்றும் வளர்ச்சியையும், ஐந்தாம் இயல் திருக்கழுக்குன்றத்தின் சமய வரலாற்றையும் சொல்கின்றன. இங்கு சைவம் மற்றும் வைணவத்திற்குக் கொடுக்கப்பட்ட முக்கியத்துவத்தைப் பற்றி கூறுவதோடு மட்டுமில்லாமல், இங்குள்ள கோயில் சிற்பங்கள் மற்றும் விழாக்கள் பற்றியும் கிடைக்கும் ஆதாரங்களைக் கொண்டு சிறப்பாக விவரித்துள்ளார். ஆறாம் இயல் திருக்குழுக்குன்றத்தின் சமுதாய மற்றும் பொருளாதார நிலை பற்றியும், அடுத்த இயல் திருக்குழுக்குன்றத்தில் உள்ள கோயில்களின் கட்டடக்கலை மற்றும் சிற்பங்களின் அமைதி பற்றியும் சிறப்பாக விவரிக்கிறது. திருக்கழுக்குன்றத்தின் வரலாறு, கலை ஆகியவற்றை எளிதில் புரிந்து கொள்ளும் வகையில் சொல்லியுள்ளதால் புதிதாகப் ப்டிக்கும் ஆர்வலர்கள் மற்றும் மாணவர்களுக்கு இந்நூல் நன்கு பயன்படும்.

**ரா.யமுனா ராணி,** பாண்டிச்சேரி.

நரசய்யா, **கடல்வழி வணிகம்,** பழனியப்பா பிரதர்ஸ், சென்னை, முதற்பதிப்பு 2005, விலை ரூ.225/-.

தற்கால வணிகக்கப்பல் - படைக்கப்பல்-துறைமுகங்கள் எனப் பல்வேறு நிலைகளில் பொறியாளராகப் பணியாற்றிப் பன்னாடுகளுக்கும் பயணித்துத் தனது பட்டறிவை "கடல்சார் வணிகம்" என்னும் நூலாகப் படைத்துள்ளார் ஆசிரியர் நரசய்யா.

சங்ககாலம் தொட்டு ஐரோப்பியர் காலம் வரையிலான கடல்வணிகம் முதற்பகுதியாகவும் இன்றைய துறைமுகச் செய்திகள் இரண்டாம் பகுதியாகவும் 400 பக்கங்களில் 24 தலைப்புகளில் படங்களுடன் நல்ல கட்டமைப்பில் இந்நூல் அமைந்துள்ளது.

பெரிபிளஸின் 'செங்கடல் வழிகாட்டி' (Periplus of the Erythrean Sea) நூலின் பல பத்திகள் தமிழாக்கத்தோடு தரப்பட்டுள்ளன. எரித்திரியன் என்பது சிவப்பினைக் குறிக்கும் அரபிக் கடலையும் செங்கடலுடன் சேர்ந்ததாகக் கருதி பெரிப்பிளஸ் என்ற மாலுமி இந்நூலை எழுதினார் என்று ஆசிரியர் எளிதாகச் சொல்வது போலவே தாலமி, பிளைனி, அர்த்த சாஸ்திரம், சங்க இலக்கியம், பல ஆங்கில நூற்செய்திகளையும் எளிமையாகத் தருகின்றார். தொல்லியலுக்குப் புதிதாக வருகை தரும் எவரையும் இந்நூலின் மூலம் ஈர்த்து நிலைப்படுத்துவதில் நரசய்யா முன்னிலை வகிக்கின்றார்.

தன்னார்வத்துடன் பல நூற்செய்திகளையும் திரட்டித் தரும் அவர்; நீலகண்டசாஸ்திரி, மயிலை சீனி, வேங்கடசாமி, மோதிசந்திரர், சாத்தன்குளம் இராகவன், கால்டுவெல், வின்செண்ட் ஸ்மித், வார்மிங்டன் என முன்னாள் வரலாற்று நூலாசிரியர்களின் செய்திகள் மட்டுமல்லாது இரா.நாகசாமி, எஸ்.ஆர்.ராவ், நொபொரு காரஷிமா, எ.சுப்பராயலு, ப.சண்முகம், பா.ஜெயக்குமார், இரா.கிருஷ்ணமூர்த்தி, சுரேஷ் என்று இன்னாள் வரலாற்றாசிரியர்கள் பலரின் நூற்செய்திகளையும் பல இடங்களில் சேர்த்துள்ளார். இந்நூல் எழுதப்பட்ட காலவரையிலான கடல் வணிகச் செய்திகள் தேடிச் சேர்த்துத் தொகுத்தளிக்கப்படுகின்றன . என்றால் மிகையல்ல.

**பா.செயக்குமார், சென்னை.**

ஆனந்தரங்கப்பிள்ளை, **வி-நாட்குறிப்பு-ஆங்கிரச ஆண்டு (1752-1753),** ஓர்.மா.கோபாலகிருஷ்ணன், நற்றமிழ் பதிப்பகம் எம்.55/12 எம்.ஐ.ஜி. அடுக்ககம் முதல் நிழற்சாலை, விரிவாக்கம் இந்திரா நகர், அடையாறு, சென்னை, முதற்பதிப்பு 2005, விலை ரூ.230/-.

ஐரோப்பியர் காலத்தில் ஐரோப்பிய வணிகர்களும் ஆட்சியாளர்களும் இந்திய மக்களுடன் தொடர்பு கொள்ள மொழிபெயர்பாளர்களாகப் பலர் இருந்தனர். இவர்கள் துபாஷி (இரு மொழி)கள் எனப்பட்டனர். புதுச்சேரிப் பகுதியில் பிரெஞ்சு ஆட்சியாளர்களுக்குத் துபாஷியாக விளங்கியவர் ஆனந்தரங்கப் பிள்ளை ஆவார். இவரது சிறப்பு நாள்தோறும் தினசரிக் குறிப்பு என்னும் நாட்குறிப்பு எழுதுவதாகும். அப்படி அவர் 1736 முதல் 1761 வரை எழுதிய தாள்கள் எழுத்துப் பெயர்த்தெழுதப்பட்டு பாரீசில் கீழ்த்திசைச் சுவடிப்பிரிவில் உள்ளன. இதுபோலவே அவரது தம்பி, மகன் முதலிய உறவினர்கள் எழுதிய தினசரிதைகளும் 1761 முதல் 1799 வரை அங்குள்ளன. இவை முழுதும் வெளியிடப்படவில்லை. வெளியிடப்பட்ட தமிழ்-9, ஆங்கிலம் 12 தொகுதிகளிலும் இடையிடையே பலபகுதிகள் விடுபட்டுள்ளன. இப்படி விடப்பட்டவை அறிந்த இந்நூலாசிரிய ஓர்சே.மா.கோபாலகிருஷ்ணன் முழுமையாகப் பதிப்பிக்க வேண்டும் என்ற தன்னார்வத்தில் பிரசோர்பத்தி (1751-52), ஆங்கிரச (1752-53) ஆகிய இரு ஆண்டு நாட்குறிப்புகளை வெளியிட்டுள்ளார். அவற்றில் இரண்டாவது நூல் இந்நூல்.

விடுபட்டபகுதிகள் இவரது பதிப்பில் சாய்வெழுத்தில் அச்சிடப்பட்டுள்ளன. இவரது காணிப்பின் படி 30 சதவீதப் பகுதிகள் விடுபட்டிருக்கின்றன. ஆசிரியரின் ஆர்வம் காரணமாக மூலக்காகிதச் சுவடிகளின் நகல்கள் நுண்படச்சுருள்களாகத் தற்பொழுது புதுச்சேரியில் உள்ளன.

ஆனந்தரங்கப் பிள்ளையின் நாட்குறிப்பு அரசியல் வரலாற்றிற்கு வெகுவாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. எனினும் சமூக வரலாற்றிற்கும் மொழி வரலாற்றுக்கும் இனிமேல் தான் ஆய்வாளர்கள் பெருமளவில் பயன்படுத்த வேண்டுமெனத் தெரிகிறது.

பிரெஞ்சுக்காரர்கள் துணிவியாபாரத்தில் ஈடுபட்டிருந்தனர். துணி, பிடவை என்று கல்வெட்டுகளில் உள்ளது போலவே இந்நூலிலும் குறிக்கப்படுகிறது. 'பிடவை பார்க்குற சாலை இருந்தது. இங்கு துணியின் தரத்தைப் பரிசோதித்தனர். கம்பெனிக்காரர்களுடன் நெருங்கிய சிலர் வணிகர்களை (வற்த்தகர்) பிடிக்கவில்லை என்றால் 'யிது யிளப்பம் யெடுக்கப் போகாதென்று சொல் பெகு பிடவைகளை தள்ளிவிச்சுப் போட்டு அவர்களை செனெ அலங்கோலம் பண்ணி' விடுவார்கள். துணி, 'சலவை பிடவை', 'எழுத்துப் பிடவை', 'நீலக்கூலி' (சாயப்பிடவை?)' 'சென்னபட்டனம்லம்பாகசீட்' 'காடாவாப்பித்தா', என்ற வகைகளில் இருந்துள்ளது. இவை கட்டு, சிப்பம், சகலாத்து என்ற அளவுகளில் எண்ணப்பட்டன. கும்பினி (கம்பெனி) துரைகள் வணிகர்களுக்கு கொந்திராத்து (contract) மூலம் பிடவை கட்டுகளுக்கு தேவை ஆணை (Order) கொடுத்தனர். புதுக்கும்பினீர் வர்த்தகர் வில்லியனூரில் 'முன்னூறு நிசவுக்கார குடிகளுக்கு வீடுகட்டி விச்சு வீட்டுக்கு பண்டவலம் பவ்வத்து விராகன் குடுத்து வருஷம் ஒன்னுக்கு ஒருவிழுக்காடு பிடித்துக் கொண்டனர். இப்படி வீடு, முன்பணம் கொடுத்து நெசவாளர்களிடம் துணி நெய்து பெற்று பிடவை சாலையில் கட்டுகட்டாகச் சேர்த்து ஆயிரம் கட்டு என்று கணக்கில் கப்பல்களில் துலைகளிலே (தொலைவில், பிரான்ஸ் நாடு அனுப்பி வைத்தனர்'. இப்படித் துணிவணிகம் பற்றிய செய்தி இருப்பது போல இன்னும் பல செய்திகள் உள்ளன.

மொழி அமைப்புக்கு ஆங்கில மாதங்கள் 'சானர், பிப்ரெயிரு, மார்சு, அபிரீல், மாயு, சூனி, சூலி, அகொஸ்து, செத்தேம்புறு, ஒக்தொபிறு, னொவெம்பிறு, தெசெம்புறு' என்று குறிக்கப்படுவதைச் சொல்லலாம். இப்படி 18ஆம் நூற்றாண்டு செய்திகளுக்கு நிறைவான மூல நூலாக இந்நூல் 600 பக்கங்களில் ஓராண்டு நாட்குறிப்பைத் தந்து உதவுகிறது.

**கு.சேதுராமன்,** மதுரை.

# 44. தமிழகத் தொல்லியல் கழக 15 ஆம் ஆண்டுக் கருத்தரங்கு அறிக்கை

பா. ஜெயக்குமார், செயலர்.

தமிழகத் தொல்லியல் கழகத்தின் 15 ஆம் ஆண்டுக்கருத்தரங்கம் மற்றும் ஆவணம் இதழ்-16 வெளியீட்டு விழா 2005 ஜூலை 30, 31 ஆகிய இரு நாட்கள் திருச்சிராப்பள்ளி பாரதமிகுமின் நிறுவனம் (BHEL திருவெறும்பூர்) சமுதாயக் கூடத்தில் (Community Hall) மிகச் சிறப்பாக நடைபெற்றது. பாரத மிகுமின் நிறுவனத்தின் துணையுடன் நடத்தப்பெற்ற இக்கருத்தரங்கின் உள்ளூர்ச் செயலராக திரு.(பழங்காசு) ப.சீனிவாசன் அவர்கள் கழக உறுப்பினர்கள் யாவரும் பாராட்டத்தக்க வகையில் செயல்பட்டார்.

30.7.2005 காலை 10 மணிக்கு தொடக்கவிழா கழகத் தலைவர் முனைவர் செ.இராசு அவர்கள் தலைமையில் நடைபெற்றது. திருச்சி உருமு தனலட்சுமி கல்லூரியின் செயலாளர் மோதி ஸ்ரீ.இராசகோபால் அவர்கள் முன்னிலை வகித்தார். உள்ளூர்ச் செயலர் வரவேற்புரை நல்கினார். தலைமை விருந்தினராகக் கலந்துகொண்ட பாரத மிகுமின் நிறுவனத்தின் நிர்வாக இயக்குநர் டாக்டர் வெ.கோபாலகிருஷ்ணன் அவர்கள் ஆவணம் 16 ஆவது இதழை வெளியிட்டு சிறப்புரை ஆற்றினார். முதல் இதழை திரு.க.மோகன் (தொழிலதிபர், திருச்சிராப்பள்ளி) அவர்கள் பெற்றுக் கொண்டார். தலைமை விருந்தினர் டாக்டர் வெ.கோபாலகிருஷ்ணன் அவர்கள் தனது உரையில் தமிழகத் தொல்லியல் கழகத்தின் முக்கியத்துவத்தை வெளிப்படுத்தியதோடு மேலும் பல புதிய ஆவணங்களை சேர்த்து இக்கழகம் நமது பண்பாட்டிற்கு பெருமை சேர்க்க வேண்டும் எனவும் குறிப்பிட்டார்.

வாழ்த்துரை வழங்கிய பேரா.ஏ.சுப்பராயலு அவர்கள் தமிழகத் தொல்லியல் கழகத்தின் கடந்த 15 ஆண்டுகால செயல்பாடுகள் மிகவும் திருப்தியளிப்பனவாக உள்ளன என்பதோடு இவ்வமைப்பு தொல்லியல் ஆய்வு சார்ந்த பிற நிறுவனங்களுக்குப் போட்டியாக இல்லாமல் துணையாகவே இருந்து வருகிறது என்பதையும் சுட்டிக் காட்டினார். பாரத மிகுமின் நிறுவனத்தின் கூடுதல் பொதுமேலாளர் திரு.தி.ஆனந்தன் அவர்களின் வாழ்த்துரையில் பண்பாடு குறித்த புதிய செய்திகள் மிக அரிதாகவே கிடைக்கின்ற இன்றைய சூழ்நிலையில் இக்கழகத்தின் பணி மகத்தானதாகும் எனக் குறிப்பிட்டார். தஞ்சாவூர் நாவலர் ந.மு.வேங்கடசாமி நாட்டார் திருவருள் கல்லூரியின் முதல்வர் முனைவர் கு.திருமாறன், திருச்சி உருமு தனலட்சுமி கல்லூரியின் முதல்வர் முனைவர் கே.சேகர் மற்றும் அரியலூர் அரசுக் கலைக்கல்லூரி வரலாற்றுத் துறைத் தலைவர் முனைவர் இல.தியாகராஜன் ஆகியோர் தங்களது வாழ்த்துரைகளில் தமிழகத் தொல்லியல் கழகத்தின் 15 ஆண்டுகால சாதனைகள் மற்றும் மிகச்சிறப்பாக பதிப்பிக்கப்படும் இதன் வெளியீடுகள் குறித்து விரிவாக விளக்கினர். கழகச் செயலரின் நன்றியுரையுடன் தொடக்கவிழா நிறைவுற்றது.

தொடக்க விழாவினைத் தொடர்ந்து கருத்தரங்க அமர்வுகளும் அறக்கட்டளைச் சொற்பொழிவுகளும் நடைபெற்றன.

30.7.05 அன்று பிற்பகல் 2.30 மணி முதல் 4.30 வரை "அத்யந்தகாமம்" என்ற தலைப்பில் முனைவர் இரா.கலைக்கோவன் அவர்கள் கோவிலூர் ஆதின அறக்கட்டளைச் சொற்பொழிவையும், "தமிழகத்தின் கி.பி.9ஆம் நூற்றாண்டுக்குப் பின் தமிழ் எழுத்துமுறை வளர்ச்சி" என்ற தலைப்பில் முனைவர் சு.இராசகோபால் அவர்கள் தி.நா.சுப்பிரமணியம் அறக்கட்டளைச் சொற்பொழிவையும் நிகழ்த்தினர். இந்நிகழ்வுகளுக்கு திரு.தியாக சத்தியமூர்த்தி அவர்கள் தலைமை வகித்தார்.

நாள் : 30.07.2005 நேரம் : 12.15 - 01.15

**அமர்வு - 1**

தலைவர் : **முனைவர் கு.சேதுராமன்**
பேராசிரியர், கலைவரலாற்றுத்துறை,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை.

| | **கட்டுரையாளர்** | **கட்டுரைத் தலைப்பு** |
|---|---|---|
| 1. | க. கருப்பையா | - குலோத்துங்க சோழனின் திருவாலந்துரை கல்வெட்டு காட்டும் நாகதோசம் |
| 2. | சு. இராசவேலு | - மாமல்லபுரத்தில் அண்மைக்காலக் கண்டுபிடிப்புகள் |
| 3. | செந்தி. நடராஜன் | - குரண்டி கல்வெட்டு |
| 4. | க. பன்னீர்செல்வம் | - நடுவில் நாட்டுப் பகுதியில் தேவதான ஊர் - நல்லூர் - ஓர் ஆய்வு |
| 5. | முத்து எத்திராசன் | - ஞானமலை பச்சையம்மாள் |

30.07.2005 நேரம் : 04.30 - 05.30

**அமர்வு - 2**

தலைவர் : **திரு. தியாக. சத்தியமூர்த்தி**
தொல்லியல் கண்காணிப்பாளர்,
இந்தியத் தொல்லியல் அளவீட்டுத்துறை, சென்னை வட்டம்.

| | **கட்டுரையாளர்** | **கட்டுரைத் தலைப்பு** |
|---|---|---|
| 6. | வீ. செல்வக்குமார் | - கேரள மாநிலம் பட்டணத்தில் சோதனை அகழாய்வு |
| 7. | தியாக. சத்தியமூர்த்தி | - மாமல்லபுரம் கடற்கரைப் பகுதியில் சுனாமிக்குப் பிந்தைய தொல்லியல் கண்டுபிடிப்புகள் |
| 8. | மு. பிரபாகரன் | - செங்குளம் அனுமன் கோயில் கல்வெட்டு |

31.7.2005 நேரம் : 03.00 - 04.00

**அமர்வு - 3**

**தலைவர் : முனைவர் பு. சந்திரசேகரன்**
பேராசிரியர், வரலாற்றுத்துறை,
ராஜுக்கள் கல்லூரி, இராஜபாளையம்.

| | கட்டுரையாளர் | கட்டுரைத் தலைப்பு |
|---|---|---|
| 9. | செ. கோவிந்தராஜ் | - அறந்தாங்கியில் ஒரு பிற்காலச் சோழர் கற்றளி |
| 10. | இல. தியாகராஜன் | - புதிய கல்வெட்டுக்களும் செய்திகளும் |
| 11. | வெ. பழனிச்சாமி | - போடிநாயக்கனூர் வட்டாரத்தில் புதிய தொல்லியல் கண்டுபிடிப்புகள் |
| 12. | பா. சாம்சத்தியராஜ் | - தேவரடியாரின் கல்லறைக் கல்வெட்டு |
| 13. | முத்து. எத்திராஜன் | - புதுப்பாளையம் கோயில் நஞ்சை அளவுகோல் |
| 14. | கரு. இராசேந்திரன் | - நம்மாழ்வார் யார்? பெரியாழ்வார் யார்? |

கழகத்தின் செயற்குழு கூட்டம் 30.07.2005 மாலை 5.30 மணி முதல் 7.00 வரை நடைபெற்றது. 31.07.2005 காலை பேராளர்கள் யாவரும் திருச்சிக்கு அருகாமையிலுள்ள வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த சில இடங்களுக்குச் சென்றுவர பாரத மிகுமின் நிறுவனம் பேருந்து வசதி செய்து கொடுத்திருந்தது. உறுப்பினர்கள் சுற்றுலா சென்று திரும்பியவுடன் 12.00 மணி முதல் 1.30 வரை கழகப் பொதுக்குழுக் கூட்டம் நடைபெற்றது. பிற்பகல் மூன்றாவது கருத்தரங்க அமர்வு முடிந்தவுடன் நிறைவாக தமிழகத் தொல்லியல் கழகத்தின் இணைச் செயலர் பேரா.இல.தியாகராஜன் அவர்களின் நன்றியுரையுடன் 15ஆம் ஆண்டுக் கருத்தரங்கு மகிழ்வுடன் நிறைவுற்றது.

# கட்டுரையாளர்கள்

அதியமான், ந.
கல்வெட்டியல் – தொல்லியல் துறை
தமிழ்ப்பல்கலைக் கழகம், தஞ்சை.

அன்பரசன், இரா.
கல்வெட்டியல் – தொல்லியல் துறை
தமிழ்ப்பல்கலைக் கழகம், தஞ்சை.

ஆறுமுகசீதாராமன்
12, ராஜாராஜன் நகர்
மானோஜிப்பட்டி (தெற்கு), தஞ்சை.

இராசன், கா.
கல்வெட்டியல் – தொல்லியல் துறை
தமிழ்ப்பல்கலைக் கழகம், தஞ்சை.

இராம்ஜி, எம்.எஸ்.
கீழகொளத்தூர்.

இராசேந்திரன், கரு.
மேலப்பனையூர் (அஞ்சல்)
புதுக்கோட்டை – 622420.

இராசகோபால், சு.
கல்வெட்டாய்வாளர்
தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை
எழும்பூர், சென்னை.

இரவிச்சந்திரன், பெ.
கௌரவ விரிவுரையாளர்
அரசு கலைக்கல்லூரி
வரலாற்றுத்துறை, அரியலூர்.

இலெனின், பெ.
மத்திய அரசு தொல்லியல் துறை
புதுச்சேரி.

ஐராவதம் மகாதேவன்
பி–1, நடுமுகை அபார்ட்மென்ஸ்
பிருந்தாவனம் நகர் விரிவு,
ஆதம்பாக்கம், சென்னை.

கலைக்கோவன், இரா.
இராசமாணிக்கனார்
வரலாற்றாய்வு மையம்
48, புத்தூர் நெடுஞ்சாலை
திருச்சிராப்பள்ளி.

கண்ணன், சு.
விரிவுரையாளர், வரலாற்றுத் துறை
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.

குமார், கி.
இ.103, பொதுப்பணித்துறை
குடியிருப்பு, சைதாப்பேட்டை
சென்னை – 600 015.

கோவிந்தராஜ், செ.
காப்பாட்சியர், அரசு அருங்காட்சியகம்
புதுக்கோட்டை.

சந்திரசேகரன், பு.
இணைப்பேராசிரியர்
இராஜுக்கள் கல்லூரி
இராஜபாளையம்.

சாம் சத்தியராஜ், பா.
காப்பாட்சியர்
அரசு அருங்காட்சியகம், மதுரை.

சிவா, எஸ்.
ஆய்வாளர், தமிழ்த்துறை
கேரளப் பல்கலைக்கழகம்
திருவனந்தபுரம்.

சுப்பராயலு, எ.
கல்வெட்டியல் – தொல்லியல் துறை
தமிழ்ப்பல்கலைக்கழகம், தஞ்சை.

செல்வக்குமார், சி.
கல்வெட்டியல் – தொல்லியல் துறை
தமிழ்ப்பல்கலைக் கழகம், தஞ்சை.

செவ்வேள், வே.
அரியலூர்.

சேதுராமன், கு.
கலை வரலாற்றுத்துறை
மதுரைக் காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை – 625 021.

தவசிமுத்து, த.த.
ஆறுமுகநேரி.

தனபால், இரா.
அரியலூர்.

தியாகராசன், இல.
வரலாற்றுத்துறை
அரசுக்கலைக் கல்லூரி
அரியலூர் – 621713.

துளசேந்திரன், ஆ.
கல்வெட்டியல் – தொல்லியல் துறை
தமிழ்ப்பல்கலைக் கழகம், தஞ்சை.

திருநங்கை, வே.
எம்.பில். மாணவி
கலை வரலாற்றுத்துறை
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்.

திருமூர்த்தி, கோ.
மத்திய அரசு தொல்லியல் துறை
செயிண்ட் ஜார்ஜ் கோட்டை, சென்னை.

பன்னீர்செல்வம், க.
மத்திய தொல்லியல் துறை
கல்வெட்டுப் பிரிவு, மைசூர் – 570 005.

பாலச்சந்திரன், ஆர்.
272, பி–4, எஸ்.என்.புரம் ரோடு
சரசுவதி நகர், திருத்தங்கல் – 626 130.

பரமசிவம், அரு.
இடைப்பாடி.

பிரபாகரன், மு.
சத்திரமனை, வேலூர்.

வேங்கடேசன், ந.
11, கிழக்கு சந்நிதி வீதி
வில்லியனூர் – 605 110.

வெங்கடேசன், ப.
3.178 கம்பன் தெரு
பெல்லியப்பா நகர்
வாலாஜா பேட்டை – 632 513.

மங்கையர்க்கரசி, வீ.இரா.
ஐ.பி.எம்.எஸ். பில்டிங்ஸ்
கே.கே.சாலை, விழுப்புரம்.

முத்து எத்திராசன்
128, காமராசர் குடியிருப்பு
தெற்கு உசுமான் சாலை
தியாகராய நகர், சென்னை – 600 017.

வீரராகவன், சி.
ஐ.பி.எம்.எஸ். பில்டிங்ஸ்
கே.கே. சாலை, விழுப்புரம்.

யதீஸ்குமார், வி.பி.
கல்வெட்டியல் – தொல்லியல் துறை
தமிழ்ப்பல்கலைக் கழகம், தஞ்சை.

ராஜவேலு, சு.
துணை கல்வெட்டு கண்காணிப்பாளர்
அலுவலகம், மத்திய தொல்லியல் துறை
சென்னை – 600 009.

ராஜேஷ், ம.
கல்வெட்டியல் – தொல்லியல் துறை
தமிழ்ப்பல்கலைக் கழகம், தஞ்சாவூர்.

ஸ்ரீதர், தி.ஸ்ரீ., இ.ஆ.ப.
சிறப்பு ஆணையர்
தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை
ஆல்ஸ் சாலை, எழும்பூர், சென்னை.

## TAMIL NADU ARCHAEOLOGICAL SOCIETY, THANJAVUR

### RECEIPTS AND PAYMENTS ACCOUNT FOR THE YEAR ENDED 31.03.2006

| | | | |
|---|---|---|---|
| Opening Balance : | | Printing | 60,750.00 |
| Cash in hand | 319.55 | Xerox & Stationary | 152.00 |
| Cash at Bank | | Audit Fees | 850.00 |
| Indian Bank, | 8,492.00 | | |
| SBI, TNJ | 15,984.99 | Salary | 1,500.00 |
| Sale of Books | 4,815.00 | Honorarium | 4,000.00 |
| Membership Fees | 13,600.00 | Postage & Courier | 2,732.00 |
| Interest | 14,812.96 | Freight Charges | 5,578.00 |
| Donation | 9,000.00 | Bank Charges | 5,460.00 |
| Creditors | 32,000.00 | Travelling Expenses | 181.50 |
| | | **Closing Balance** | |
| | | SBI, Thanjavur | 12,411.95 |
| | | Indian Bank, TNJ | 5,001.00 |
| | | Cash in Hand | 408.05 |
| | **99,024.50** | | **99,024.50** |

(Sd.) V.Ramasamy
Chartered Account
951, East Main St., Thanjavur - 1

## TAMIL NADU ARCHAEOLOGICAL SOCIETY, THANJAVUR

### INCOME AND EXPENDITURE ACCOUNT FOR THE YEAR ENDED 31.03.2006

| | | | |
|---|---|---|---|
| To Printing Charges | 60,750.00 | By Sales of Books | 4,815.00 |
| To Xerox & Stationary | 152.00 | By Membership Fees | 13,600.00 |
| To Audit Fees | 850.00 | By Interest | 14,812.36 |
| To Salary | 1,500.00 | By Donation | 9,000.00 |
| To Honorarium | 4,000.00 | By Excess of Expenditure Over Income | 38,975.54 |
| To Postage | 2,732.00 | | |
| To Freight Charges | 5,578.00 | | |
| To Bank Charges | 5,460.00 | | |
| To Travelling Expenses | 181.50 | | |
| | **81,203.50** | | **81,203.50** |

### BALANCE SHEET AS ON 31.03.2006

| LIABILITIES | | ASSETS | |
|---|---|---|---|
| FUND ACCOUNT :<br>Opening Balance | 2,75,796.54 | Fixed Deposit | 2,40,000.00 |
| Less<br>Excess of Expenditure over Income | 38,975.54 | Furniture | 11,000.00 |
| | **2,36,821.00** | Cash at Bank :<br>Indian Bank, TNJ | 5,001.00 |
| Creditors | 32,000.00 | SBI, TNJ | 12,411.95 |
| | | Cash in hand | 408.55 |
| | **2,68,821.00** | | **2,68,821.00** |

(Sd.) V.Ramasamy
Chartered Account
951, East Main St., Thanjavur - 1

# AVANAM

## Annual issue of the Tamilnadu Archaeological Society

Avanam aims at bringing to lime light all kinds of primary sources, which unravel the history of Tamilnadu. It carries reports on the hitherto unpublished epigraphs, copper plate records, palm leaf manuscripts, paper documents, archaeological artifacts, coins, art objects and articles. It is a treasure house of original resources to be adorned in the library of each and every one, who is interested in the history of Tamilnadu.

**Avanam** 1 – 2 not available
**Avanam** 3 – 14 Rs. 100/- (per copy)
**Avanam** 15 – 17 Rs. 150/- (per copy)

Those who wish to buy the back volumes of the **Avanam** may send a D.D. or Cheque for Rs.100/- (per copy), drawn in favour of the **Tamilnadu Archaeological Society**, to the Treasurer, C/o Department of Epigraphy and Archaeology, Tamil University, Thanjavur - 613 005. Cheques should be sent with an additional amount of Rs.25/- to meet the Bank commission.

Those who wish to become life members may send Rs.1000/- to the Treasurer.

Those who want to get their newly published books reviewed in the **Avanam** should send three copies of the book to be reviewed, along with a sum of Rs.50/- for postal expenditure, to the Secretary.

Noburu Karashima, **Varalarruppokkil Thennagacchamugam**, Rs.100/-

Address to be contacted

Secretary / Treasurer
Tamil Nadu Archaeological Society,
C/o. Department of Epigraphy and Archaeology,
Tamil University, Thanjavur - 613 005.

# ஆவணம்

## தமிழகத் தொல்லியல் கழகத்தின் ஆண்டு இதழ்

**ஆவணம்** தமிழக வரலாற்றை வளப்படுத்தும் எல்லா அடிப்படைச் சான்றுகளையும் வெளியிடும் நோக்கம் கொண்டது. இதுவரை வெளியிடப்படாத கல்வெட்டுகள், செப்பேடுகள், ஓலைச்சுவடிகள், காகித ஆவணங்கள், தொல்பொருள்கள், காசுகள், கலைப்பொருள்கள் ஆகியவற்றைப் பற்றிய செய்திகளையும், கட்டுரைகளையும், ஏந்தி வருகிறது. இது தமிழக வரலாற்றில் ஈடுபாடுடைய யாவருடைய நூலகங்களுக்கும் இன்றியமையாத வரலாற்றுக் கருவூலம்.

| | |
|---|---|
| ஆவணம் 1 - 2 | இருப்பு இல்லை |
| ஆவணம் 3 - 14 | ரூ.100/- (இதழ் ஒன்றுக்கு) |
| ஆவணம் 15 - 17 | ரூ.150/- (இதழ் ஒன்றுக்கு) |

நொபொரு கராஷிமா, ***வரலாற்றுப்போக்கில் தென்னகச் சமூகம்*** - ரூ.100/-

தமிழகத் தொல்லியல் கழக இதழ்களைப் பெற விழைவோர், சரியான தொகையை வரைவோலை, காசோலை அல்லது பணவிடை மூலம் பொருளாளர் முகவரிக்கு அனுப்ப வேண்டும்.

கழகத்தின் வாழ்நாள் உறுப்பினர் கட்டணம் ரூ.1000/-

நிறுவனங்களுக்கு உறுப்பினர் கட்டணம் ரூ.2000/-

புதிய வெளியீடுகள் பகுதியில் நூல்களைச் சேர்க்க விரும்புவோர் ஒவ்வொரு நூலுக்கும் மூன்று படிகளையும், அஞ்சல் செலவுக்கு ரூ.50/-ம் செயலாளருக்கு அனுப்பி வைக்க வேண்டும்.

வரைவோலை, காசோலை, பணவிடைகள் தமிழகத் தொல்லியல் கழகம் என்ற பெயரில் இருத்தல் வேண்டும். காசோலையாக இருந்தால் கூடவே வங்கிப் பிடித்தம் ரூ.25/-ஐச் சேர்த்து அனுப்ப வேண்டும்.

**முகவரி**
செயலர்/பொருளாளர்
தமிழகத் தொல்லியல் கழகம்
(மே/பா) கல்வெட்டியல் மற்றும் தொல்லியல் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர் 613 005.

Contact
Secretary/Treasurer
Tamil Nadu Archaeological Society
C/o Department of Epigraphy and Archaeology
Tamil University, Thanjavur - 613 005.